# முதல் வகுப்பு ஆசிரியர்








காந்தி வித்தியாலயம்

ஆதாரக் கல்வி வாசக வரிசை

# முதல் வகுப்பு ஆசிரியர்

கே. அரங்கநாதன்
மு. அருணாசலம்




காந்தி வித்தியாலயம்
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

இந்திய நாட்டில் ஆதிக்கம் வகித்துவந்த அன்னிய அரசாங்கத்தார் இங்கு ஏற்படுத்தியிருந்த கல்வி முறையை அடியோடு நீக்கி, முழுமையும் இந்தியப் பண்புக்கு ஒத்த தான ஒரு புதுமுறைக் கல்வியை நம் நாட்டில் நிலைநாட்டக் காந்தியடிகள் எண்ணினுர். அவர் வெளியிட்ட கருத்துக் களை யொட்டி வகுக்கப் பெற்ற கல்வி முறையை ஆதாரக் கல்வி என்று சொல்லுகிருேம். இதன் தனிச் சிறப்பு, இது பணம் படைத்தவருக் கென்று இல்லாமல், பாமர மக் கள் அனைவருக்கும் உரிய சர்வஜனக்கல்வி என்பதாகும். மற்றோர் அம்சம், இப்புதுக் கல்வியானது, வாழ்க்கை மூலம் வரவேண்டிய கல்வி, வாழ்க்கைக்கே ஆதாரமான கல்வி, வாழ்க்கைக்கான கல்வி என்பது.

ஆதாரக் கல்வியானது, மனிதனுக்கு ஒருமித்த வளர்ச்சி தருவதற்கான திட்டம் ஆதலால், மனிதனை இது மேம்படுத் தும் கல்வி.

சுதந்திர இந்தியாவில் அனேக ராஜ்யங்கள் ஆதாரக் கல்வி முறையை நடத்தத் திட்டமிட்டிருக்கின்றன. சென்னை அரசாங்கத்தார் ஜில்லாக்கள்தோறும் ஆசிரியர் பயிற்சிச் சாலைகளையும் ஆதாரப் பாடசாலைகளையும் பெருக்கி வருகிறார்கள். ஆண்டுதோறும் ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆசிரியர்கள் ஆதாரக்கல்விப் பயிற்சி முடித்துப் பழைய ஆரம்பப் பாடசாலைகளில் வேலைக்கு அமருகிறார்கள்; புதுப் பள்ளிக்கூடங்களையும் தொடங்குகிறார்கள். எனினும், இவர் களில் பெரும்பாலோர் வேலை செய்வதற்கான திட்டமான வழி புலப்படாமல் திகைப்படைகிறார்கள்.

மேலும், பழைய முறையில் பயிற்சி பெற்று ஆசிரியர் களாயுள்ளவர்களில் சிலர், குறுகிய கால ஆதாரக் கல்விப் பயிற்சி பெற்று ஆதார வகுப்புக்களைத் தொடங்கவும் கல்வி யிலாகா ஏற்பாடு செய்திருக்கிறது. இவ்வாசிரியர்களும்

புதுக் கல்வி முறையின் தத்துவப்படி வகுப்பு நடத்த மிக்க இடர்ப்படுகிறார்கள்.

தேய்ந்த சுவட்டில் போவது எளிதல்லவா ? புதுச்சுவடு போட்டு அதில் செல்வது மிகச் சிலரால்தான் முடியும்.

ஆகவே, புதிதாக ஆதார வகுப்புத் தொடங்கும் ஆசிரியருக்குத் தக்க துணை செய்யும் நோக்கத்தோடு இச்சிறு புத்தகத்தை எழுதியிருக்கிறோம். சென்ற சில ஆண்டுகளாக ஆதாரக் கல்வித்துறையில் உழைத்த அனுபவத்தைக் கொண்டு, ஆதாரக் கல்வியின் தத்துவம், மனோதத்துவம், போதனுமுறை, வகுப்பு நிர்வாகம் முதலிய எல்லாப் பிரிவுகளிலும் முதல் வகுப்பு ஆசிரியருக்கு உதவக் கூடிய திட்டங்கள் அனைத்தையும் இங்குப் பாகுபாடு செய்து கூறியிருக்கிறோம்.

பாடத்திட்டம் என்ற பகுதியில் இங்கே தரப்பட்டுள்ள பாடவிவரங்கள், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தார் 1950ஆம் வருஷம் புதிய முறையில் திருத்தி வெளியிட்ட எட்டு வருஷப் பாடத் திட்டத்தில் கண்ட முதல் வகுப்புப் பாட விவரங்களாகும். அந்த விவரங்களை முதல் வகுப்பு ஆசிரியருக்குப் பயன்படும்படி விளக்கம் எழுதி இங்குக் கொடுத்திருக்கிறோம்.

இத்திட்டங்களையும் குறிப்புக்களையும் முடிவானவையென்றோ, பூர்த்தியானவையென்றோ, இப்படியே பின்பற்ற வேண்டிய விதிகளென்றோ கொள்ளலாகாது. இவை மாதிரியாகக் கூறப்பெற்றுள்ளனவே. இத்துறையில் உழைக்கும் உபாத்தியாயர்களுக்கு இவற்றில் திருத்தமும் மாறுதலும் தோற்றுவது இயல்பு. அவரவர் தம் அனுபவத்தையும் சூழ்நிலையையும் ஒட்டி இவற்றைப் பெருக்கிக்கொள்வதே நியாயம். தங்களுடைய கருத்துக்களை அவர்கள் தெரிவித்தால், இப்புத்தகத்தின் மறு பதிப்பை இன்னும் பயனுள்ளதாகச் செய்ய முடியும்.

•

---

# பொருளடக்கம்

# முதல் வகுப்பு ஆசிரியர்

## முன்னுரை

### கல்வியின் நோக்கம்

கல்வி யென்பது பயிற்சியும் வளர்ச்சியும். அதன் நோக்கம் பொதுவாய்க் குழந்தையின் எல்லாப் பண்புகளுக்கும் பூரண வளர்ச்சி தருவதே. இன்றைய ஜனநாயக உலகத்தில் கல்வியானது குழந்தையை உத்தமப் பிரஜையாக ஆக்கவேண்டும். அவன் வாழ்க்கையில் இன்பத்தை நிரப்பி, சேவையிலும் தியாகத்திலும் அவனைச் செலுத்த வேண்டும். உத்தம ஜனநாயகப் பண்புகளான பொறை, நேர்மை, நீதியுணர்ச்சி, இரக்கம், பணிவு முதலான பண்புகளைப் பெருக்கவேண்டும். அஞ்சாமை, துணிவு, ஆண்மை, தன்னம்பிக்கை, சுயமுயற்சி, ஆராய்ச்சி ஆகிய மனிதப் பண்புகளை வளர்க்கவேண்டும். நல்லொழுக்கமும் சீலமும் அதில் பொருந்தவேண்டும். சுருங்கச் சொன்னால் வாழ்க்கையின் பண்பும் பயனும் கல்வியால் வருவன.

### முன்னிருந்த கல்வி

பிரிட்டிஷ் இந்தியக் கல்வி முறையில் இந்த நோக்கங்கள் ஏட்டளவில் இருந்தன. ஆனால் அன்னிய மொழியில் கல்வி பயின்று வேலை தேடுவதே அக்கல்விபயின்றோரின் செய்கையாகி விட்டபடியால், இந்த நோக்கங்கள் நடைமுறையில் இடம்பெறவில்லை. அக்கல்வி வாழ்க்கைத் தொடர்பு அற்றிருந்தது; வாழும் முறையைக் கற்பிக்கவில்லை. சுதந்திர உணர்ச்சியை அது ஊட்டவில்லை. கூட்டுறவுச் சமூகத்தைத் தோற்றுவிக்காமல், போட்டி வாழ்க்கையைப் பெருக்கிற்று. ஆக்கத்துறையில் மக்களுக்கு எந்த லக்ஷ்யத்தையும் அது காட்டவில்லை. ஏட்டுப் படிப்புக்கு முதன்மை யளித்து உண்மையான அறிவு வளர்ச்சியைத் தடுத்துவிட்டது. குழந்தையின் இயல்பான வளர்ச்சிக்குத் துணைபுரியவில்லை. மூளையை

நிரப்ப முயன்றதே தவிர வளர்க்க முயலவில்லை. உடலையும் ஒழுக்கத்தையும் பேணவில்லை. அக்கல்விக்குப் பணச் செலவு அதிகமானபடியால் ஏழைகளுக்குக் கல்வி வசதியில்லாது போயிற்று. படியாதோர் தொகை பெருகிற்று. இதன் விளைவாய் ஏழைகள் உழைக்கப் பிறந்தவர்கள் என்ற எண்ணமும், உழைப்பே இழிவானது என்ற எண்ணமும், உண்டாயின. போட்டி காரணமாய் ஒப்புரவு நீங்கிற்று. அன்னியமொழி காரணமாய்த் தாய்மொழி வளமும் பயிற்சியும் சிந்தனைத் திறனுங்கூடக் குன்றின. படித்தவர்களிடையே, படிப்பில்லாதவனிடம் காணப்படுகிற வினைத்திட்பம், துணிவு, தன்னம்பிக்கை, சுயமுயற்சி ஆகிய பண்புகள் வெறும் ஏட்டுப் படிப்பின் பயனாய் இல்லாமற் போயின.

பழைய பாடத்திட்டத்திலுள்ள பெருங்குறை குழந்தையைப் பிரதானம் எனக் கருதாமல் பாடத்திட்டமே பிரதானம் என்று கருதுவது. வாழ்க்கை வாழக் கற்பிப்பது அப்பாடத்திட்டத்தில் இடம்பெறவில்லை. சுயேச்சைக்கும், சுயமுயற்சிக்கும் பொதுவாய் அங்கு இடந்தரவில்லை. குழந்தையின் தனிச்சிறப்பு வளர்ச்சிபெற வழியில்லை கிராமங்கள் மிகுந்த இந்தியாவில் கிராம வாழ்க்கைக்கு அது பொருத்தமாயில்லை. பரீட்சை என்ற ஒரு காரணத்தால் பையன் தன் மூளையை நிரப்பி மூளையின் ஒரு பகுதியாகிய ஞாபக சக்தியைமட்டும் கூர்மைப் படுத்திக்கொள்ளவேண்டியிருக்கிறது. சுய சிந்தனையும் விவேகமும் இதனால் வளர்ச்சி பெறுமற் போயின.

ஆதாரக்கல்வி வரலாறு

இக்குறைபாடுகளைப் போக்க முயல்வதே ஆதாரக் கல்வி. தென்னாப்பிரிக்கா டால்ஸ்டாய் விவசாயப் பண்ணையிலும், பீஹார் சம்பரான் ஜில்லாவிலும் காந்தியடிகள், பிள்ளைகளிடையே தாம் செய்த சோதனைகளால், இளம் பிள்ளைகள் பயனுள்ள தொழிலில் மிக்க மகிழ்ச்சியோடு ஈடுபடுகிறார்களென்றும், அத்தொழிலோடு இயைபுபடுத்தி அறிவுவளர்ச்சிக்கான பாடங்களை அவர்களுக்கு எளிதாய்க் கற்பிக்க முடிகிறதென்றும் அவர் கண்டார். 1937 இல்

மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிகள் பதவியேற்றபோது கல்வியில் புரட்சிகரமான மாறுதல் வேண்டுமென்றும் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதினர். சென்னையில் ஏற்பட்ட மதுவிலக்கினல் அரசிறை வருமானம் குறையும், அதனல் கல்விக்கு அரசாங்கம் செலவு செய்வது தடைப்படும் என்ற பிரசினை எழுந்தது. அதன்மேல் அவர், பாடசாலைகளில் இளம் பிள்ளைகளுக்குப் பயனுள்ள உற்பத்தித் தொழில் மூலம் கல்வி போதிக்கவேண்டும் என்றும் அத்தொழிலால் வரும் வருமானம் பாடசாலைச் செலவைச் சரிக்கட்ட வேண்டும் என்றும் புரட்சிகரமான தம் கருத்துக்களைத் தெளிவுபடுத்தினர். வர்தாவில் 1937 அக்டோபர் 23, 24 தேதிகளில் கூடிய கல்வி மகாநாடு இக்கருத்துகளை ஏற்று,

1. அரசாங்கம் இலவசமான, கட்டாயமான ஏழு (எட்டு) வருஷகால சர்வஜனக் கல்வியை அமுல் நடத்த வேண்டும்.
2. இக்கல்வி முழுமையும் தாய்மொழி மூலமே.
3. பாடசாலையின் சூழ்நிலைக்குப் பொருத்தமான பயனுள்ள ஓர் உற்பத்தித்தொழிலை நடத்தி அதனேடு எல்லாப் பாடங்களையும் இயைபுபடுத்திக்குழந்தையின் அறிவைவளர்க்கவேண்டும்.
4. இத்தொழில் மூலம் பாடசாலைக்குக் கிடைக்கும் வருவாயானது எட்டு வகுப்பு முழுமையும் நடைபெறும் பாடசாலையில் ஆசிரியர் சம்பளம் முதலான நடைமுறைச் செலவைக் காலக்கிரமத்தில் சரிகட்டிக் கொள்ளவேண்டும்.

என்ற நான்கு தீர்மானங்களையும் நிறைவேற்றியது. அடுத்து ஹரிபுராவில் கூடிய காங்கிரஸ் மகாநாடு இக்கருத்துக்களை ஒட்டிப் பாடத்திட்டம் முதலியன தயாரிப்பதற்கு டாக்டர் ஜாகிர் ஹுசேனைத் தலைவராய்க் கொண்ட ஒரு கமிட்டியை நியமித்தது. இக்கமிட்டியார் தயாரித்து மகாத்மா காந்தியிடம் சமர்ப்பித்த கல்வித்திட்டம் ஆதாரக் கல்வித் திட்டம் என வழங்கலாயிற்று.

ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் என்ற பெயருடைய அகில இந்திய ஆதாரக் கல்விச் சங்கத்தார் சேவா கிராமத்தில் ஓர் ஆதாரப் பாடசாலையையும், ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையையும் நிறுவி இத்திட்டத்தை அமுல் நடத்தினர்கள். பீஹார், ஒரிஸ்ஸா, சென்னை முதலிய மாகாணங்களிலும்

ஆதாரக்கல்வி பரவலாயிற்று. பின்னர் காங்கிரஸ் மந்திரி சபைகள் பதவியை விட்டு விலகவே, ஆதாரக் கல்வி பரவுவதும் தடைப்பட்டது. மீண்டும் 1945இல் மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டபின் ஆதாரக் கல்வி அமுலுக்கு வரலாயிற்று. சென்னை அரசாங்கம் ஆரம்பக்கல்வி சம்பந்தப் பட்ட வரையில் ஆதாரக் கல்வியைத் தன் ஆரம்பக் கல்விக் கொள்கையாக ஏற்று நடத்தி வருகிறது.

### ஆதாரக் கல்வியின் நோக்கம்

ஆதாரக் கல்வியானது ஒரு புதிய சமுதாயத்தை அமைக்கும் நோக்கமுடையது. இச்சமுதாயம் சத்தியம், அன்பு என்ற அடிப்படையில் நிர்மாணிக்கப்பெறும். இது மதபேதம் பாராட்டாது, சாதி வேற்றுமை அற்றதாயிருக்கும். இங்குப் பிறப்பினால் உயர்வு தாழ்வு இருக்காது. ஆண் பெண் உரிமையில் வேற்றுமை யிராது. எழுத்துப் படிப்புக் குள்ள போலி கௌரவம் நீங்கி உழைப்புக்குரிய நியாயமான உயர்வு ஏற்படும். போட்டியும் சுரண்டலுமுள்ள வாழ்க்கை மறைந்து கூட்டுறவு வாழ்க்கை நிலவும். அசுத்தமும் நோயும் அகன்று மக்கள் தன்னம்பிக்கையும் உடல் வலிமையும் படைத்தவர்களா யிருப்பார்கள். சமூகத்தில் அகம் புறம் என்ற இருவகைத் தூய்மையின் அழகும் விளங்கும் உண்மையான ஜனநாயக வாழ்க்கையும் மக்களின் ஆட்சியும் சுயேச்சையான சிந்தனையும் இங்கு நிலவியிருக்கும். இடத்தால் வரும் குறுகிய எண்ணம் நீங்கி உலகப் பிரஜை என்ற கருத்து வேரூன்றும். மக்களிடையே கலையுணர்ச்சியும், உயர்ந்த பண்பாடும் விளங்கும். இவை நிறைந்த மக்கள் சமுதாயத்தைச் சர்வோதய சமுதாயம் என்று சொல்லலாம்.

குழந்தையைப் பொறுத்தவரையில் ஆதாரக் கல்வி யானது ஒவ்வொரு குழந்தையினிடமுள்ள ஆற்றல்களையும் பெருக்கி அதன் ஆற்றல்கள் எந்த அளவுக்கு வளர இடமுண்டோ அந்த அளவுக்கு வளரச் செய்ய முயல்கிறது.

## 2. பாடசாலையின் பொறுப்பு

இந்தியா சுதந்திரமடைந்து சில ஆண்டுகளே ஆகி யுள்ளன. உலகெங்கும் அரசியலில் மட்டுமின்றி வேறு

எல்லாத் துறைகளிலும் பெருங் கொந்தளிப்புக்கள் ஏற்பட்டுள்ள நிலையில் நாம் சுதந்திரமடைந்தோம். நம் சுதந்திர வாழ்வு அமைதியாகத் தொடங்காமல் கொந்தளிப்போடு தொடங்குகிறது. உணவுப் பஞ்சம், லஞ்சம், கள்ள வியாபாரம், துணிப்பஞ்சம், பலவகை அரசியல் நெருக்கடிகள் முதலான கேடுகள் நம்மைச் சூழ்ந்திருக்கின்றன இக்கேடுகளுக்குப் பொறுப்பும் இவற்றை நீக்கும் பொறுப்பும் அரசாங்கத்துக்கு மட்டுமன்றிச் சமூகத்துக்கும், சமூகத்தின் அங்கத்தினரான தனி மனிதருக்கும் உரியவை. இன்றைய தலைமுறையில் இக்கேடுகள் மறையாவிட்டாலும், எதிர்காலத்திலாவது இவை மறைந்து மேற்கூறிய சர்வோதய சமுதாயம் உதிக்கவேண்டும். இன்றைய பிள்ளைகளே எதிர்கால மக்கட் சமூகம் ஆதலால், இப்பிள்ளைகளுக்குக் கல்வி பயிற்றி இவர்களை மனிதர்களாக்கும் கடமையுடைய பாடசாலைகளின் பொறுப்பு மிகவும் பெரியது.

பாடசாலையின் பங்கு

எல்லோரும் நினைப்பதுபோல் கல்வி போதனை எளிதான காரியமன்று. பாடச் செய்திகளைத் திரட்டிப் பிள்ளைகள் மூளையில் திணிப்பது மாத்திரம் போதாது. ஆசிரியர் தம் கட்டளைப்படி பிள்ளைகள் நடக்குமாறு பழக்குவது மட்டும்கல்வியாகாது. பாடத்தைச்செவ்வையாகப் போதித்து விட்டால் பாடசாலையின் வேலை பூர்த்தியடைந்து விட்டது என்று எண்ணுவது சரியன்று. எந்தத் திட்டமும் தானுக வேலை செய்யாது. கல்வித் திட்டத்தின் வெற்றியானது பாடசாலையின் சூழ்நிலை, போதனையைப் பிள்ளைகள் ஏற்கும் விதம், பாடத்தின் தேவை, ஆசிரியரின் தன்மை ஆகிய அனைத்தையும் பொறுத்திருக்கிறது.

முதல் வகுப்புக் குழந்தைகள் பச்சிளங் குழந்தைகள். இவர்களின் கல்விப் பயிற்சி மிக்க கருத்தோடு கவனிக்க வேண்டிய காரியம். முதிர்ந்த மனித வாழ்க்கைக்கே இப் பயிற்சி அடிப்படை. குழந்தையின் பண்புகளை ஒருமித்து வளரச்செய்தல், முறையான பழக்க வழக்கங்களை உருவாக்குதல், கையும் கருத்தும் ஒன்றச் செய்து வினைத்திறனை

வளர்த்தல், நல்லவற்றிலே பற்று உண்டாக்குதல், சீர்தூக்கி உணரும் மனப்போக்கை அபிவிருத்தி செய்தல் ஆகிய இவைகளே இப்பருவக் கல்வியின் வேலை. செயல்திறமையோடு செம்மையான மனப்போக்கையும் ஒத்து வளர்ப்பதே முதன்மையானது.

1. குழந்தையின் தனி வளர்ச்சிக்கும், சமூக வளர்ச்சிக்கும் பொருத்தமான சிறந்த சூழ்நிலையை அமைத்தல். 2. இந்த நிலையில் குழந்தையின் உடல், உள்ளம் உயிர் ஆகிய மூன்றின் பண்புகளும் ஆரோக்கியமான பூரண வளர்ச்சி பெறத் தூண்டுதல். 3. பிள்ளைகள் பயனுள்ள நல்வாழ்வு நடத்தத் தேவையான நற்பழக்கம், வினைத்திறன், அறிவு, பற்று, மனப்போக்கு ஆகியவற்றைப் பெற வசதியளித்தல். 4 ஒழுக்கம், முயற்சி, தேர்ச்சி ஆகியவற்றில் முன்மாதிரியான நல்ல தரத்தை ஏற்படுத்துதல்—இவைகளே பாடசாலை நிறைவேற்றவேண்டிய பொறுப்பு.

ஆசிரியர் பங்கு

பொதுவாக மேற்குறிப்பிட்ட பாடசாலைகளின் பொறுப்புக்களை நிறைவேற்றுபவர் ஆசிரியர், பெற்றோருக்கு அடுத்தபடி இளம் பிள்ளைகளின் கண்கண்ட தெய்வம் ஆசிரியரே. அவருடைய பேச்சு, நடத்தை ஆகிய இரண்டும் பிள்ளைகளிடம் அப்படியே பதியும். ஆதலால் இதை அவர் உணர்ந்து மிக்க விழிப்போடு தம்மை எந்நேரமும் திருத்தமான நிலையில் வைத்திருக்கவேண்டும். பிள்ளைகளின் மனோதத்துவத்தை நன்றாய் உணர்ந்து அவர்களுடைய உடல், உள்ளத் தேவைகளுக்கு ஏற்ற பயிற்சி தரவேண்டும். ஆதாரப் பாடசாலை வாழ்க்கையில் ஆசிரியரின் பங்கு, பொறுப்புணர்ச்சி, மரியாதை, சகோதரபாவம், தைரியம், பொறுமை ஆகிய பண்புகளை ஒவ்வொரு குழந்தையிடமும் விளக்கம் பெறச் செய்வதாகும். கிராமத்திலுள்ள ஏழைப் பிள்ளைகளின் வீட்டு வாழ்க்கையில் துப்புரவு குறைவு, அச்சம் அதிகம். குழந்தைகளை அடித்தும் அதட்டியும் அச்சுறுத்தி வளர்த்தல் சாமானியமாய் உள்ளது. இந்த நிலையை மாற்றி, குழந்தையுள்ளத்தின் போக்கையுணர்ந்து,

அழகும் ஆரோக்கியமும், துணிவும் சுதந்திரமும் நிறையும் படி பாடசாலையில் பிள்ளைகளை வளர்க்கவேண்டும். இந்த எண்ணத்தோடு வகுப்பு வாழ்க்கையையும், வேலைமுறையை யும் அவர் அமைத்துக் கொள்ளவேண்டும்.

ஆசிரியர் தகுதி

அ. தனி மனிதர் என்ற முறையில் : மிகவும் துப்புர வான பழக்கவழக்கம், ஆரோக்கியமும் வலிமையும் பொருந் திய உடல், பிள்ளைகளுடன் நன்றாய்க் கலந்து உழைக்கும் தன்மை, செம்மையான உள்ளம், நகைச்சுவையுணர்ச்சி, படிப்பு சித்திரம் இசை இவற்றில் ஆசை, இனிய குரல், கவர்ச்சிகரமான தோற்றம், மாணக்கர் பின்பற்றத் தக்க எண்ணம் பேச்சு வாழ்க்கை-இவை உடையவராய் இருத் தல் வேண்டும். சிறப்பாக ஆசிரியருடைய தமிழ்ப் பேச்சும், உச்சரிப்பும் மிகவும் திருத்தமாயும் ஓரளவு கொச்சைப் பிர யோகம் நீங்கியும் இருத்தல்வேண்டும். ஆசிரியரிடம் சொல் வளம் நிரம்பி யிருக்கவேண்டும்.

ஆ. சமூகத்தில் அங்கம் என்ற முறையில்: பிறர் உள்ளம் கவரத்தக்க முறையில் குணச் சிறப்பு அல்லது நடத்தை, பிறருடன் ஒத்துழைத்துக் காரியத்தை முடிக்கும் ஆற்றல், தலைமை தாங்கும் தகுதி, பின்பற்றிச் செல்லும் பணிவு, குழந்தைகளுடன் பழகுவதில் இன்பம். நாகரிகமாய்ப் பழ கும் இயல்பு, துன்பத்தைக் கண்டு பரிவு, சாதிவேற்றுமை பாராட்டாத பண்பு, மத ஒற்றுமையை வளர்க்கும் முயற்சி, ஜனநாயக வாழ்க்கையில் ஆசை, நகரவாழ்க்கையில் மயங் காமல் கிராம வாழ்க்கையில் நம்பிக்கை—ஆகிய இவை உடையவராய் இருத்தல் வேண்டும்.

இ. ஆசிரியர் என்ற முறையில் : ஆசிரியத்தொழிலுக்கு வேண்டிய மனத்திடம், சோர்வின்மை, சீலம், ஒழுக்கம், குழந்தையுள்ளம் பற்றிய அறிவு, குழந்தையுடன் பழகுவதில் இன்பம், கற்பிக்கும் திறமை, சிக்கனம், கல்விக்கான உபகர ணம் அமைக்கும் ஆற்றல், வேறு வழியில் வரும் பொருள் வேண்டாமென்ற எண்ணம், ஆக்க வேலையில் நாட்டம், யாரிடத்தும் பதவியைக் கண்டு அஞ்சாமை, ஆசிரியத்

தொழிலின் பெரும் லக்ஷயங்கள் கற்றலும் கற்பித்தலும், சேவையும் தியாகமும் என்ற உணர்ச்சி—இவை உடையவராய் இருத்தல் வேண்டும்.

மிகுந்த திறமையும், நிரம்பிய கல்வியும் உடைய ஆசிரியரே ஆரம்ப வகுப்புக்களில் இருக்கவேண்டும் என்பது கல்வி நிபுணர் அனைவரும் ஒப்புக்கொள்ளும் உண்மை.

## பெற்றோர் பங்கு

பெற்றோரும் பிறரும் இளம்பிள்ளையின் வாழ்க்கையை உருவாக்கும் பொறுப்புடைய ஆசிரியரைக் கௌரவிக்க வேண்டும். குழந்தையின் கல்வி வளர்ச்சிக்கான பொறுப்பு ஆசிரியரிடம் இருப்பதால், பாடசாலையில் என்ன முறையில் குழந்தைகளை அவர் பழக்குகிறாரோ அதற்கு ஒத்திருக்கும் முறையில் பெற்றோர் குழந்தையின் வீட்டு வாழ்க்கையை அமைக்கவேண்டும். அதுபோல, பாடசாலை நேரம் போக மற்ற நேரத்தில் குழந்தையின் வாழ்க்கை எப்படியிருக்கிறதென்பதை ஆசிரியர் நன்றாய் உணர்ந்திருக்கவேண்டும். வீட்டிலுள்ள பழக்க வழக்கங்கள், மனப்போக்கு இவற்றைப் புரிந்துகொள்வதில் அவர் எப்போதும் சிரத்தை காட்டவேண்டும் குடும்ப வாழ்க்கையைப் பழிக்கும் விதமாக அவருடைய பேச்சு இருத்தலாகாது. இதனால் ஒரு சமயம் குழந்தையினிடம் எதிர்ப்பு மனப்பான்மை உண்டாகும்; அல்லது பெற்றோரை எண்ணித் தான் வெட்கமடைய நேரலாம். இந்த இரண்டும் நல்லனவல்ல. குடும்ப வாழ்க்கையில் திருத்தம் ஏற்படுத்த எண்ணுகிற ஆசிரியர் பெற்றோரைப் பாடசாலைக்கு அடிக்கடி வரச் செய்து அவர் பாடசாலை வாழ்க்கையைக் கவனிப்பது மூலமாகவும், அவரோடு தாம் பேசுவது மூலமாகவும் நயமாக அவருடைய மனத்தைத் திருத்தவேண்டும்.

முதல் வகுப்புப் பிள்ளையின் பாடசாலை வாழ்க்கையை வீட்டுச் சூழ்நிலை பெரிதும் பாதிக்கிறது. குழந்தையினுடைய உடல் நலம், உளநலம் இரண்டையும் தாய்தான் பெரிதும் பேணுகிறாள். தாய் தகப்பன் வாழ்க்கை முழுவ

தும் இன்பமாய் இருக்கிறதென்று சொல்லமுடியாது. இது சிறுபிள்ளையின் வகுப்பு வாழ்க்கையில் வரவேண்டிய இன்பத்தை ஓரளவு கெடுக்கிறது. இதைக் குறைக்கும்பொருட்டு முதல்வகுப்பு ஆசிரியர் தாய்மாரோடு அடிக்கடிப் பேசிப் பழகுவது அவசியம். மேலும் இவ் வகுப்புப் பிள்ளைகளிடம் சாதாரணமாய்க் காணப்படுகிற குறைபாடுகளான தூக்கம், சோர்வு, துப்புரவின்மை, தாமதமாக வகுப்புக்கு வருதல், சச்சரவு முதலியவற்றைத் தாய்மாருடைய பழக்கத்தால் அவர் எளிதாக மாற்றிவிடலாம்.

## 3. குழந்தையும் சுற்றுப்புறமும்

### குழந்தை இயல்பு

முதல் வகுப்புப் பிள்ளை வயதுவந்த மனிதனல்ல. அவன் உடல் துருதுரு வென்று எந்நேரமும் ஏதேனும் செய்ய விரும்புகின்றது. உள்ளமும் ஏதேனும் கிளர்ச்சியையும் புதுமையையும் தேடி எந்நேரமும் பரபரப்பாயிருக்கிறது. புதியது எதையும் ஆராயும் துடிப்பு அதனிடம் அதிகம். ஆகவே குழந்தையின் வளர்ச்சியிலும், கல்விப் பயிற்சியிலும், பாடசாலை வாழ்க்கை முறையிலும் இத்தனைக்கும் இடம் கொடுக்கவேண்டும். குழந்தையின் அறிவு வளர்ச்சியில் முதல்படி விளையாட்டாகவே திட்டமில்லாமல் கற்றல். இரண்டாவது பிறர்செய்வதைப் பார்த்துப் பின்பற்றிப் பழகிக் கற்றல். மூன்றாவது பிறர் சொல்லைக் கேட்டுக் கற்றல். தானாகவிளையாடத்தான் குழந்தை ஆசைப்படுகிறது. சிலகாலம் சென்றபின்தான் கூட்டுவிளையாட்டில் அது ஈடுபடமுடியும். இவ்விருவகை விளையாட்டிலும் குழந்தை விரிவான ஒரு கற்பனையுலகைப் படைத்துக்கொள்கிறது. நமக்குத்தான் அது கற்பனையே தவிர, குழந்தைக்கு அத்தனையும் வாஸ்தவமான உலகம். மேலும், மந்தபுத்தியுடைய பிள்ளைகளும், தீவிரபுத்தியுடைய பிள்ளைகளும், சுறுசுறுப்பான பிள்ளைகளும், சோர்வு நிறைந்த பிள்ளைகளும் ஒரே வகுப்பில் இருப்பது இயல்பு. இவர்கள் தரங்களில் உள்ள வேறுபாட்டை ஆசிரியர் உணரவேண்டும். ஆனால் பள்ளிக்

கூட வாழ்க்கையில் இன்பமும், ஓயாத சுறுசுறுப்பும் பொது வாய் எல்லாப் பிள்ளைகளிடமும் இருந்தே தீரும். இவை யில்லையானல் குழந்தையின் ஆரோக்கியத்தில் ஏதோ கெடுதி என்பதாக ஆசிரியர் கருதவேண்டும்.

வீட்டு வாழ்க்கை

நம் கல்வி, வாழ்க்கைக்கான கல்வியாதலால் வீட்டு வாழ்க்கையை ஆசிரியர் பூரணமாக அறிந்திருக்கவேண்டும். இந்தக் குழந்தை இன்று இப்படியிருக்கிருன் என்ருல் இதற் குப் பொறுப்பு இவனுடைய பிறவி அல்லது இயற்கையான தன்மை, வீட்டுச் சூழ்நிலே, அங்கு ஏற்பட்ட பயிற்சி ஆகிய மூன்றுக்கும் உரியது. ஒழுக்கம், பழக்கம், உலகத்தைப் பற்றிய எண்ணம் ஆகியவை வீட்டிலேயே அவனுக்குப் படிந்துவிடுகின்றன. செல்வர் வீட்டுப்பிள்ளை பிறரை அதட்டும் சுபாவத்தோடு பாடசாலேக்கு வருகிருன். கூலி வேலேசெய்பவர் வீட்டுப்பிள்ளை காரணம் இல்லாமலே பணிந்து நிற்கும் சுபாவத்தோடு பள்ளிக்கூடத்துக்கு வருகி ருன். இந்த இரு பிள்ளைகளுடைய தனித் தனியான வீட்டு வாழ்க்கையை ஆசிரியர் உணர்ந்திருந்தால்தான் முதல் பிள்ளையினிடத்து பணிவுமனப்பான்மையும், இரண்டாவது பிள்ளையினிடத்தில் சுதந்திர மனப்பான்மையையும் உண் டாக்கி, இருவரும் ஒத்த உரிமையுடைய சகோதரப் பிரஜை களாக வாழும் தகுதியைத் தாம் அளிக்கவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு வரமுடியும். வீட்டில் கொடுக்கிற செல்லம், கண்டிப்பு, சச்சரவு முதலியவற்றை ஆசிரியர் அறிந்தால்தான் இவற்றைச் சமாளித்து மாணுக்கர் மனத் தில் சமநிலேயான தைரியமும் தன்னம்பிக்கையும் உண்டு பண்ணமுடியும். மேலும், பாடசாலே வாழ்க்கையும் வீட்டு வாழ்க்கையும் வெவ்வேறு அல்ல. ஒன்றில் கற்பதும் செய் வதும் மற்ருென்றிலும் பரவி அறிவை வளர்க்கவும் இன் பத்தைப் பெருக்கவும் வேண்டும். வீட்டில் சிறுபிள்ளை ஏதேனும் பொருள்கள் செய்வானுனல், அவற்றைப் பாட சாலேக்குக் கொண்டுவரச்செய்து அவன் ஊக்கத்தை அவர் பாராட்டி அவற்றில் திருத்தத்தையும் அவனுக்குக் காட்ட

வேண்டும். ஓய்வு நேரத்தைப் பயனுள்ள முறையில் பயன் படுத்த உதவுவது கல்வியின் நோக்கங்களில் ஒன்று. இந்த நோக்கமும் இங்குக் கைகூடுகிறது. ஆசிரியரின் பாராட்டு தலைப் பெற்ற பிள்ளை பாடசாலையில் கற்றதை வீட்டிலும் செய்ய முயலுவான். தானாகச் செய்வதால் அவன் வினைத் திறன் மிகவும் மேம்படும்.

சுற்றுப் புறம்

ஊர் வாழ்க்கையில் அடங்கியன யாவும் குழந்தையின் கல்வியைப் பாதிக்கின்றன. கோயில், ஆற்றங்கரை, சந்தை, திருவிழா, ரயில் பிரயாணம், சினிமா, சுவரொட்டி விளம் பரம் முதலியன இங்குக் குறிப்பிடத் தக்கவை. சிறுபிள்ளை பேசுகிற பேச்சு, செய்கிற செய்கை, மனத்தில் உண்டாகிற பற்று, நட்பு முதலியவை ஊர் வாழ்க்கையைப் பொறுத் தவை. அப்படியே சித்திரம், இலக்கியம், இசை முதலியன பற்றிய கலையுணர்ச்சியையும் சுற்றுப்புற வாழ்க்கை பாதிக் கிறது. ஆகவே இந்த வாழ்க்கை பற்றிய ஞாபகம் ஆசிரியர் மனத்தில் எப்போதும் இருக்கவேண்டும்.

பிள்ளைகளை அடிக்கும் பழக்கத்தை இங்கு உதாரண மாய்க் குறிப்பிடலாம். வீட்டில் அடிபட்டுப் பழகிய பையன் கொஞ்சநாளில் அடியினால் வரவேண்டிய உணர்ச்சி யைக்கூட அறவே இழந்துவிடுகிறான். இவன் பாடசாலைக்கு வந்ததும், ஆரம்பத்தில் ஆசிரியர் அன்பினால் இவனை வசப் படுத்த முடியவில்லை. அடியும் பயன்படுவதில்லை. பிள்ளையை வழிக்குக் கொண்டுவர மனோதத்துவம் தெரிந்த ஆசிரிய ருக்கே நெடுநாள் பிடிக்கிறது.

## 4. முதல் வகுப்பின் கல்வி

ஒவ்வொரு குழந்தையும் எல்லாப் பண்புகளிலும் பூரண வளர்ச்சி பெறுவதற்கு என்று அமைந்த சிறப்பான ஸ்தாபனமே பள்ளிக்கூடம். பிள்ளைகளின் அறிவை வளர்ப் பதற்கென்று தனியான தகுதி பெற்ற சிலர் இங்கு இதே வேலையாக இருக்கின்றனர். அன்றியும் ஒவ்வொரு பிள்ளையும்

பூரண வளர்ச்சி பெறுவது நாட்டுக்கு அவசியம். நாட்டின் சிறப்பும், நாகரிகமும், அறிவின் தேர்ச்சியும் இந்த வளர்ச்சியைப் பொறுத்தவை. மேலும் குழந்தையின் வளர்ச்சிக்குப் பெரியோர் கூட்டுறவு போதாது. ஒத்த வயதுடையவர் சகவாசம் தேவை. வீட்டு வாழ்க்கையில் இந்தத் தேவை பூர்த்தியாகாது. பாடசாலை இத்தேவையை நன்றாய்ப் பூர்த்தி செய்கிறது.

பாடசாலையில் குழந்தைகளின் உடல்வளர்ச்சி, வயது, அறிவு முதிர்ச்சி ஆகியவற்றை யொட்டிக் குழந்தைகளைத் தனித்தனிப் பிரிவுகளாகப் பிரிக்கிறோம். இந்தப் பிரிவுகளே வகுப்புக்களாவன.

வகுப்பு வாழ்க்கை

முதல் வகுப்புக் குழந்தைக்கு வயது 5க்குமேல் 7க்குள் வினவு தெரியாத இளம் பருவம். ஆசிரியர் கற்பிப்பதை இப்பருவத்தில் பூரணமாய்க் கற்றுக்கொள்வதும், கற்றதைச் செய்வதும்கடினமாய்இருக்கும். ஆகவே பிற்பட்டவகுப்புக்களெல்லாவற்றையும்விட முதல்வகுப்பு ஆசிரியர் செய்யும் வேலைமிகவும்சோதனையானது. இவர் அமைக்கிறஅடிப்படையின் மேல் மற்றப் பெரிய வகுப்புக்களாகிய கட்டிடம் எழும்புகிறது. ஆகவே, முதல் வகுப்பு வேலை மிகவும் பொறுப்பானது.

முதல் வகுப்பில் 25-30 பிள்ளைகள் இருப்பார்கள். இவர்களில் கல்வி வேலை சம்பந்தப்பட்டவரையில் ஆண், பெண் வேற்றுமை பாராட்ட அவசியமில்லை. இந்த வகுப்பைச் சுய ஆட்சியுடைய தனிச் சமூகமாகப் பாவிக்க வேண்டும். பிள்ளைகள் அனைவரும் சேர்ந்த ஜன நாயக ஆட்சி இச்சமூகத்தில் நடைபெறும். இதில் சாதி, மத வேற்றுமை இராது எல்லா விஷயங்களிலும், எல்லாப் பிள்ளைகளுக்கும் சம உரிமை இருக்கும்.

இச்சமூக அமைப்பின் பிரதான நோக்கம், பொறுப்புணர்ச்சியும் நிர்வாகத் திறனும் உண்டாக்குவது. ஆசிரி

யருடைய மேற் பார்வையும் தூண்டுதலும் இருக்கும் என்பது உண்மை. ஆனல் அவர் தம் அதிகாரத்தைச் செலுத்தாமல் ஒவ்வொரு காரியத்தையும் 'நானே செய்கிறேன்' என்று ஒவ்வொரு பிள்ளையும் எண்ணும்படி நடந்து கொள்வார். இதனல் பொறுப்புணர்ச்சியோடு கூடக் கூட்டுறவும் பிள்ளைகளிடம் வருகிறது. சமயோசித புத்தி, சிக்கலைச் சமாளிக்கும் ஆற்றல் முதலிய பண்புகளும் பிறக்கின்றன. ஓரளவு ஆசிரியருடைய வேலையும் குறைகிறது. வெற்றி தோல்வியைப் பிள்ளைகள் தாங்களே அளந்து பார்ப்பதால், அவர்களை உபாத்தியாயர் கோபித்துக் கொள்ளும் சந்தர்ப்பங்கள் குறைகின்றன.

வகுப்பு நிர்வாகத்தில் ஆசிரியர் அதிகம் தலையிட்டுக் கொள்ளாதிருப்பதால் அவருக்குக் கொஞ்சம் ஓய்வு கிடைக்கும். பிள்ளைகளின் தனிப் போக்கைக் கவனிக்க இதனல் வசதியுண்டாகும். அன்றியும், கல்வி போதனை முதலியவற்றைச் சிந்திப்பதற்கு வேண்டிய அவகாசமும் ஏற்படும்.

பிள்ளைகளிடம் ஆசிரியருக்கு நம்பிக்கை வேண்டும். பிழை ஏற்படுவது சகஜம். பிழை செய்து திருந்துவதால் தான் அறிவு பிறக்கிறது. குறித்த பையன் இதைச் செய்ய மாட்டானே என்று சந்தேகப்படலாகாது. பிள்ளைகளை ஊக்கப்படுத்திவிட்டால், ஆசிரியர் எதிர்பார்க்கிற அளவுக்கு வெற்றி நிச்சயம் கிடைக்கும்.

மாணக்கர் சமூகத்தைச் சில பிரதிநிதிகள் இருந்து நடத்துவார்கள். இவர்களுக்கு மந்திரிகள் என்று பெயர். இந்த மந்திரிகளை வகுப்பு முழுமையும் கூடிய பொதுச்சபை ஓட்டுக் கொடுத்துத் தேர்ந்தெடுக்கும். பிள்ளைகள் அனைவருக்கும் வெவ்வேறு பொறுப்புக்கள் மாறி மாறி வரவேண்டும். ஆகவே பிரதி மாதமும் தேர்தல் நடப்பது அவசியம். மாதக் கடைசி தினத்தன்று அடுத்த மாதத்துக்காகத் தேர்தல் நடத்தலாம். முதல் வகுப்பில் 8 மந்திரிகள் இருப்பார்கள். அவர்கள் பெயரும் வேலையும் பின் வருமாறு:

1. வகுப்பு மந்திரி:- வகுப்பின் பொதுத் தேவைகளைக் கவனித்தல். வகுப்பின் துப்புரவு, கரும்பலகை சுத்தம், தேதி, ஆஜர் முதலான விவரம் எழுதுதல். வகுப்பின் பொருள்களைத் திருத்தமாக வைத்திருத்தல். வகுப்பு நடத்துவதற்கு வேண்டிய உபகரணங்களைக் கவனித்தல். அவசியமானபோது வகுப்பின் (சட்டாம் பிள்ளை) பொறுப்பை ஏற்றல். மற்றவகுப்புக்களோடு ஒத்துழைத்தல். வராத மற்ற மந்திரிகளுடைய வேலையைத் தான் ஏற்று நடத்தல். மாதமுடிவில் தன் வசம் ஒப்புவிக்கப் பெற்றுள்ள வகுப்புக் கருவிகள் சாமான்கள் முதலியவற்றை நல்ல முறையில், முடியுமானால் ஒழுங்காக எண்ணி, அடுத்த மாத மந்திரியிடம் ஒப்புவித்தல். வகுப்புக்கு விருந்தினர் யாரேனும் வந்தால் கவனித்தல்.

2. தக்கிளி மந்திரி :- முதல் வகுப்புப் பிள்ளைகள் இளங்குழந்தைகளானதால், அவரவர் தம் கருவியை எடுப்பதிலும் வைப்பதிலும் சிறு இடர்கள் ஏற்படும். ஆதலால் தனியாக ஒரு பிள்ளையை இந்தப் பொறுப்பேற்கச்செய்வது பயனுடையது.

தக்கிளிகளைப் பிள்ளைகளுக்கு நூற்பதற்காக எண்ணிக் கொடுப்பது, நூற்றபின் எண்ணி வாங்கி வைப்பது, தக்கிளியில் நூல் இருந்தால் வகுப்பின் பொது வீசனத்தில் சுற்றி வைத்துக்கொண்டு நூல் இல்லாமல் தினசரி கவனித்துக் கொள்வது, தக்கிளிகளைத் தக்கிளி நிலையில் பிழையில்லாமல் வைத்துப் பாதுகாப்பது.

3. அட்டை மந்திரி :- வகுப்பில் உள்ள பிள்ளைகளுக்கு அட்டைகளை எண்ணிக் கொடுப்பது, எண்ணி வாங்கிவைப்பது. மூலை ஒடியாமல், அட்டை பிளந்து போகாமல் அடுக்கி வைத்துப் பாதுகாப்பது.

சாம்பல் சம்பந்தமாய்ப் பொது ஏற்பாடு செய்வது கஷ்டம். பிள்ளைகள் தனித்தனியே டப்பிகளில் வைத்திருக்க முடியுமானால் நல்லது. சாம்பல் மந்திரி ஒருவரை நியமித்துக் கவனிக்கும்படியும் செய்யலாம்.

4. பட்டை மந்திரி :- வகுப்புக்கு வேண்டிய பட்டைகளுக்கு ஏற்பாடு செய்வது. இந்த வகுப்புப் பிள்ளைகள் சுத்தம் செய்த பஞ்சைக்கொடுத்து மேல் வகுப்புப் பிள்ளைகளிடமிருந்து தயார் செய்த பட்டைகள் வாங்கிக் கொள்ளலாம். (பட்டைகளை யெல்லாம் இதற்கென்று தயாரித்த காகிதத்தில் காற்றுப் புகாமல் அழுத்திச் சுருட்டி வைக்க வேண்டும்.) கழிவுப்பட்டைகளையும் குட்டையாய்ப்போன பட்டைகளையும் எறிந்து விடாமல் உபயோகிக்கச் செய்தல்.

5. துப்புரவு மந்திரி :- வகுப்பறை, இதனோடு சம்பந்தப்பட்ட தாழ்வாரம், நடைபாதை, விளையாடுமிடம், பிரார்த்தனையிடம் முதலிய இடங்களைத் தங்களுக்குச் சம்பந்தப்பட்டவரையில் துப்புரவாக வைத்திருத்தல். வகுப்புத் துப்புரவு செய்ய வேண்டிய நேரம். தொழில் முடிந்தவுடன் அவரவர் இடத்தைத் துப்புரவு செய்யும்படிக் கவனித்தல். தினமும் வகுப்புத் தொடங்கும் முன்பும் முடிந்த பின்பும் வகுப்பறையைத் துப்புரவு செய்தல்.

முதல் வகுப்பில் துப்புரவு மந்திரியே ஆரோக்கியம் சம்பந்தமான வேலைகளையும் கவனிப்பார். ஏழைப் பிள்ளைகளின் உடல் துப்புரவில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும். தினமும் காலையில் வகுப்புத் தொடங்கியவுடன் சுகாதார பரிசோதனை (அல்லது விசாரணை) நடைபெறும். பிள்ளைகளை வரிசையாக நிறுத்தித் துப்புரவு மந்திரி சோதனையை நடத்துவார். சில மாதிரிக் கேள்விகள் பின்வருவன.

1. **காலையில் மலஜலம் கழிக்காதவர் யார் ?**
   **குழிதோண்டி மலஜலம் கழித்தீரா ?**
   **அதில் மண்போட்டு மூடினீரா ?**

2. **பல்விளக்காதவர் யார் ?**
   **எதனுல் பல் விளக்கினீர் ?**
   **பல் ஏன் வெள்ளையாக இல்லை ?**
   **நாக்கு வழித்தீரா ? எப்படி வழித்தீர் ?**
   **வாயை நன்ருய்க் கொப்பளித்தீரா ?**
   **முகம் கழுவினீரா ? கண், காது, மூக்கு கழுவினீரா ?**

3 குளிக்காதவர் யார்?
உடம்பு தேய்த்துக் குளித்தீரா?
எதைப்போட்டுத் தேய்த்துக் குளித்தீர்?

4. ஏன் துணி அழுக்காயிருக்கிறது?
ஏன் துவைக்க வில்லை?
ஏன் சவுக்காரம் போடவில்லை?

5. தலை சீவாதவர் யார்?
தலையில் பேன், ஈர் இருக்கிறதா?
எண்ணெய் தடவினீரா?
தலை ஏன் பின்னவில்லை?

6. நெற்றிக்கு இடாதவர் யார்?
ஏன் பொட்டு வைக்கவில்லை?

7. ஏன் உம்முடைய விரல் நகம் சுத்தமாயில்லை?
ஏன் நகத்தைக் கடித்திருக்கிறீர்?
என்ன அழுக்கு? ஏன் நகம் கத்தரிக்கவில்லை?

இவற்றை ஒட்டிய இன்னும் பல கேள்விகளும் சந்தர்ப்பத்துக்கேற்றவாறு தயாரித்துக் கொள்ளலாம். பிள்ளைகள் தங்கள் உற்சாகத்தால் தாங்களே அதிகமாய்ச் சேர்த்துக் கொள்ளுவார்கள்.

இக்கேள்விகளைக் கேட்கும்போது ஆசிரியர் ஒரு பகுதியைப் பிரதான செயல் திட்டமாய்க் கொண்டு துப்புரவு, சுகாதாரம், ஆரோக்கியம் பற்றிய விளக்கமான அறிவைக் குழந்தைகளுக்குப் புகட்ட வேண்டும்.

6. தண்ணீர் மந்திரி :- முதல் வகுப்புக்கென்று தனியாக ஒரு பானையில் நல்ல தண்ணீராகப் பெரியபிள்ளைகளின் உதவியால் கொண்டு வந்து வைத்தல். நீர் குடிக்கும் குவளையையும் நீர்ப்பானையையும் துப்புரவு செய்துவைத்தல் நல்ல மணல் பரப்பி அதன்மேல் பானையை வகுப்பின் முன் வைத்தல். மண் மடக்கினால் தண்ணீர்ப் பானையை மூடி வைத்தல். நீர் சிந்தாமலும், குவளையை எச்சில் பண்ணாமலும் குடிக்கும்படி கவனித்துக் கொள்ளுதல். பானை நீர் சீக்கிரம் தீர்ந்துவிட்டால் மறுபடியும் வைக்கச் செய்தல். மாத முதலில் சாமான்களை எண்ணி வாங்குதல். கடைசியில் அடுத்த மாத மந்திரியிடம் எண்ணி ஒப்புவித்தல்.

7. விவசாய மந்திரி:- ஆசிரியர் உதவியுடன், கொடுத்த விவசாய வேலையை எல்லோரும் சரியாகச் செய்யும்படிப் பார்த்தல். பிள்ளைகள் எல்லோரும் விவசாய வேலைக்குப் போவதைக் கவனித்தல். விவசாய வேலைக்கு வேண்டிய கருவிகளை எண்ணி எடுத்தல். வேலை முடிந்தபின் கருவிகளைத் துப்புரவு செய்தல். எண்ணி ஒப்புவித்தல். காய் பறித்தல், கீரை ஆய்தல் முதலியவற்றை எல்லோரும் சேதப் படாமல் செய்யும்படிப் பார்த்துக் கொள்ளுதல். மாத முதலில் சாமான்களை எண்ணி வாங்குதல். கடைசியில் அடுத்த மாத மந்திரியிடம் எண்ணி ஒப்புவித்தல்.

8. கலா மந்திரி : தினசரி வகுப்பலங்காரம் செய்தல். விழாக்கள், கொண்டாட்டங்களுக்குரிய விசேஷ அலங்காரம் செய்தல். பிரார்த்தனை, நாட்டு வாழ்த்து, பாட்டு, கேளிக்கை, விளையாட்டு ஆகியவைகளைக் கவனித்துக் கொள்ளுதல்.

இருபத்தைந்து பிள்ளைகள் உள்ள வகுப்பில் எட்டு மந்திரிகளா என்று யாரும் மலைக்க வேண்டியதில்லை. மந்திரிகளும் சிறு குழந்தைகளே. மந்திரி என்று சொல்வதனால் வரும் கௌரவமும் பொறுப்புணர்ச்சியுமே நாம் இங்கு பிரதானமாய்க் கவனிக்கத்தக்கவை. பொறுப்புணர்ச்சியால் பிள்ளைகள் மனத்தில் ஓர் இன்பமே பிறக்கிறது. மேலும் குழந்தைக்கு அதிகப் பொறுப்பையோ, வேலையையோ கொடுக்கமுடியாது. ஆகையால் உள்ள வேலைகளைப் பிரித்துக் கொள்வது நல்லது.

குறிப்பு:— பாடசாலையில் எல்லா வகுப்புக்களுக்கும் பொதுவாக ஒரு மந்திரிசபை இருக்கும். மேலேகுறிப்பிட்ட முதல் வகுப்பு மந்திரிகள் தங்கள் தங்கள் வேலையில் பொது மந்திரி சபையோடு எல்லாவிதத்திலும் ஒத்துழைக்க வேண்டும். அந்த மந்திரி சபையில் பின்கண்ட மந்திரிகள் இருப்பார்கள்: பிரதம மந்திரி, தொழில் மந்திரி, விவசாய மந்திரி, துப்புரவு மந்திரி, ஆரோக்கிய மந்திரி, தண்ணீர் மந்திரி, கலா மந்திரி ஆகியோர் இருப்பார்கள்.

## ஒழுங்கு முறை

பாடசாலையில் ஒழுங்குமுறை அல்லது கட்டுப்பாடு திட்டமாக இருந்தால்தான் அதன் வாழ்க்கை எல்லோருக்கும் சௌகரியமாகவும் அழகுடையதாகவும் இருக்கும். இந்தக் கட்டுப்பாடு ஆசிரியருக்கு அஞ்சியோ அல்லது அவர் அதிகாரத்தினலோ வருகிற வெளிக்கட்டுப்பாடு அல்ல. பாடசாலையின் நல்ல சம்பிரதாயங்களையும் சட்ட திட்டங்களையும் முதலில் காண்கிற சிறுபிள்ளை பின்னர் காலக்கிரமத்தில் அவற்றின் நன்மையை உணர்ந்து தானக அவைகளுக்குக் கட்டுப்பட்டு அவற்றைப் போற்றி நடக்கத்தக்க முறையில் பாடசாலை நடைபெறவேண்டும். அந்த நிலையில் அவன் பாடசாலையின் கட்டுப்பாடுகளைத் தான் காப்பதே தனக்குப் பெருமையென்று கருதுவான். இதுவே அகத்திலிருந்து எழ வேண்டிய கட்டுப்பாடு. இந்தக் கட்டுப்பாடு ஆசிரியர் எதிரில் மட்டுமல்லாமல், ஆசிரியர் இல்லாதபோதும் நின்று நிலவும். இக்கட்டுப்பாட்டைப் பூரணமான தன்னடக்கம் என்று கூறலாம். பிள்ளைகளின் தேவையை உணர்தல், பிள்ளைகளின் சக்திக்கு மீருத வேலையைக் கொடுத்தல், தங்கள் வேலையை அவர்கள் விருப்பத்தோடு நிறைவேற்றச்செய்தல், கஷ்டமான வேலையில் உபாத்தியாயரும் பூரணமாய் கலந்து கொண்டு பிள்ளைகளின் சோர்வைப் போக்குதல்—இவை யாவும் கட்டுப்பாடு குலையாது பாதுகாக்கும் அன்பு வழிகளாகும்.

ஒழுங்கை நிலைநிறுத்தவும் சாமானியக் குறைகளை ஆராய்ந்து சரிசெய்யவும், பாடசாலையில் பிள்ளைகள் தேர்ந்தெடுக்கிற மூன்று பிரதிநிதிகள்கொண்ட ஒரு நியாய சபை இருக்கலாம். மூன்று பேர்களில் ஒருவர் தலைவராக இருப்பார். பிள்ளைகளிடம் நியாய உணர்ச்சியும் கடமையுணர்ச்சியும் வளர்ப்பதற்கு இது அவசியம். ஆசிரியருடைய தண்டனையை இது தவிர்த்துவிடுகிறது. இதனல் பிள்ளைகளுக்கும் அவருக்கும் இருக்கவேண்டிய அன்பு குறையாமல் இருப்பதோடு பிள்ளைகளுக்குள்ளேயே நல்ல கட்டுப்பாடும் பொறுப்பும் நேர்மையும் ஒழுக்கமும் நிலைபெறும். வயது

வந்தவர்களுக்கும் சிறு பிள்ளைகளுக்கும் உள்ள வேற்றுமை யெல்லாம், அனுபவத்தின் ஆழத்தையும் விரிவையும் பொறுத்தவையே யன்றி, ஒழுக்க உணர்ச்சியில் வயதுவந்த வர்கள் மேம்பட்டவர்கள் அல்ல ஆகவே, பிள்ளைகளிடம் நீதியுணர்ச்சி குறைவாயிருக்குமென்று ஆசிரியர் எண்ண லாகாது. அன்றியும், பிள்ளைகளடங்கிய நியாயசபையில் குற்றங்களை விசாரிக்கும்போது சாமானிய திறமையுடைய பிள்ளைக்குங்கூட தன் கட்சியை எடுத்துப் பேசுகிற ஆற்றல் நன்ருய் வளர்ச்சி பெறுகிறது. நியாய சபையில் வழக்கு விசாரணை கிரமமாக நடைபெறுவதற்கு ஆசிரியர் வழி காட்ட வேண்டுமேயன்றி, நியாயத்தை எடுத்துச் சொல் லவோ முடிவு சொல்லவோ வேண்டுவதில்லை. நியாய சபை யில் பொதுவாகப் பெரிய வகுப்புப் பிள்ளைகளே இருப் பார்களாதலால், முதல் வகுப்புப் பிள்ளைகள் அவர்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவும், அவர்கள் சொல்லைக் கௌரவித் துப் பணியவும் பழகிக்கொள்வது போதும். முதல் வகுப்புப் பிள்ளைகள் வழக்குத் தொடுக்க விரும்பினுல் அவ்வழக்கை ஆசிரியர் எழுதி நியாயசபைத் தலைவரிடம் கொடுக்கக் கடமைப்பட்டவர்.

வகுப்பு—வேலை முறை

நூற்றல்: அ. வகுப்புமுறை. ஆ. குழுமுறை
தோட்டவேலை: பாடசாலைக் குழுமுறை

நூற்றல் ; அ. வகுப்புமுறை :—முதல் வகுப்பில், ஆரம் பத்தில் நூற்றல் சம்பந்தப்பட்ட வேலை முறைகளை வகுப்பு முழுமையும் சேர்ந்து செய்யுமாறு திட்டமிட்டுத் தொடங்கு வது நல்லது. பருத்தி சுத்தம் செய்தல், பஞ்சரைத்தல், பட்டை போடுதல், நூற்றல் ஆகிய வேலைகளை எல்லாப் பிள்ளைகளும் செய்யுமாறு திட்டமிட்டுக்கொள்ளவேண் டும். வகுப்பில் 25 பிள்ளைகள் இருப்பதாக வைத்துக்கொள் வோம். காலையில் தொழில் நேரத்தில் பருத்திச் சுத்தம் 8 பிள்ளைகள், பஞ்சரைத்தல் 3 பிள்ளைகள், நூற்றல் 14 பிள்ளைகள் எனவும், பிற்பகலில் பட்டைபோட 5 பேர்

நூற்க 20 பேர் எனவும் வேலைசெய்விக்கலாம். காலையில் பருத்திச் சுத்தமும் பஞ்சரைத்தலும் செய்த 11 பேர்கள் மாலையில் நூற்பார்கள். காலையில் நூற்ற 14 பிள்ளைகளில் 5 பேர் பட்டைபோட மற்றவர்கள் நூற்பார்கள். எல்லாப் பிள்ளைகளும் முறைப்படி பருத்தி சுத்தம், பஞ்சரைத்தல், பட்டைபோடல் ஆகிய வேலைகளை மாற்றி மாற்றிச் செய்வித்து மற்றப் பிள்ளைகள் நூற்கும்படி செய்யலாம். அல்லது காலையில் பஞ்சரைக்க 3 பிள்ளைகளை விட்டு மீதிப்பிள்ளைகளைப் பருத்திச் சுத்தம் பண்ணச் செய்யலாம். பிற்பகலில் 3 பிள்ளைகளைப் பட்டைபோட அனுப்பி மீதிப் பிள்ளைகளை நூற்கச்செய்யலாம். உடல் வலிவுள்ள பிள்ளைகளை மாற்றி மாற்றிப் பஞ்சரைக்கச் செய்து சுத்தம் செய்த பருத்தியை அரைக்கும் வரை பருத்திச் சுத்தம் செய்யும் வேலையில்லாமல் நூற்கச் செய்யலாம்.

ஆ. குழுமுறை :—வகுப்பிலுள்ள பிள்ளைகள் 4 வரிசைகளில் உட்கார்ந்திருப்பதை 4 குழுக்களாகப் பிரித்துக் கொள்ளலாம். ஒவ்வொரு குழுவுக்கும் ஒவ்வொரு தலைவர் இருப்பார். தலைவர் சொற்படி குழுவிலுள்ள பிள்ளைகள் பருத்திச் சுத்தம், பஞ்சரைத்தல், பட்டைபோடுதல், நூற்றல் ஆகிய வேலைகள் செய்வார்கள். குழுத்தலைவரே திட்டமிட்டு, எந்தப் பிள்ளையும் வேலை செய்யாமல் இராதபடி பார்த்துக் கொள்வார். உதாரணமாக வகுப்பில் 25 பிள்ளைகள் இருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். ஒரு குழுவுக்கு 6 பிள்ளைகள் இருப்பார்கள். காலையில் 2 பேர் பருத்திச்சுத்தம் செய்ய, ஒருவர் பஞ்சரைக்க, 3 பேர் நூற்பார்கள். பிற்பகலில் 2 பேர் பட்டைபோட 4 பேர் நூற்பார்கள். இப்படி இந்தக் குழு தனியாக நூற்றல் சம்பந்தமான எல்லா வேலைகளையும் தானே கவனித்துக் கொள்ளும். குழுவுக்கென தனிக்கணக்கும் வைத்துக் கொள்வார்கள். எல்லோருக்கும் எல்லா வேலைகளும் முறைப்படி கிடைக்கத் திட்டமிட்டு இப்படிக் குழுமுறையில் நடத்துவதால், தாங்களே திட்டமிட்டு வேலை செய்யும் பயிற்சி வளர்கிறது.

இப்படிக் குழுமுறையில் செய்யும் வேலையை வேறுவிதமாகவும் நடத்தலாம் மொத்தமுள்ள பிள்ளைகளை 5 குழுக்களாகப் பிரித்துக்கொள்ளலாம். அந்தக் குழுக்களின் வேலைமுறைகளைக் கீழ்க்கண்டவாறு நடத்தலாம். இது ஒரு வாரத்தில் 5 நாட்களுக்கான வேலைத் திட்டம்.

| | குழு எண் | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|---|
| முதல்நாள் | காலை | ப. சுத்தம் | ப. அரைத்தல் | நூற்றல் | நூ. | நூ. |
| | மாலை | நூற். | நூ. | பட்டை போடுதல் | ப.சு | நூ. |
| 2-ம் நாள் | காலை | நூற். | ப. சு. | ப. அ. | நூ. | நூ. |
| | மாலை | நூ. | நூ. | நூ. | பட்டை | ப.அ. |
| 3-ம் நாள் | காலை | நூ. | நூ. | ப. சு. | ப.அ. | நூ. |
| | மாலை | ப. சு. | நூ. | நூ. | நூ. | பட்டை |
| 4-ம் நாள் | காலை | நூற். | நூற். | நூ. | ப.சு. | ப.அ. |
| | மாலை | பட்டை | ப. அரைத்தல் | நூ, | நூ | நூ |
| 5-ம் நாள் | காலை | ப. அ. | நூ. | நூ. | நூ. | ப.சு. |
| | மாலை | நூற். | பட்டை | ப.சு. | நூ. | நூ. |

ஒவ்வொரு குழுவும் மொத்தமாகச் செய்யும் வேலைகள்:

| | |
|---|---|
| பருத்தி சுத்தம் | ... 2—1—2—2—1 |
| பஞ்சரைத்தல் | ... 1—2—1—1—2 |
| பட்டை போடுதல் | ... 1—1—1—1—1 |
| நூற்றல் | ... 6—6—6—6—6 |

## தோட்டவேலை—பாடசாலைக் குழுமுறை

தோட்ட வேலையில் எளிய வேலையுமுண்டு, கடின வேலையுமுண்டு. விதை யூன்றுதல், காய் பறித்தல் முதலியன எளிய வேலைகள். கொத்துதல், நீர் இறைத்தல் போன்றவை கடின வேலைகள். இளம் பிள்ளைகள் கடின வேலை செய்யமுடியாது. ஆயினும் தோட்ட வேலைப் பயிற்சியால் வரவேண்டிய கல்வியும் பயனும் இன்பமும் இவர்களும் பெறவேண்டும். ஆனால் எளிய வேலை மாத்திரம்

செய்வதனால் உற்பத்தி ஏற்படாது, தொழிலும் பூர்த்தி யாகாது. பெறவேண்டிய அறிவு முழுமையும் பெற வழி இராது. இந்த நிலைமையைச் சமாளிக்கும் பொருட்டு, பாடசாலை முழுமையும் ஒரு விவசாயச் சமூகமாய்க் கருதி சௌகரியமான எண்ணிக்கையுள்ள குழுக்களாக அச் சமூகத்தைப் பிரித்துக்கொள்ளலாம். ஒவ்வொரு குழுவிலும் ஒவ்வொரு வகுப்புப் பிள்ளைகளும் ஒருவரோ பலரோ இருப்பார்கள். உதாரணமாக ஒரு பாடசாலையில் உள்ள பிள்ளைகளைக் குழுக்களாகக் கீழே பிரித்துக் காட்டியிருப்பதைக் கவனிக்கலாம்.

| வகுப்பு | வகுப்பின் மொத்தப் பிள்ளைகள் | குழுக்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1 | 25 | 4 | 3 | 3 | 3 | | 3 | 3 | 3 |
| 2 | 25 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 4 |
| 3 | 25 | 3 | 4 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 |
| 4 | 20 | 2 | 2 | 2 | 2 | 3 | 3 | 3 | 3 |
| 5 | 15 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 1 |
| மொத்தம் | 110 | 14 | 14 | 13 | 13 | 14 | 14 | 14 | 14 |

மொத்தம் 110 பிள்ளைகளை 8 குழுக்களாகப் பிரித்திருக்கிறோம். 6 குழுக்களில் 14 பேர் வீதமும் 2 குழுக்களில் 13 பேர் வீதமும் இருப்பார்கள். 13 பிள்ளைகள் இருப்பதை எண்ணிக்கைக் குறைவென்று கருதக்கூடாது. திறமையும், பலமும், ஊக்கமும் உள்ள பிள்ளைகளையும் பொறுப்பேற்றுத் தலைமை தாங்கவல்ல பிள்ளைகளையும் கவனித்துக் குழுக்களில் பங்கிட்டு எல்லா குழுக்களும் ஏறக்குறைய சமபலமுள்ளனவாயிருக்கும்படி அமைக்கவேண்டும். தோட்டவேலை சம்பந்தமான எல்லா வேலைகளையும்

கவனிப்பதற்கு இந்தக் குழு அமைப்பு வசதியானது. உள்ள தோட்ட நிலத்தை 8 பகுதிகளாக அல்லது பாத்திகளாகப் பிரித்து முறையே ஒன்று முதல் 8 வரையிலுள்ள குழுக்களுக்கும் கொடுக்கிறோம். ஒவ்வொரு குழுவிலும் ஐந்தாம் வகுப்புப் பிள்ளைகளில் ஒருவன் குழுத்தலைவனாக இருப்பான். கத்தரித் தோட்டம் போடுவதாக வைத்துக்கொள்வோம். நாற்று வாங்கி நடுகிறோம். சௌகரியத்துக்காக இங்கு நடவு சம்பந்தப்பட்ட வேலையை 5 விதமாகப் பிரிப்போம்; (அ) நிலத்துக்கு வேண்டிய சாணந்தழை முதலிய எரு சேகரித்துப் போட்டு எரு விடுதல்—முதல் வகுப்பு (ஆ) நிலத்தைக் கொத்திக் கட்டி உடைத்து நிரவிப் பண்படுத்துதல். இது கடினமான வேலை—5-ம் வகுப்புக் குரியது. (இ) பண்படுத்திய நிலத்தில் பாத்தி கட்டி நேர் நேராக அளந்து குழிபோடுதல்—4-ம் வகுப்பு (ஈ) போட்ட குழியில் நாற்று நடுதல்--2-ம் வகுப்பு (உ) நட்ட நாற்றுக்குப் பூவாளியால் மொண்டு நீர்விடுதல்—3-ம் வகுப்பு

வேலையின் கடுமையையும் எளிமையையும் அனுசரித்து வகுப்பு வாரியாக வேலையை இங்குப் பிரித்திருக்கிறோம். முதல் வகுப்புப் பிள்ளைகள் தங்கள் விவசாய நேரத்தில் வெளியில் சென்று சாணம் பொறுக்கி வந்து தங்கள் தங்கள் பாத்தியில் இறைப்பார்கள். முதல் குழுவிலுள்ள முதல் வகுப்புப் பிள்ளைகள் நால்வரும் தங்கள் முதல் குழுப் பாத்தியில் சாணம் இறைக்கிறார்கள். அன்றோ, மறுநாளோ முதல் குழுவைச் சேர்ந்த ஐந்தாம் வகுப்பு மாணவர் இருவர் வந்து எருவிட்ட நிலத்தில் தங்கள் குழுவின் பாத்தியை ஒவ்வொரு பகுதியாகக் கொத்திச் சமப்படுத்துகிறார்கள். இவர்கள் கொத்தக் கொத்த, அடுத்த நாள் முதல் குழுவுக்குரிய 4 ஆம் வகுப்புப் பிள்ளைகள் இருவர் வந்து தங்கள் விவசாய நேரத்தில் வரப்புப் போட்டு அளந்து குழி போடுகிறார்கள். அதன் பின் முதல் குழுவுக்குரிய 2 ஆம் வகுப்புப் பிள்ளைகள் மூவர் நாற்றுடன் வந்து நடுகிறார்கள். அவர்களோடு கூடவே 3 ஆம் வகுப்புப் பிள்ளைகள் மூவர் வந்து தண்ணீர் விடுகிறார்கள்.

இப்படியாகச் சில தினங்களில் முதல் குழுவுக்குரிய நிலம் முழுமையும் பாத்தியாகக் கத்தரி நட்டு முடிகிறது. முதல் குழுவுக்குரிய 14 பேர் வேலே செய்கிற அந்தந்த நேரத்தில் மற்ற ஏழு குழுக்களிலும் அந்தந்த வேலே முறையாக அந்தந்தப் பாத்தியில் நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

இதில் என்ன சௌகரியம் என்ருல், ஒரு வகுப்பின் விவசாய நேரத்தில் அந்த வகுப்பின் எல்லாப் பிள்ளே களும் ஒரே வேலேயைச் செய்கிருர்கள். வேலேயானது அந்தந்த வகுப்பின் பொதுவான உடல் வளர்ச்சிக் கேற்றபடி எளிமையாகவோ கடினமாகவோ இருக் கிறது. வகுப்புக்கு மட்டும் உரிய பாத்தி என்ற வேற் றுமை தோற்ருதபடி, பாடசாலேயில் பாத்திகளெல்லாம் எல்லா வகுப்புகளுக்கும் உரியனவாகி பெரிய பிள்ளே களும் சிறிய பிள்ளேகளும் ஒன்ருய்க் கலந்து வேலே செய் கிருர்கள். வகுப்புக்களுக்கிடையே சாதாரணமாய் மற்ற வேலேகளில் ஏற்படுகிற போட்டியைக் கூட்டுறவான இந்தக் குழு அமைப்புடைய வேலே முறையில் ஓரளவு போக்கி விடலாம். ஆனுல் இதில் பாடசாலேயின் விவசாயம் அனேத் துக்கும் ஓர் ஆசிரியர் பொறுப்பேற்று அவருடைய பார்வை யில் மற்ற ஆசிரியர்கள் தங்கள் வகுப்பு விவசாய வேலே நடத்துகிற வகையில் ஒத்துழைக்கவேண்டும். இங்கு வகுப்பு வாரியாக உற்பத்தியைக் கவனிக்கமுடியாது; பாட சாலே முழுமைக்கும் மொத்த உற்பத்தி இவ்வளவென்று கவனிக்கலாம்.

## 5. செயல் திட்டம்

ஆதாரக்கல்வியை வாழ்க்கை மூலம் கல்வியென்று சொன்னேம். ஏழை இந்திய நாட்டில் எல்லோரும் உழைத்தே உயிர்வாழ வேண்டியிருக்கிறது. ஆகவே வாழ்க்கையின் அங்கமாகிய இந்த உழைப்பு அல்லது தொழில் மூலம் கல்வி கற்பிப்பது பொருத்தம். இதனேடு, கல்வி போதனேக்கு இடமாக, பிள்ளேகள் வாழும் இயற்கை-சமூகச் சூழ்நிலேயையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். உல

கத்தில் மற்ற நாடுகள்போல சுதந்திரத் தனி அரசாக நம் நாடு ஓங்கவேண்டுமாதலால், உலக நடப்பை அறிவது இன்றியமையாதது. இதன் பொருட்டுப் பத்திரிகைச் செய்தி படித்துத் தேவையானவற்றைப் பிள்ளைகளுக்கு விளங்கச் சொல்லுதல் பாடசாலை வாழ்க்கையில் முக்கிய இடம் பெறுகிறது. கை, கால் முதலிய கர்மேந்திரியங்களைப் பயிற்றுவதனுல்தான் மனவளர்ச்சி ஏற்பட்டு அறிவு உண்டாகிறது. இது எல்லாக் கல்விமுறைக்கும் பொருந்தும். இதன் பொருட்டுப் பாடசாலையின் வேலைமுறையை ஐந்து செயல் திட்டமாகப் பிரித்துக் கொள்ளலாம்.

1. **ஆரோக்கிய வாழ்வுக்கான பயிற்சி:** அதாவது தனிப்பட்ட முறையிலும் சமூகமாயும், துப்புரவாகவும் ஆரோக்கியமாகவும் வாழ்வதற்கு வேண்டிய தனிப் பண்புகளும், சமூகப் பழக்க வழக்கங்களும் மனப்போக்கும் அமைத்தல். துப்புரவு செய்வதற்கும் திறமையாக எல்லா வகையான சுகாதார வேலைகள் செய்வதற்கும் தேவையான அறிவுத் திறனும் தொழில் திறனும் ஏற்படவேண்டும். இங்கு உடற்பயிற்சி, சரீர சாஸ்திரம், சுகாதார சாஸ்திரம், உணவு சாஸ்திரம் ஆகியவற்றை விஞ்ஞான ரீதியாய்க் கற்பிக்கலாம்.

2. **தன்னம்பிக்கையோடு வாழும் பயிற்சி:** இது சுயதேவைப் பூர்த்தியாகும்; ஆனுல் இங்கு இதன் பொருளாதாரக் கருத்தைவிட, கல்வித்துறையில் மேம்பாடு வரவேண்டுமென்பதே பிரதானமானது. காய்கறி பயிர் செய்தல், தானியங்கள் பயிர்செய்தல், உணவுப் பொருள்களைச் சேமித்தல், சமைத்தல் ஆகியவை உணவு சம்பந்தமாய்க் குறிப்பிடத்தக்கவை. இவற்ருல் அறியக்கூடிய பாடங்கள் சாமானிய விஞ்ஞானம், தாவரநூல், பிராணி நூல், இரசாயனநூல். பௌதிகநூல் முதலியன. ஆடை பற்றியவரையில் பருத்திச் சாகுபடிமுதல் துணிநெசவு வரையிலுள்ள வேலைகள், தையல் ஆகிய செயல்கள் செய்யத்தக்கவை. மேலும் கட்டிடங்களை நல்ல நிலையில் பழுது பார்த்து வைத்திருத்தல், வீட்டிலும் பாடசாலையிலும் உப

4

யோகிக்கிற கருவிகளைத் திருத்தமாக வைத்திருத்தல் ஆகிய செயல்களிலும் தேர்ச்சி வேண்டும்.

3. பயனுள்ள உற்பத்தித் தொழிற் பயிற்சி: மூவகைத் தொழில்களை இங்குச் சொல்லலாம்—தோட்ட வேலையும் பயிர்த் தொழிலும், நூற்றலும் நெசவும், தச்சுவேலையும் கருமாரவேலையும். இத் தொழில்களில் தேர்ச்சி பெறும் போது எண்ணும் எழுத்தும் பூரணமாய்க் கை வரவேண்டும்; உடற்பயிற்சியும் பூரணமாய் வரவேண்டும். இம் மூன்று தொழில்களில் ஒன்றை ஆதாரத் தொழிலாய்க் கொள்ளலாம்.

4. குடிமைப் பயிற்சி: வீடு, பாடசாலை, சமூகம், தன் நாடு, உலகம் என்ற முறையில் சிறுபிள்ளை கூட்டுறவும் ஒப்புரவும் நிறைந்து வாழ்வதற்கான மனப்போக்கும் பழக்க வழக்கங்களும் வளர்ப்பதே இதற்கான செயல் திட்டம். பாட அளவில் சரித்திரம், பூகோளம், ஆட்சி முறை சமூக நூல், சுகாதாரம், சாமானியப் பொருளாதாரம் முதலிய யாவும் இதனுள் அடங்கும்.

5. கலைப்பயிற்சி: இதற்கான செயல்கள் மிக்க விரிவாக இருக்கக்கூடும். பலவகை விழாக்கள், கொண்டாட்டங்கள், விளையாட்டு, ஆட்டம், சித்திரம், இசை, நாடகம், உல்லாசப்பிரயாணம், பொருட்காட்சி என இவை பலவாகும். தாய் மொழி, தேசிய மொழி, ஓவியம், இசை முதலான பாட அறிவு இவற்றின் மூலம் விளையும்.

## 6. கலைத் திட்டம்

மேற்குறிப்பிட்ட ஐந்துவகைச் செயல்திட்டத்தின் மூலம் பிள்ளைகளிடம் வளர்க்கக்கூடிய அறிவுத்துறைகளை இங்குக் கலைத்திட்டம் எனக் குறிப்பிடுகின்றோம். இவை பின்வரும் ஏழாக ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தார் குறிப்பிட்டிருக்கிறார்கள்; சென்னைக் கல்வி யிலாகா இத் திட்டத்தை அங்கீகரித்திருக்கிறது.

ஆரோக்கிய வாழ்க்கை: ஆரோக்கியமான உடல், துப்புரவான பழக்கவழக்கங்கள் மெய்வருந்தி உழைக்கும் ஆற்றல், சமூக ரீதியாகவும் ஒழுக்க ரீதியாகவும், சுகாதார வாழ்வின் அவசியம், சமூகத் துப்புரவு, கிராம சுகாதாரம் பற்றிய அடிப்படை அறிவு, வீட்டிலும் பாடசாலையிலும் ஊரிலும் இவற்றுக்கான செயல் திட்டங்களை நடத்தும் ஆற்றல், மனித உடல்பற்றிய விரிவான அறிவு, சுகாதார விதிகள், சாமானிய பொருள்களைக் கொண்டு சத்துள்ள உணவை அமைத்தல், முதலுதவி, மூலிகைகள், சாமானிய நோய்க்குத் தடுப்பு சிகிச்சை முதலியன.

2 தன்னம்பிக்கையுள்ள வாழ்க்கை: பருத்தி பயிரிட்டுத் துணி தயாரித்தல், தன்னளவுக்கு வேண்டிய பல் வகை உணவுப் பொருள்களையும் பயிரிடுதல், நல்ல உணவு தயாரித்தல், உணவுப் பொருள் சேமித்தல், குடும்ப வரவு செலவுக் கணக்கு, சாமானியக் கருவிகளைத் திறம்பட உபயோகித்தல், நீந்துதல், மரமேறுதல், சைக்கிள் விடுதல் அது பற்றிய இயந்திர நுட்பம் முதலியன—இயன்றவரை.

3. ஆதாரத்தொழில் மூலம் சுயதேவைப்பூர்த்தி: உணவு உடை முதலிய ஜீவாதாரத் தேவைகளைப் பொறுத்தவரையில் பிள்ளைகள் தங்கள் வாழ்க்கையை நடத்திக் கொள்வதற்குவேண்டிய அறிவும் வினைத்திறனும் பெறுதல்.

4. சாமானிய விஞ்ஞானம்: இயற்கையிலிருந்தும், தினசரி வாழ்க்கையிலிருந்தும் அறியத்தக்க விஞ்ஞான உண்மைகள், இயந்திரத் தத்துவங்கள், தொழில் கருவிகளை உபயோகிப்பதில் உள்ள நுணுக்கம், கணித தத்துவம், ஆதாரத் தொழில் சம்பந்தப்பட்டவரை இரசாயன நூல், பௌதிக நூல், உயிர் நூல் முதலிய விஞ்ஞான அறிவு, சுகாதாரம், ஆரோக்கியம் பற்றிய விஞ்ஞான அறிவு.

5. குடிமைப் பயிற்சி: கூட்டுறவுச் சமுதாய தத்துவம் பற்றிய அறிவு, சுயதேவைப்பூர்த்தியை அடிப்படையாகக்கொண்ட பரவல்முறை, சாமானிய குடிசைத்தொழில்களின் தத்துவம், கிராம வாழ்க்கைக்கும் நகர வாழ்க்கைக்

கும் இருக்கவேண்டிய நல்லுறவு, கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பு, பத்திரிகைச் செய்தி மூலமாய் இந்தியா பற்றியும், உலகம் பற்றியும் உள்ள பொருளாதாரப் பிரசினைகள், சமூகப் பிரசினைகள், அரசியல் பிரசினைகள் பற்றி அறிதல். இந்தியா, உலகம் பற்றிய பூகோளம், சரித்திரம், உலகத்துப் பெரும் சமயங்கள், சமய ஆசாரியர்கள், விழாக்கள்.

6. எண்ணும் எழுத்தும்: பாடசாலையிலும் கிராமத்திலும் உள்ள நேரடியான பிரசினைகளை பற்றி வாக்கு வன்மையோடு பேசுதல், எழுத்துமூலமாக எண்ணத்தைத் தெளிவாக வெளிப்படுத்தல், அறிக்கை தயாரித்தல், (பின்னர்) இந்திமொழியைப்பேசவும் படிக்கவும் எழுதவும் சுமாராக அறிதல். சாமானியக் கணக்கு—கூட்டல், கழித்தல் முதலியன. பலவகை அளவைகள், நேரம், தூரம், நாணயம், நிலப்பரப்பு, சமானியப் பற்று வரவுக் கணக்கு, விகிதசாம்யக் கணக்கு, நேரமும் வேலையும் பற்றிய கணக்கு.

7. கலையுணர்ச்சி: முக்கிய நோக்கம் நல்ல கலையுணர்ச்சி பெறுதலும் தன் வாழ்க்கையையும் ஊர்வாழ்க்கையையும் அழகு படுத்த அறிதலும். கேளிக்கை நடத்துதல், ஓய்வு நேரத்தை இன்பகரமாகவும் லாபகரமாகவும் உபயோகிக்க அறிதல். தமிழ் இலக்கிய அறிவு, ஓவியப்பயிற்சி, களிமண் வேலை, வர்ணச் சித்திரம், கர்நாடக சங்கீதம், பக்திப் பாடல்களையும் தேசியப் பாடல்களையும் சேர்ந்து பாடுதல், இட அலங்காரக் கலை—கோலம், தோரணம் முதலியன. இவற்றில் அழகு எது, விகாரம் எதுவென்று அறிதல். பாடசாலையிலும், ஊரிலும் நாடகம், விழா முதலியன அமைக்கத் தானும் கலந்து உதவுதல்.

## 7. பாடத் திட்டம்

மேற் குறிப்பிட்ட கலைத்திட்டம் எட்டு வகுப்புக் கொண்ட ஆதாரப் பாடசாலை முழுமைக்கும் உரியது. முதல் வகுப்பு ஆசிரியர் இதில் தம்முடைய பங்கு என்ன,

முதல் வகுப்புக் குழந்தைக்கு இதில் எந்த அளவு பயிற்சி வரும் என்பதை ஆராய்ந்து உணர்ந்து திட்டமிட்டுக் கொள்ளவேண்டும். கீழே கொடுத்திருக்கும் முதல் வகுப்புப் பாடத்திட்டத்தை இந்த நினைவோடு பின்பற்ற வேண்டும். அன்றியும் இங்குக் குறிப்பிட்டுள்ள எல்லாத் திட்டத்தையும் முதல் வகுப்பில் பூர்த்திசெய்ய முடியாமல் போகலாம். அதனால் குற்றமில்லை. விட்டுப்போனதை இரண்டாம் வகுப்பில் தொடர்ந்து நடத்தலாம். இதுபோல சில சமயம் சந்தர்ப்பம் நேர்ந்து இரண்டாம் வகுப்புப் பாடம் முதலியவற்றை முதல் வகுப்பிலேயே நடத்துவதும் எளிதாகத் தோற்றலாம். அப்பொழுது அப்படிக் கற்பிப்பதே முறையாகும். பாடத்திட்டம் ஒரு வழிகாட்டியே யொழிய, வேலை முழுமையும் இதுதான் அல்லது இவ்வளவுந்தான் என்று எண்ணிவிடுதல் சரியன்று.

பாடத்திட்டத்தில் குறிப்பிட்டுள்ளவை யனைத்தையும் எல்லாப் பாடசாலைகளிலும் பின்பற்றுவது சாத்தியமாயிராது ஒரு பிள்ளைக்கும், மற்றொரு பிள்ளைக்கும் நிரம்ப வித்தியாசமுண்டு. இதை ஆசிரியர் நன்றாக உணர்ந்து இதற்கேற்றபடி கல்வி போதிக்கவேண்டும் என்று நாம் சொல்லுகிறோம். அதுபோல ஒவ்வொரு பிரதேசத்துக்கும் பொருத்தமான தனி இயல்புகள் சில இருக்கும். அவற்றை யனுசரித்துப் பாடத் திட்டத்தை மாற்றிக்கொள்வது நல்லது. அப்படியே குழந்தைகளில் ஆண், பெண் வேறுபாட்டை யுணர்ந்து ஆசிரியர் போதிக்கக் கடமைப் பட்டவராவார்.

### 1. ஆரோக்கிய வாழ்க்கை

துப்புரவும், ஆரோக்கியமும் பொருந்திய வாழ்க்கை ஏற்படுவது கிரமமான தினசரிப் பழக்கத்தினாலும் செம்மையாக அமைந்த மனப்போக்கினாலும் ஆகும். பாடசாலையில் பூர்வாதார வகுப்பு இருந்து அதில் பிள்ளைகள் படித்திருந்தால், இந்த வகுப்பு வேலை எளிதாயிருக்கும். பாடசாலை வேலைத் திட்டத்தில் ஆரம்பம் முதல் பெற்றோருடைய பூரணக் கூட்டுறவு இருப்பது பெரும் பயன்தரும். இடை

நேரத்தில் ஒருவேளை உணவு அளிக்கப் பாடசாலையில் வசதியிருக்குமானால் பாடபோதனைக்கே அனுகூலமுண்டு. சில சமயம் வீட்டிலிருந்து சிற்றுண்டி அல்லது வேறு உணவு கொண்டுவரச் செய்து பாடசாலையில் உண்ணச் செய்யலாம். உல்லாசப் பிரயாணம், நிலாச் சோறு உண்ணல் முதலியனவும் இதுபற்றிக் குறிப்பிடத் தக்கவை. இப்படிப் பிள்ளைகள் சமூகமாய்க் கலந்து உண்பதில் சமூகப் பயிற்சிக்கும் கல்வி போதனைக்கும் நிரம்ப இடமுண்டு. கிராமத்தில் சிறு வைத்தியசாலை இருக்குமானால் அதன் மூலம் பிள்ளைகள் பலவகை ஆரோக்கிய அறிவு பெறக்கூடும்.

பின்வரும் திட்டம் மூன்றும் வகுப்பு வரையில் ஏறக்குறைய ஒன்றாக அனுசரிக்க வேண்டியதாகும். இதில் வாய்மொழிப் போதனையாக உள்ளது குறைவு. முழுமையும் செயல் ரூபமாகவே இருக்கும். ஒவ்வொரு செயல் செய்யும் போதும் பிள்ளையிடம் ஏன், எப்படி என்ற எண்ணம் எழும்படிச் செய்து அவன் கேட்பதன்மேல் எளிதாக அது பற்றிய அறிவை வாய்மொழியாகப் போதிக்கலாம்.

(அ) உடல் துப்புரவு: பின்வரும் பயிற்சி ஏற்பட வேண்டும்.

1. மலஜலம் கழித்தல்—உரிய நேரம், உரிய இடம், தண்ணீரை உபயோகிக்கும் முறை—மண்போட்டு மூடுதல்.

2. முகம் அலம்பும்போது கண் காதுகளையும், கை கால்களையும், விரல் நகங்களையும் செம்மையாகச் சுத்தம் செய்யும் முறை.

3. மூக்கைச் சுத்தம் செய்தல்—வாய், பல், ஈறு சுத்தம் செய்யும் முறை. பல் சுத்தம் செய்வதற்கான பொருள்கள், மண் சாம்பல் முதலியன கூடாது; மிருதுவான பொடி வேண்டும். ஆல், வேல், பூலா, வேம்பு குச்சிகள். மாவிலை கரிசிலாங்கண்ணி; உமிக்கரியும் உப்பும் சேர்த்துப் பொடிபண்ணி வைத்துக்கொள்வது நல்லது. வாய் கொப்புளித்தல். நாக்கு வழித்தல். எச்சில் துப்புதல் சாதாரணமாய் நல்லதல்ல.

4. தலைமுடி சுத்தம் செய்தல்—எண்ணெய் தேய்த்தல். பச்சிலைகள், எலுமிச்சம் பழம், தேங்காய்ப் பால் முதலியன. ஈரம் உலர்த்துதல். தலை வாருதல். சோப்பு தேய்க்கக் கூடாது. உரோமத்தின் வேரை சோப்புக்காரம் எரித்துவிடும். பேன், ஈர், பொடுகு இவை வராமல் பாதுகாத்தல். வந்தால் போக்கும் வழி, மற்றவர்களுக்குப் பரவாமல் பாதுகாத்தல்.

5. நீராடுதல்—உடம்பையும் தோலையும் சுத்தமாக்குவதற்காக. வேர்வை, அழுக்கு, நீராடும் முறை. தேய்க்க உபயோகிக்கும் பொருள்கள்: மாவுப் பொடி, அரைப்புத் தூள், களிமண் பொடி, மஞ்சள் முதலியன; சோப்பு அதிகமாக உபயோகிக்கவேண்டாம். துண்டால் அழுந்தத் தேய்த்தால் போதும். எண்ணெய்த் தேய்த்துக் குளித்தல்.

6 துணி வெளுத்தல்: தினந்தோறும் துவைக்க வேண்டும், வெயிலில் உலர்த்தவேண்டும், ஒழுங்காக மடித்து வைக்கவேண்டும். நீலம் போடுதல்.

7. துப்புரவாகப் படுக்கையை வைத்திருத்தல், வெயிலில் உலர்த்துதல்.

8. சுத்தமாக உண்ணுதல், நீர் குடித்தல். உண்ணு முன்னும் உண்டபின்னும் கை கழுவுதல், சாப்பிடும் இடச் சுத்தம், பாத்திர சுத்தம், தண்ணீரை வடிகட்டுதல், மூடி வைத்தல்; எதிலும் ஈ மொய்க்கலாகாது.

9. சொந்தச் சாமான்களைத் துப்புரவாக முறைப்படி வைத்திருத்தல். பாத்திரங்கள், சிலேட்டு, புத்தகம், விளையாட்டு நூற்புக் கருவிகள் முதலியன.

குறிப்பு: சுத்தம் செய்வதற்கு உபயோகிக்கும் பொருள்கள்—மண், சாம்பல், மாவுப் பொடி, புளி, எலுமிச்சம்பழம், சவுக்காரம் முதலியன. இவற்றை அலங்கோலமாய்ப் போடாதபடி துப்புரவாக உரிய இடத்தில் வைத்திருத்தல். சிக்கனமாக உபயோகித்தல்.

(ஆ) சுற்றுப்புறத் துப்புரவு :- 1. வகுப்பறை, தாழ்வாரம், நடைபாதை, சுற்றுப்புறம் சுத்தம் செய்தல்.

2. வகுப்பு அலமாரியைத் துப்புரவு செய்து அதிலுள்ள காகிதம், புத்தகம், கருவிகள் முதலியவற்றை முறையாக அடுக்கி வைத்தல்.

3. துப்புரவு, தோட்டவேலை, விளையாட்டு, சித்திரம் நூற்பு முதலான பலவகைப் பாடசாலைக் கருவிகளைத் துப்புரவு செய்து ஒழுங்காக வைத்திருத்தல்.

4. குப்பை, கழிவு, சாக்கடை நீர் முதலியவற்றைத் தகுந்தபடி அப்புறப்படுத்தல் குப்பையைத் தவருமல் குழியில் போடவேண்டும்.

5. சுகாதார வேலைக்கான கருவிகளைத் தயாரிக்கவும் பழுது பார்க்கவும் உதவி செய்தல்.

குறிப்பு :—பாடசாலையில் எதிர்பார்க்கிற துப்புரவு எல்லாம் வீட்டிலும் ஏற்பட்டால்தான் பாடசாலை வேலையும் செம்மைப்படும். துப்பரவு பற்றிய சரியான மனப்போக்கு உண்டாகிச் சிறுபிள்ளை தன் வீட்டின் சுற்றுப்புறம் துப்புரவில்லாமல் இருந்தால், தானே அங்கு துப்புரவு செய்ய முன் வரவேண்டும்.

(இ) ஆரோக்கியம் : 1. உண்ணுதல்—உணவின் அளவு, உண்ணும் முறை, நேரம். நோயுள்ளபோது முழு அளவான சாத உணவு நல்லதல்ல. காரணம்.

2. நீர் குடித்தல்—அளவு—குடிக்கும் முறை, நேரம். நீரை வீட்டிலும் பாடசாலையிலும் சுத்தமாக வைத்திருத்தல்.

3. மலஜலம் கழித்தல்—ஆரோக்கியத்துக்கு மிகவும் அவசியமானது.

4. மூச்சுவிடுதல்—மூக்கினுல் சுவாசிக்கவேண்டுமே தவிர வாயினுல் சுவாசிக்கக் கூடாது. காரணம்.

5. உறக்கம், ஓய்வு—நேரம், முறை, அளவு. மூடின அறையிலும், அதிகம் பேர் உள்ள இடத்திலும், முகத்தை மூடிக்கொண்டும் உறங்கலாகாது.

6. வளர்ச்சி, மாதந்தோறும் பிள்ளைகளை எடைபோட்டு அதைப் பதிந்துவைக்க வேண்டும். வளரும் பிள்ளைக்கு எடை அதிகம் ஆக வேண்டும். பிள்ளைகள் தெரிந்து இவற்றைப் பற்றி விவாதிக்கவேண்டும். உயரம் அளத்தல்.

(ஈ) நோய் அல்லது விபத்து : வகுப்பில் பிள்ளைகளில் யாருக்காவது நோய் வரும்போது அந்தச் சந்தர்ப்பத்தையொட்டி வேலைத்திட்டம் அமைக்கவேண்டும். நோய் கண்டால் ஆசிரியர் அதற்குச் சிகிச்சை செய்வதைப் பிள்ளைகள் கவனிக்கவேண்டும். நோய்வரும் காரணம், அதற்கான பரிகாரம், அதைத் தடுக்கும் முறை ஆகியவற்றை அந்தச் சந்தர்ப்பத்தில் பிள்ளைகளுக்குச் சொல்லலாம்.

நோய்கள் பின்வருவனவாகும் :

1. சாதாரண நோய் :— அஜீரணம், காய்ச்சல், ஜலதோஷம், வேனிற்கட்டி (வேர்க்குருக்கட்டி) சிரங்கு, சொறிசிரங்கு முதலான தோல் வியாதிகள். மூக்கு ஒழுகுதல், பல்வலி, கண்கட்டி முதலியன.

2. தொத்து நோய் :—கண்வலி, தோல் வியாதிகள், அம்மை, காலரா முதலியன. இவை பரவும் விதம்.

3. சுளுக்கு, வெட்டுக்காயம், தீச்சுட்டகாயம், கொப்புளம்—விளையாட்டு, தோட்ட வேலை, சமையல் முதலிய வேலைகளில் இவை ஏற்படக்கூடும். இவற்றுக்குச் செய்யத் தக்க முதலுதவி. காதிலும் மூக்கிலும் குழந்தைகள் பலபம், விதை, சோகி முதலியவற்றைத் திணித்துக் கொள்வதால் வருங்கேடுகள். பரிகாரம். சாதாரண சிறு மயக்கம்—அதற்குச் சிகிச்சை.

2. தன்னம்பிக்கையுள்ள வாழ்க்கை

1. உணவு :—தோட்ட வேலையும் பயிர்த்தொழிலும் எல்லாப் பாடசாலைகளிலும் இருக்கவேண்டும். ஆதாரத் தொழில் வேறு எதுவாயிருந்தாலும் இது நடைபெறும். வீட்டிலும், ஊரிலும் நடைபெறும் தோட்டவேலைகள் வயல்வேலைகள் இரண்டையும் பெற்றோரோடு பிள்ளைகள்

கலந்து செய்யவும் கவனிக்கவும் வேண்டும். அப்படியே சமையல், அடுக்களைக் கவனிப்பு, நீர் எடுத்தல், பாத்திர சுத்தம், தானிய சுத்தம், பரிமாறுதல், காய்கறி நறுக்குதல், நெல் அரைத்தல் முதலிய வேலைகளில் அறிவு ஏற்படுவதற்குப் பாடசாலை இடங்கொடுக்க வேண்டும்.

2. உடை :—ஆதாரத் தொழில் எதுவாயிருந்தாலும் நூற்பு, நெசவு, தையல் வேலைகள் நடைபெறவேண்டும். நூற்புக் கருவிகளைப் பற்றித் தெளிவான அறிவு ஏற்பட வேண்டும்.

3. உபயோகத்திலுள்ள கருவிகளை வைத்திருத்தல், சுவருக்குப் பழுது பார்த்தல், வெள்ளையடித்தல், தரைக்குச் சாணம்போட்டு மெழுகுதல், மரத்துக்கு வர்ண எண்ணெய் பூசுதல் ஆகியவற்றின் அவசியத்தை அறிதல்.

3. ஆதாரத் தொழில்

முன்னுரை :—பின் வரும் தன்மைகளுள்ள தொழிலை. பாடசாலைக்கேற்ற ஆதாரத்தொழில் என்று சொல்லலாம். 1. அதன் மூலம் பிள்ளைகளுக்கு வேண்டிய பாட அறிவு, பழக்க வழக்கம், மனப்போக்கு ஆகியவற்றை ஏற்படுத்தப் போதுமான விரிவும் வகையும் அதில் இருக்கவேண்டும். பாட அறிவு என்பதில் முக்கியமாக தமிழ், கணிதம், விஞ்ஞானம் என்பவற்றைக் குறிப்பிடலாம். 2. அந்தத் தொழில்மூலம் 8 வருடம் ஆதாரக் கல்வி பயின்ற பையன் பிற்கால வாழ்க்கையில் அவசியமானல் அந்தத் தொழிலின் மூலமே சத்தான உணவும், போதுமான பிற வசதிகளும் உடைய வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான வருவாயைப் பெறக்கூடியதாக அது இருக்கவேண்டும்.

இப்படிப்பட்ட தொழில்கள்:—(அ) தோட்ட வேலை, விவசாயம், (ஆ) நூற்றல், நெசவு என்ற இரண்டும். இவற்றைக் கொஞ்ச அளவிலேனும் எல்லாப் பாடசாலைகளிலும் நடத்தலாம். பிரதேச வசதி சௌகரியமாக இருக்குமானல் நெசவோடு தையல் வேலையும் சேர்ந்திருப்பது மிகவும் பயனுடையது. வேறு தொழில்களையும் மேற்

கொள்ளலாம். உதாரணம்:—காட்டுப் பிரதேசங்களில் தச்சுவேலை.

தொழிலுக்குச் செலவிடுகிற மொத்த நேரத்தில் இரண்டு பங்கு ஆதாரத்தொழிலுக்கும் ஒரு பங்கு துணைத் தொழிலுக்கும் செலவிடலாம். நம் பள்ளிக்கூடங்களில் எங்கும் பொதுவாக நூற்றல்தான் ஆதாரத் தொழிலாக இருக்கிறது. தோட்ட வேலை துணைத் தொழிலாக இருக்கிறது. தோட்ட வேலையை ஆதாரத் தொழிலாகக் கொள்ளக் கூடிய வசதியும் ஆற்றலும் இருந்தால், மிகவும் நன்று.

ஆதாரத் தொழில் - நூற்றல் :— ஆரம்பத்திலிருந்தே கருவிகளைப் பாதுகாத்தல் முக்கிய பயிற்சியாகும். உபயோகிக்காதபோது கருவிகளைத் துடைத்துத் துப்புரவாக வைத்திருக்க முதல் வகுப்புப் பிள்ளைகள் அறிந்திருக்கவேண்டும். திருத்தமான அமைப்புடைய கருவி எது என்று அவர்களுக்குத் தெரியவேண்டும். பருத்தி விளையும் பகுதியில், ஆசிரியரின் துணைகொண்டு பிள்ளைகளுக்குப் பருத்தியெடுக்கும் வேலை முதல், நூலைச் சிட்டம் போடுதல், ஈரிழை முறுக்குதல் வரையில் எல்லா வேலைகளையும் கற்றுக்கொடுக்கலாம். ஆனால், பஞ்சு வெட்டுவது மட்டும் இதற்கு விலக்கு. ஆசிரியராவது, பெரிய வகுப்புப் பிள்ளைகளாவது பஞ்சு வெட்டிக் கொடுக்கவேண்டும். பருத்தி கிடைக்காதபோது, பருத்தி எடுத்து அரைப்பதற்குப் பதிலாகப் பிள்ளைகள் பஞ்சு சுத்தம் செய்து, பஞ்சு வெட்டத் தயார் செய்து கொடுக்கலாம். வேலை முறைகள் பின் வருவன : பருத்தியெடுத்தல், பருத்தி அரைத்தல், பஞ்சு சுத்தம் செய்தல், பட்டை போடுதல், தக்கிளியால் நூற்றல், ஈரிழை முறுக்குதல், வீசனத்தில் வீசுதல், சிட்டம் போடுதல் (6 மாதப் பயிற்சிக்குப் பின்)

வேலையின் தரம் :—

வேலை நாட்கள் 200.
தினம் 2 மணி நேரம்.
நூற்க 1 மணி, பூர்வாங்க வேலைக்கு 1 மணி.
மொத்த வேலை நேரம்—400 மணி.

[குறிப்பு:—நியாயமாகப் பாடசாலைகள் 220 நாட்களுக்கு மேல் வேலை செய்யவேண்டும். அன்றியும் முதல் வருஷக் கடைசியில் இருக்கவேண்டிய வேகம், மணிக்கு 60 சுற்றுக்கள்.]

உற்பத்தி :—மணிக்கு 40 சுற்று வேகம்.
அதாவது வருடத்துக்கு $12\frac{1}{2}$ சிட்டம்.
ஈரிழை முறுக்கு நூலாயிருந்தால் 6 சிட்டம்.

தரம் :—சராசரி நம்பர் 8—10
பலமும் சமமும் 60 சத விகிதம்.
கழிவு 5 சத விகிதம்.

குறிப்பு :—முதல் வகுப்பு நூற்பு வேலையில் அதிக நூல் உற்பத்தியாக வேண்டும் என்று ஆசிரியர் எண்ணக் கூடாது. நூற்பது கொஞ்சமாயிருந்தாலும், அந்த நூல் போதுமான பலமும் சமமும் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். பிள்ளைகள் உழைப்பினால் கிடைத்த பொருள் ஆரம்பத்திலிருந்தே பயன்படத் தக்கதாய் இருக்க வேண்டும். முதல் கொஞ்ச நாளில் நூற்புத் தொழில் முறையைச் சற்று முயன்று நன்றாய்க் கை வரும்படி செய்து விட்டால், வேகம் பின்னால் தானே அதிகரிக்கும்.

பெறவேண்டிய அறிவு :—1. பிள்ளைகள் நல்ல நூல் எது என்று அறியவேண்டும்.

2. நல்ல தக்கிளி எது என்று அறியவேண்டும்.

3. சுற்றிய நூலை எண்ணவும், சுற்றுக்களைக் கூட்டவும் அறியவேண்டும்.

4. பருத்தி பயிரிடுவது முதல் துணி நெய்து முடிக்கும் வரை உள்ள எல்லா வேலை முறைகளையும் பிள்ளைகள் கவனித்துத் தெரிந்திருக்கவேண்டும்.

## 4. துணைத் தொழில்—தோட்டவேலை

பின்னே குறிப்பிடுகிற பாடமுறை முழுமையும் ஒரு சமயம் செய்யமுடியாது போகலாம். தோட்ட வேலையானது குறித்த பிரதேசத்தின் இயற்கையமைப்பு, மண்ணின்

தரம், நீர் வசதி, பருவகாலம், பிள்ளைகளின் வாழ்க்கை நிலை ஆகிய பல தன்மைகளைப் பொறுத்தது. ஆதலால் இதைத் துணைத் தொழில் என்ற நினைவோடு ஆசிரியர் சாத்திய மானவரையில் செய்ய முயல்வது போதுமானது.

தோட்டவேலை சம்பந்தமாக இவ்வகுப்புப் பிள்ளைகள் வீட்டில் தங்களுக் கியன்ற வரையில் பெற்றோருக்கு உதவுவதோடு, பாடசாலையிலும் பெரிய வகுப்புக் குழந்தை களுக்கு உதவுவார்கள். இவர்கள் வளர்ச்சிக்கும் திற மைக்கும் தக்கபடி இவர்களுக்கென்று தனியாக அழகான சிறு கருவிகள் - மண்வெட்டி, பாரை, களைக்கொட்டு, பூவாளி முதலியன-தயாரித்துத் தரவேண்டும். கருவிகளை, வேலை முடிந்தபின் துப்புரவு செய்து முறையாக அடுக்கி வைக்கும் பயிற்சியில் அதிகக் கவனம் வேண்டும். ஆரம்ப வகுப்புக்களில், மற்ற வேலைகளோடு கூட பூஞ்செடிகள் பயிரிடும் வேலையும் இருக்குமானால், குழந்தைகளுக்கு இன்ப மளிப்பதாக இருக்கும். பூஞ்செடிகள் பிள்ளைகளுக்கு நிறபேதத்தை யுணர்த்தவும், சித்திரம் வரைய நிறங்கள் தயார் செய்யவும் உதவியாயிருக்கும்; சிறந்த புலனறிவுப் பயிற்சி கிடைக்கும். இதனால் சொல்வளமும் ஏற்படும்.

தோட்டத்தில் செய்யும் வேலை :— 1. நிலத்தைப் பெரிய வகுப்புப் பிள்ளைகள் கொத்திய பிறகு எருவிட்டுத் தயாரித்தல். செடி வளர்ச்சிக்குத் தேவையானவை—மண், நீர், வெளிச்சம், காற்று, வெய்யில்; உணவுச் சத்து.

2 விதை விதைத்தல், விதைகளுக்கு இடையே செடிக்கு ஏற்றமாதிரி போதுமான தூரம் விடுதல்- எறும்பு முதலியன விதைகளை இழுத்துக்கொண்டு போகாத படி ஏற்பாடு செய்தல் - சாம்பல் தெளித்தல், விதையை மூடுதல். விதையை ஊன்ற வேண்டிய ஆழம். விதை முளைப்பதற்கு வேண்டியவை :—காற்று, ஈரம், வெப்பம்.

3. நாற்று நடுதல். நடத் தக்கவை - கத்தரி, தக்காளி, மிளகாய், முளைக்கீரை. நடத் தகாதவை - கொத்தவரை, வெண்டை, முள்ளங்கி; பாகல் முதலிய கொடிவகைகள்.

4. பாதையோரம் பொன்னாங்கண்ணி, மான்செவிப் பசலை போன்ற கீரை நடுதல். நடும்முறை - இணுக்கு ஒடித்தல், வரிசையாக ஊன்றுதல்.

5. நாற்றுக்களைக் கவனித்தல்—நீர் பாய்ச்சுதல், களையெடுத்தல், மேல்மண்ணைக் கிளறி விடுதல், பூச்சியெடுத்தல், செடி - அதன் பலவேறு அங்கங்கள் - விதை, முளை, வேர், தண்டு, இலை, பூ, காய், பழம்.

6. காய்களைப் பறித்து நிறுத்தல் - விதைகள் சேகரம் செய்தல். முளைக்கக்கூடிய விதை, முளைக்காத விதை.

7. குறிப்பிட்ட சில பொன்னாங்கண்ணி முதலிய கீரைக்கொழுந்துகளைச் சமைப்பதற்காகக் கிள்ளி எடுத்தல். அறைக் கீரைப் பாத்தியில் அப்படியே.

முடியுமானால் பின் வரும் விஷயங்களைக் கவனிக்கும்படி பழக்கலாம். 1. கிராமத்திலுள்ள தோட்டங்கள், வயல்கள், படுகை, காடு, தோப்பு ஆகியவற்றைப் பார்த்து அறிதல். 2. அந்தந்தப் பருவகாலத்தில் கிடைக்கிற காய், பழங்களையும் அவற்றின் விலையையும் அறிதல். 3. பலவகை விளைபொருள்களை அறுவடை செய்து, சேமித்து, விற்பனை செய்வதைத் தெரிந்துகொள்ளுதல். 4. சுற்றுப்புறத்திலுள்ள பறவைகள், பூச்சிகள், மிருகங்கள் முதலியன. வளர்ப்பவை, தம் இச்சையாய்த் திரிபவை. மனிதருக்கு நன்மை செய்பவை, தீமை செய்பவை.

மற்றத் தொழில்கள் :— அனேக கிராமங்களில் சுலபமான சில கைத்தொழில்கள் பரம்பரையாக நடைபெற்று வருகின்றன. பெரும்பாலும் இவை அவரவர் வீட்டுத் தேவைக்கு உரியனவாய் இருக்கும். ஆங்காங்கு கிடைக்கும் மூலப்பொருள்களையும் இவை பொறுத்திருக்கும். முடிந்தவரையில் பாடசாலையில் முதல் வகுப்பிலேயே இவற்றை மேற்கொள்ள முயலலாம். இதனால் கிராம வாழ்க்கைக்கும், பள்ளிக்கூட வாழ்க்கைக்கும் தொடர்பு ஏற்படும். சுயதேவைப்பூர்த்திக்கும் இது உதவி செய்யும்.

சில மாதிரித் தொழில்கள்—துடைப்பம் தயாரித்தல்—பலவகை பனையோலைத் தடுக்குப் பின்னுதல், கீற்று முடைதல், தேங்காய் நார்க் கயிறு திரித்தல், கற்றாழை நார், புளிச்சை நார் முதலியன; கோரைப்பாய் நெய்யக் கோரை தயாரித்தல்

5. சாமானிய விஞ்ஞானம்

இது தனிப்பாடம் அல்ல. தினசரி செய்கிற துப்புரவு வேலை, தோட்டவேலை முதலியவற்றில் ஒவ்வொன்றிலும் காட்ட வேண்டிய கவனமே விஞ்ஞானமாகும். இயற்கையைக் கவனித்து அறிவதாலும் விஞ்ஞான அறிவு உண்டாகும். உதாரணமாக நட்சத்திரத்தைப் பார்த்தல், பறவைகளைக் கவனித்தல், பூ இலை சேகரித்தல், படங்கள் சேகரித்தல், சில உருவங்கள் அமைத்தல் ஆகிய வேலைகளில் சில பிள்ளைகள் அதிக ஆர்வம் காட்டுவார்கள். இந்த ஆர்வத்தைப் போற்றி வளர்க்கவேண்டும். இது ஆயுள் முழுமைக்கும் இன்பம் தருவதோடு அறிவு வளர்ச்சிக்கும் இடமாயிருக்கும்.

விஞ்ஞானம் பற்றிய பாடமெதுவும் ஆரம்ப வகுப்புக்களில் தனிப் பாடமாகக் கற்பிக்கலாகாது. வேலைகளில் வரும் பிரசினைகளை அல்லது உண்மைகளை எடுத்து விளக்கும்போது எழும் சந்தர்ப்பத்தில் விஞ்ஞான அறிவைப் புகட்டவேண்டும். ஆரோக்கிய வாழ்க்கை, தோட்டவேலை முதலான பாடங்களில் அனேக விஞ்ஞானப் பகுதிகள் சொல்லப்பட்டன. பின் வருபவற்றை மேலும் இங்கே குறிப்பிடலாம்.

1. சூரிய உதயம், அஸ்தமனம்; வளர்பிறை தேய்பிறை அமாவாசை, பௌர்ணமி; நட்சத்திரங்கள், கிரகங்கள், கிரகணம், வானவில், இடி, மின்னல்.
2. வெய்யில், மப்பு மந்தாரம் மழை காற்று ஆகியவை பற்றி வகுப்பில் சுலபமான ஓர் அட்டவணையைக் காற்று, மழை முதலியன பொருத்தமாயுள்ள ஒரு மாதத்தில் தயாரிக்கலாம்.
3. சுற்றுப்புறமுள்ள கைத்தொழில்களை அறிதல் - மக்கள் வாழ்க்கை முறையை அறிதல்.

6. குடிமைப் பயிற்சியும் சமூக சாஸ்திரமும்

1. அடிப்படையான நோக்கங்கள் :- ஆதாரக் கல்வியின் நோக்கம் தனி மனிதனிடம் உத்தமப் பிரஜைக்குரிய தகுதி வரச்செய்வது. இதற்கு அவனுடைய அறிவு வளர்ச்சியோடு கூட பழக்கவழக்கங்களும் மனப்போக்கும் முக்கியமானவை. சிறு பிள்ளை செய்கிற ஒவ்வொரு வேலையிலும் அவன் குடிமைப் பயிற்சி பெறுகிறான். சமூக ரீதியாக ஆரோக்கிய வாழ்க்கை அவனது கடமையாகிறது. சுற்றுப்புறத் துப்புரவு முதலிய பாடங்கள் குடிமைப் பயிற்சியின் ஒரு பகுதி. தொழிலில் பெறவேண்டிய திறமையெல்லாம் நாட்டின் பிரஜையாக அவன் வாழும்போது அவனுக்கும், சமூகத்துக்கும் வெற்றிதரத் தக்கவை. அப்படியே கேளிக்கைகள், கலைகள் முதலியன மனத்துக்கு உல்லாசமும் இன்பமும் தந்து மனிதகுலத்தின் நாகரிகத்தையே மேம்படுத்தும். இவை யாவும் சமூக சாஸ்திரங்களே. வகுப்பில் பாடமாய்க் கற்பிப்பதால் மட்டும் இவை வருவதில்லை. ஆசிரியரின் நடத்தையைப் பின்பற்றுவதால் வரும். ஆகவே சமூகத் துறையில் ஆசிரியர் பொறுப்பு மிகவும் பெரியது.

2. வேலை முறையும் திட்டமான நோக்கங்களும் :— மக்கள் எப்படி வாழ்கிறார்கள், எப்படி ஒத்துழைக்கிறார்கள், சரித்திரம் அவர்களுடைய போக்கை எப்படி நிர்ணயிக்கிறது என்று அறிவதே பாடத்திட்டம் ஆகவே பூகோளம், சரித்திரம் என்றால், இரண்டும் மக்களின் வாழ்க்கையும் வரலாறுமாகும். மனித குலத்தின் போக்கையும், எண்ணத்தையும் உருவாக்கின பெரியார்களின் வரலாறுகளை அறிவதே பிரதானம். பக்தர்கள், ஞானிகள், கலைஞர்கள், விஞ்ஞானிகள், நாடு கண்டவர்கள், சமூகத் தொண்டர்கள் ஆகியோருடைய வரலாறுகளை அரசியல் தலைவர்கள் சமூகத் தலைவர்கள் வரலாறுகளைப் போலப் பிரதானமாய்க் கருதிக் கற்கவேண்டும்.

3. செயல் திட்டங்கள் :—(அ) வகுப்பு-பாலர் சபை-மந்திரிகள் தேர்தல் இவை தனியாகவும் கூட்டாகவும் வரவேண்டிய பொறுப்புணர்ச்சிக்குப் பிறப்பிடம். பின்வரும்

பொறுப்புக்கள் குறிப்பிடத் தக்கவை. 1. தினசரித் துப்புரவு. 2 நூற்பு, தோட்டவேலை, விளையாட்டு இவற்றுக்கான கருவி முதலியவற்றை ஒழுங்குபெற வைத்தல். 3. உணவு பரிமாறுதல், உண்ணுமிடம் சுத்தம். 4 பிரார்த்தனைக்கு உட்காருதல். 5. குடிதண்ணீர். 6. புதிய பிள்ளைகளுக்கு உதவி. 7. பாடசாலைக் கேளிக்கைகள், விழாக்களில் உதவி.

வகுப்பு ஒரு ஜனநாயகக் குடும்பம் போன்றதாகும். இதில் ஆசிரியர் சகோதரர். அவர் உண்மையான அண்ணாவாக இருப்பார். குடும்பத்தைப்போல இங்கும் பலவீனர்களுக்கு நிச்சயம் சலுகை உண்டு. பாலர் சபையின் ஆட்சி முறையே கல்வி போதனைக்குப் பயன்படும். கூட்டம் நடத்தும் முறை, திட்டங்கள் பற்றிய விவாதம், மந்திரி அறிக்கை அங்கீகாரம், ஓட்டு, நிகழ்ச்சி பற்றிய அறிக்கை முதலியவை, அபிப்பிராய பேதத்தை யுணர்தல். பெரும்பான்மையோருக்கு அடங்கிநடத்தல், எதிரிக்கும் சந்தர்ப்பம் அளித்தல் முதலான அரிய சமூகப் பண்புகளை வளர்க்கும்.

(ஆ) பாடசாலையின் கூட்டுறவுச் சங்கம் :— பெரிய பாடசாலையில் இச் சங்கம் ஏற்படுத்தலாம். கணக்கெழுதும் பயிற்சி, நேர்மை, நம்பிக்கை, பொறுப்பு, வியாபார நுணுக்க அறிவு முதலான பண்புகள் வளர்வதற்கு இது துணையாக இருக்கும்.

(இ) பத்திரிகைச் செய்தி :— ஊர்ச்செய்தி, நாட்டு நடப்பு. இவை சமூகம், பொருளாதாரம், அரசியல் பிரசினைகளை அறிமுகப்படுத்தக் கருவிகளாயிருக்கும். வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் தழுவியிருக்கும். குழந்தையின் உள்ளம் விரிவடைய இவை பெருந்துணை. சில உதாரணங்கள்:

சமூகம் :— மதுவிலக்குச் செய்தி, கள்குடி, இதனல் வரும் பலவகைக் கெடுதி, சிறைவாசம். பிச்சையெடுத்தல், பொருளாதாரம், வியாபாரம்—பிற நாடுகளின் தொடர்பு. அரசியல்—தேர்தல், கட்சிகளின் வேலைத்திட்டம். நாகரிகம்—ஒரு தலைவர் அயல்நாடு போகிறார், அயல் நாட்டின் சரித்திரம், அதன் பண்பாடு.

(ஈ) விழாக் கொண்டாட்டம் :—சமயம், சமூகம், தேசியம், இலக்கியம் பற்றிய விழாக்கள், குறிப்பான சில தினங்கள், மரம் நடுதல் விழா போன்றவை. பிள்ளைகள் தங்களுக்கு இயன்ற அளவு இந்த விழாக்களில் கலந்து கொள்ள வேண்டும்.

[விழாக்களின் அட்டவணை யொன்று பின்னர் தரப் பட்டுள்ளது.]

4. பயிற்சிக்கான திட்டம் :—(அ) சமூக நடத்தைக் கேற்ற செயல் முறைப் பயிற்சி.

பொது :—1. பெரியவர்கள், தன்னிலும் இளையவர்கள், விருந்தினர், பள்ளிக்கூடத்தைப் பார்க்க வருபவர்கள் முதலியோரை வணங்கவேண்டிய கிரமமான முறைகள்.

2. வீட்டில் தம்பிகளோடும் தங்கைகளோடும் எப்படிப் பழகுவது ?

3. ஒரு கூட்டத்திலோ அல்லது சபையிலோ எப்படி நிற்பது, இருப்பது, பேசுவது ?

4. மற்றவர்கள் பேசும்போது குறுக்கே பேசாமை.

5. இருவர் பேசிக்கொண்டிருக்கும்போது அவர்களுக் கிடையே புகுந்து பேசாதிருப்பது.

6. வழியை மறைக்காமலிருப்பது.

7. பேசும்போது கூச்சல் போடாதிருப்பது.

8. கெட்ட வார்த்தை பேசாதிருப்பது.

9. மரியாதையாகக் கேட்பது, விடை கூறுவது.

10. பேசும்போது தன் முறை வரும்வரை பொறுத் தல்.

11. கூட்டத்தில் இடித்துத் தள்ளாமல் ஒருவர்பின் ஒருவராக நின்று முறை வரும்வரை காத்திருப்பது.

12. மற்றொருவருடைய சாமானை அவர் அனுமதியின்றி எடுக்காமலிருப்பது.

(ஆ) உண்ணுதல் :—ஆதாரப் பாடசாலையில் ஒரு வேளை உணவளிக்க ஏற்பாடு செய்திருந்தால் சமையல், பரிமாறுதல், சமையல் அறை உண்ணுமிடம் முதலியவற்றைத் துப்புரவு செய்தல் முதலான வேலைக் கிரமங்களையும் சமூகப் பயிற்சி தருவதற்குப் பயன்படுத்திக்கொள்ளலாம். உதாரணங்கள்:

1. உண்ண வரும்போது ஒழுங்காகவும் அமைதியாகவும் வந்து உட்காருதல்.

2. தனது முறை வரும்வரை காத்திருத்தல்.

3. தனக்குத் தேவையான அளவுள்ள உணவை மட்டுமே பெற்றுக்கொள்ளுதல்.

4. உணவு கொஞ்சமாக இருந்தால் அதைக் கிரமமாகப் பங்கிட்டுக் கொள்ளுதல்

5. அழகாக உண்ணுதல்.

6. உண்கலம், பரிமாறும் கலம் ஆகியவற்றைச் சுத்தம் செய்து உரிய இடத்தில் வைத்தல்.

(இ) தொழில் ;—1. தொழிற்பயிற்சிக்கான கருவிகளையும், தளவாடங்களையும் நல்ல விதமாக உபயோகித்தல்.

2. தொழிலுக்கான பொருளையும், தளவாடங்களையும் மற்றவர்களுடன் பங்கிட்டுக் கொள்ளுதல்.

3. தனது முறை வரும்வரை காத்திருத்தல்.

4. தனித் தனிக் குழாமாக வேலை செய்தல்.

5. வேலைமுடிந்தபின் வகுப்பறையைத் துப்புரவாக்கித் தொழிலுக்கான பொருளையும் தளவாடங்களையும் ஒழுங்காக எடுத்து வைத்தல்.

(ஈ) விளையாட்டு :—1. ஏமாற்றாது விளையாடுதல்.

2. மற்றவனது பலவீனத்தைத் தன் லாபத்துக்கு உபயோகியாதிருத்தல்.

3. மற்றவர் வீட்டுக் குழந்தைகளையும் தன்னுடன் வந்து விளையாட அழைத்தல்.

4. நேர்மை.

(உ) இல்லம் :— 1. பெற்ரேருக்கு உதவி செய்தல்.

2. தம்பி தங்கையரைக் கவனித்துக் கொள்ளுதல்.

3 வீட்டையும் சுற்றுப்புறத்தையும் துப்புரவாக வைத்திருக்க உதவி செய்தல்.

4. வீட்டிலுள்ள ஆடுமாடுகள், கோழி முதலியவற்றைப் பார்த்துக்கொள்ள உதவி செய்தல்.

5. வயல்களைப் பார்க்கவும், காவல் காக்கவும் உதவி செய்தல்.

6. விருந்தினரைப் பேணுதல்.

(ஊ) பிரதேச சமூக வாழ்க்கையைக் கவனித்தல் :— உணவு, உடை, இருப்பிடம், தொழில், ஜலாதாரம், கடைத் தெரு, தபாலாபீசு, கோயில்,சந்தை, பண்டிகை, கேளிக்கை- விஞ்ஞானப் பாடத் திட்டத்தையும் பார்க்கவும்.

(எ) பிற இடங்களையும் பழக்க வழக்கங்களையும் பற்றிய கதைகள் :—நம்மிலும் முழுமையும் மாறுபட்ட வாழ்க்கையுடைய பிள்ளைகள். உதாரணம்: பாலைவனத்து நாடோடிகள், காட்டிலுள்ள வேடர்கள், கடற்கரையிலுள்ள செம்படவர்கள், வேறு குளிர்ந்த பிரதேசத்திலுள்ள குடியானவர்கள், நம்மிடையே பழகும் நரிக் குறவர்கள்—இவர்கள் வாழ்க்கையும் இவர்கள் பற்றிய கதைகளும்.

7. எண்ணும் எழுத்தும்

செயல் திட்டம் எல்லாவற்றிலும் கருத்தை வெளியிட உதவுவது பாஷை. ஆகையால் பாடசாலை வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளிலும் நிறைந்த தொடர்புடையது தாய்

மொழிப் பயிற்சி. (இதில் இலக்கியப் பயிற்சியைக் கலை பற்றிய 8 ஆம் பாடத்தில் காணலாம்.)

1. கருத்தை வாய்மொழியாக வெளியிடுதல் :— தெளிவாகவும், சுத்தமாகவும், பேசவும் திருத்தமாக உச்சரிக்கவும் குழந்தைகளுக்குப் பயிற்சியளிக்கவேண்டும். இதற்குப் பின்வரும் சந்தர்ப்பங்கள் பயன்படும்.

(அ) வீட்டுச் செய்தி, ஊர்ச்செய்தி சொல்லுதல்.

(ஆ) பாடசாலைச் செயல் திட்டங்கள் வீட்டு வாழ்க்கை கிராமத் தொழில்கள் ஆகியவை பற்றி அதிகமான சொற்களை உபயோகித்துப் பழகுதல். கருவிகள், வேலை முறைகளுக்குச் சரியான தமிழ்ப் பெயர் தெரிந்திருக்க வேண்டும்.

(இ) மாணக்கரும் பிள்ளைகளும் பலவகைக் கதைகள் சொல்லுதல். தினசரி செயல் திட்டத்தில் சிறப்பாக சமூக சாஸ்திரத்தில் உள்ள வேலைத் திட்டத்தில் கதைக்கான விஷயங்கள் அனேகம் கிடைக்கின்றன. இயற்கைக் கதைகள், நாடோடிக் கதைகள், கட்டுக்கதைகள், பிறநாட்டுக் கதைகள், பொருளில்லாத கதைகள், வேடிக்கைக் கதைகள் முதலியவற்றைக் குறிப்பிடலாம். உதாரணங்கள் : பஞ்ச தந்திரம், இதோபதேசம், தெனலிராமன், மரியாதைராமன் கதைகள். அந்தந்த ஊர்க் கதைகள், இதிகாசக் கதைகள், காப்பியக் கதைகள் புராணக் கதைகள், பாரதம்.

(ஈ) இலக்கியச் சுவை பொருந்திய எளிய பாடல்கள், பாடல் ஒப்புவித்தல், அபிநயப்பாடல், நாடகம்.

2. வாசிப்பும் எழுத்தும் :—தினசரிச் செயல் திட்டங்கள் சம்பந்தமாக வாசிப்பும் எழுத்தும் தொடங்கலாம்.

குறிப்பு :- எழுத்துப் பயிற்சியில் ஆதாரக்கல்வி ஒரு பெரிய அடிப்படையான மாறுதல் செய்கிறது. இதுவரை இலக்கண ரீதியாகக் கற்பித்த எழுத்துப் பயிற்சி முறையை விட்டு மனோதத்துவ ரீதியாகப் பயிற்சி கொடுக்கிறது. எழுத்துக்களின் முறையும், வடிவமும் அவசியமும் தனித் தனியாகக் குழந்தைக்கு விளங்கமாட்டா. ஏனெனில்,பொரு

ளில்லாத வெறும் எழுத்தில் குழந்தையின் மனம் பற்ருது. பல எழுத்துக்கள் சேர்ந்த பொருளுடைய பழக்கமான ஒரு சொல்லாக இருந்தால் குழந்தை அதைப் புரிந்துகொண்டு கற்கவும், எழுதவும் ஆசைப்படுகிறது. சொற்களில் கடினம் சுலபம் என்பதில்லை. தெரிந்தது தெரியாதது என்பது தான் முக்கியம். தன் பெயரை எழுதுவதில் இன்பம் அதிகம். பெயர் எவ்வளவு நீளமாயிருந்தாலும் குழந்தைக்குக் கஷ்டமாயிருப்பதில்லை. அதுபோல, வீட்டிலுள்ளவர்கள், வகுப்புத் தோழர்கள், பழகுகிற ஆடுமாடுகள் ஆகியோர் பெயரை எளிதாகப் பிழையின்றி எழுதப் பழகிவிடுகிருர்கள். இப்படித் தன் அன்புக்குரியவர்கள் பெயரை எழுதுவதிலும், எழுதி அவர்களிடம் காட்டுவதிலும் குழந்தைக்கு இன்பம். காரியத்தைச் சாதித்துவிட்டோம் என்ற வெற்றி உணர்ச்சியும் பிறக்கிறது. பின்னுல் செயல் பற்றிய சொற்கள் வாக்கியங்கள் முதலியவற்றை மிக்க விருப்பத்தோடு கற்கவும் எழுதிப் பயிலவும் இது உதவி செய்கிறது.

சில சொற்கள் பழகியவுடன், தொடர்கள் அல்லது வாக்கியங்கள் பழக்குவது, விரைவாய்க்கற்கத்துணைசெய்யும். எப்படி குழந்தையின் கைகால்கள் சுறுசுறுப்பாய் ஒருவேலை செய்ய முனைகின்றனவோ அதுபோல, அது கற்கும் சொற்களும் ஒரு காரியத்தைச் செய்வனவாக இருக்கவேண்டும். இருந்தால்தான் உள்ளத்திலுள்ள சுறுசுறுப்பும் உற்சாகமும் வெளிப்பட்டுத் திருப்தியடைகின்றன. உதாரணமாக தக்கிளி, பாய் என்று சாமானுடன் பழகியகுழந்தை தக்கிளி பிடி, தக்கிளிசுழற்று, பாய்விரி, பாய்சுருட்டுஎன்று செயலாக எழுதுவதில் அதிக வேகமாகப் பயிற்சி பெறுகிறது. அதாவது, எழுதுவதெல்லாம் பொருளுடையது, காரியம் சாதிப்பது என்ற உணர்ச்சி பெறுகிறது. இவ்விதம் எளிய வாக்கியங்கள் பல எழுதிப் பழகியபின் குழந்தையின் வாழ்க்கையிலிருந்தே சொல்வளத்தைப் பெருக்கிக் கொள்ளலாம். சொற்களை முறைப்படுத்தி எழுதும்போது எழுத்துணர்ச்சியும் எழுத்தறிவும் பிறக்க இடமாயிருக்கிறது. மாதிரிச் சொற்களையும் வாக்கியங்களையும் கீழே காணலாம். [இவை பூர்த்தியானவை அல்ல; மாதிரிக்காகத் தரப்பட்டவை.]

தன் பெயர்—சந்திரகாசன்; தோழர் பெயர்கள்.

| குடும்பம் | வகுப்பு | நூற்றல் | செயல் |
|---|---|---|---|
| அப்பா | கதவு | தக்கிளி | நூல் |
| அம்மா | சன்னல் | அட்டை | சுழற்று |
| அண்ணு | அறை | பட்டை | பிடி |
| அக்கா | தரை | பருத்தி | ஊற்று |
| மாமா | பலகை | பஞ்சு | வீசு |
| மாமி | தடுக்கு | விதை | எண்ணு |
| தம்பி | பாய் | நூல் | சுற்று |
| தங்கை | பெட்டி | கழிவு | கழற்று |
| தாத்தா | பானே | சிட்டம் | அரை |
| பாட்டி | மடக்கு | வீசனம் | போடு |
| பாப்பா | குவளை | மணே | சுருட்டு |

| செயல் | செயல் | செயல் |
|---|---|---|
| தக்கிளி எடு | பட்டை பிரி | நூல் இழு |
| தக்கிளி பிடி | பட்டை எடு | நூள் முறுக்கு |
| தக்கிளி சுழற்று | பட்டை பிடி | நூல் சுற்று |
| தக்கிளி நிறுத்து | பட்டை வை | நூல் வீசு |
| தக்கிளி வை | பட்டை சுருட்டு | நூல் எண்ணு |

வாக்கியங்கள்

| | | |
|---|---|---|
| தக்கிளி சுழற்று | பாய் விரி | விதை ஊன்று |
| பட்டை பிடி | பலகை துடை | விதை தெளி |
| சாம்பல் கொடு | விளக்கு ஏற்று | தலே சீவு |
| அட்டை எடு | கோலம் போடு | எண்ணெய் தடவு |
| நூல் சுற்று | மண் கொத்து | கை கழுவு |
| நூல் வீசு | மண் கிளறு | கால் அலம்பு |
| சுற்று எண்ணு | காய் பறி | முகம் துடை |
| சிட்டம் போடு | கீரை கிள்ளு | பல் துலக்கு |
| பருத்தி அரை | எரு இடு | குச்சி ஒடி |
| கழிவு நீக்கு | நீர் மொள்ளு | தட்டு கழுவு |

**கணிதம் :—** செய்கிற செயல் ஒவ்வொன்றையும அளப்பதுதான் கணக்கு. கணக்கிடுவதற்கு அளவுகோலாகவும், அடையாளமாகவும் ஏற்பட்டுள்ளவை எண்கள். ஆகவே கற்கத் தொடங்கும்போதே எண்ணறிவும் தொடக்கமாகும். 1 முதல் 10 என்ற எண் முறையானது மனித

உடம்பை வைத்தே ஏற்பட்டது என்று தோற்றுகிறது. கைவிரல் - கால் விரல்கள் 10 ஆனமையால் 10 என்பது எண்ணுக்கு எல்லையாக அமைந்திருக்கிறது. குழந்தை பாடசாலைக்கு வரும்போதே பெரும்பான்மையும் 10 வரை தெரிந்தோ எண்ணத் தெரிந்தோ வருகிறது எனலாம். கல்விப் பயிற்சி யில்லாமலே இது ஏற்பட்டிருக்கிறது. இதன் மேல் வரவேண்டிய எண்ணறிவு முழுமையும் வகுப்பில் செய்யும் செயல்களை வைத்தே கற்பிக்கவேண்டும்.

1. 1 முதல் 100 வரை எண்ணுதல்.
2. நிறுத்தலளவை—தோலா, ராத்தல்-பருத்தியெடுத்தல். பலம். சேர், வீசை - காய்கறி நிறுத்தல்.
3. நீட்டலளவை :—அங்குலம், அடி, சாண், முழம், கெஜம் - பிள்ளைகளின் உயரம், மார்புச் சுற்றளவு ; நூல் சுற்று ; வகுப்பு அறை. பாத்திகளின் நீளம் அகலம்.
4. முகத்தலளவை :—படி. மரக்கால். ஆழாக்கு முதலியன - நெல், பயறு முதலியன அளத்தல் சேர் - பால், எண்ணெய் முதலியன.
5. கால அளவை :—நிமிஷம், மணி பகல். இரவு, வாரம். மாதம் வருஷம். கடிகாரத்தை வைத்து ஆசிரியர் குழந்தைகளுக்கு விளக்கிக்காட்டவேண்டும். ஒவ்வொரு குழந்தைக்கும் சரியான மணி பார்த்துச் சொல்வதில் பயிற்சி கொடுக்கவேண்டும்.
6. சுலபமான கூட்டல், கழித்தல் கணக்குகள் :—பருத்தி யெடுத்தல். பட்டைபோடுதல். நூற்றல், தோட்டவேலை. எடைபோடுதல் ஆகிய வேலைகளில்.
7. நாணயம் :—பை, காலணா, அரையணா. ஓரணா, இரண்டணா, காலணா, எட்டணா, ரூபா - காய்கறி, நூல் ஆகியவை விற்பனை சம்பந்தமாக.
8. க்ஷேத்திர கணிதம் :—தோட்டவேலை சம்பந்தமாக நேர்க்கோடு, வளைந்த கோடு, வட்டம், சதுரம் முதலியன.

இவ்வளவைகள், கடைக்கணக்கு சம்பந்தமாகவும், அடிக்கோல், தோலாக்கல், சேர்க்குவளை, கடிகாரம், காசு முதலியவற்றை நேரில் வைத்துக் காட்டியும் கொடுத்துமே கற்பிக்கவேண்டும்.

எழுத்துப் பயிற்சி : நூற்றுநூல் இவ்வளவென்று எழுதவும் படிக்கவும் பழகுதல்.

8. கலையுணர்ச்சி

கலையுணர்ச்சி வருவதற்கான செயல் திட்டத்தைப் பின்வரும் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. இலக்கியம். 2. இசை, நடனம், நாடகம். 3. சித்திரம், சிற்பம், அலங்காரம். 4. விளையாட்டு, ஆட்டம்.

பாடசாலையில் சிறப்பான விழா அல்லது கொண்டாட்டம் நடக்கும் சந்தர்ப்பத்திலும், வருஷத்தில் வேறு ஒன்றிரண்டு முறையும் நல்ல நாடகம் நடத்த ஏற்பாடு செய்தால் இந்தச் செயல் திட்டம் முழுமையும் அதில் நிறைவேறும். இதனால் எல்லோருடைய கலையுணர்ச்சியும், சமயோசித புத்தியும் பிற பண்புகளும் வளர்வதோடு, கூட்டுறவாய் உழைக்கும் ஆற்றலும் பெருகும்.

1. இலக்கிய உணர்ச்சி : முதல் வகுப்பில் இலக்கியச் சுவை பிறப்பதற்கான அடிப்படை மட்டுமே போடலாம். பிள்ளைகளுக்குக் கற்பிக்கிற பாடல்கள் உண்மையான இலக்கியச்சுவை பொருந்தியனவாயிருக்கவேண்டும். அதாவது சொல் நயம், பொருள் அமைப்பு, உணர்ச்சிவேகம், பாடல் அமைப்பு ஆகிய எல்லாம் கலந்த ஜீவதத்துவம் ததும்புகிற பாடல்களே பிள்ளைகளுக்குக் கற்பிக்கத் தக்கவை. இந்தப் பண்புகள் இல்லாத பாடலைப் பிள்ளைகள் தலையில் சுமத்தலாகாது (அதுபோல, பிள்ளைகளுக்குச் சொல்லும் கதைகளும் இலக்கியத் தன்மை பொருந்தியிருக்கவேண்டும்.) எக்காரணம்பற்றியும் இலக்கியப் பண்பு இல்லாத மட்டமான பாட்டுக்களைக் கற்பிக்கக்கூடாது.

2 இசை, நடனம், நாடகம் : இசை : இளம் பிள்ளைகளுக்குப் பாடல் கற்பிப்பதன் நோக்கம் - மிக்க இளம் பிராயத்திலேயே நல்ல சங்கீதத்தில் ஆசையும், ஆனந்தமும் தாள லய உணர்ச்சியும் உண்டுபண்ணுவதாகும். தமிழ் நாட்டுச் சங்கீதம் உலகத்திலேயே மிகவும் உயர்தரமானது. தமிழ்க் குழந்தைகள் இதற்கு வாரிசுகள்.

முதல் வகுப்பு ஆசிரியர் இசையில் வல்லவராயிருப்பது சிறப்பு. இல்லாவிட்டால் மற்ற வகுப்பு ஆசிரியருடைய உதவியேனும் அல்லது ஊரில் நன்றாய்ப் பாடவல்லவர் எவரேனும் இருந்தால் அவர் உதவியேனும் நாடவேண்டும். இது மிகவும் அவசியம் பாடத்தக்க பாடல்கள் இன்னவையென்று கூடுமானவரை தலைமை யாசிரியரே நிர்ணயம் செய்யவேண்டும்.

கருவிகள் : சாமானியமாய்க் கிராமத்தில் வழங்குகிற மிருதங்கம், கஞ்சிரா, தாளம், தம்பூரா, புல்லாங்குழல், சுருதிப் பெட்டி, ஜாலரா முதலியன உபயோகிக்கலாம்.

ஹார்மோனியம் கர்நாடக சங்கீதத்துக்குக் கேடானது. ஆதலால் அதை உபயோகிக்கலாகாது. தெருவில் வரும் பிச்சைக்காரர்கள் சுரைக் குடுக்கை அல்லது ஒரு மரப் பெட்டியில் ஒரு கம்பியைக் கோத்து அதைக் கையால் வருடிச் சுருதி கூட்டிக் கொள்வதைப் பார்த்திருக்கிறோம். இப்படிப்பட்ட ஒரு கருவி செய்ய ஆசிரியர் பழகியிருந்தால் நல்லது. பிள்ளைகளுக்கு இதனால் ஊக்கமும், சுயமுயற்சியும் விருத்தியாகும்

முதல் வகுப்புக்கென்று தனியான ஒரு பாடல்தொகுதி தயாரிப்பது அவசியம்.* அதில் பின்வரும் பாடல் வகைகள் இருக்கலாம்.

1. தேவாரம், திருப்புகழ், பிரபந்தம், அருட்பா முதலியவற்றிலுள்ள எளிய பாடல்கள்.
2. நாமாவளி, பஜனை.
3. தேசியப் பாடல்கள்.
4. நாடோடிப் பாடல்கள், இயற்கைப் பாடல்கள்.
5 வழிநடைப் பாடல்கள்.
6. அபிநயப் பாடல்கள்.
7. அழகான வேறுவகைப் பாடல்கள்.

பாடும்போது கவனிக்கவேண்டியவை: தெளிவாக உச்சரித்தல், பல்லைக் கடித்துக்கொண்டு பாடாமல் தொண்

* மு. அருணாசலம் தொகுத்த சிறுவர் பாடல் பயன்படத்தக்கது.

டையை விட்டுப்பாடுதல், கையால் தாளம் போட்டுப் பாடுதல், நிமிர்ந்து உட்காருதல். மூக்கால் பாடுவதையும் அதிக உச்சஸ்தாயியில் பாடுவதையும் ஆரம்பத்தில் இருந்தே நிறுத்தவேண்டும் எல்லோரும் சேர்ந்து பாடுவதில் விசேஷ கவனம் வேண்டும். எல்லோரும் ஒரே குரலில், தூரத்திலிருந்து கேட்டால் மிகவும் கம்பீரமாயிருக்கும்படி, பாடப் பழகுவது மிகவும் அவசியம். அன்றியும், ஒவ்வொரு பிள்ளையும் பெண்ணும் தனித் தனியாயும் நன்றாயும் பாட வேண்டும். தாளம் மிகவும் அவசியம்.

நடனம் நாடகம் : எல்லோரும் சேர்ந்து நடனமும் நாடகமும் ஆடுவதில் உற்சாக மூட்டவேண்டும். கும்மி கூத்து ஆகியவற்றில் தாளம் தவறாது அடி வைப்பது முக்கியமானது. பிள்ளைகள் இசையோடு தாங்களே நடன விளையாட்டுக்கள் ஏற்படுத்துவது நல்லது. நாட்டு விளையாட்டுக்களில் இசையும் கலந்திருக்கும் அவற்றைப் போற்ற வேண்டும். சிறு நாடகக் காட்சிகள் அதிகம் பழக்கவேண்டும். சுலபமான நாடகமேடை அலங்கரிக்கப் பிள்ளைகள் அறியவேண்டும். முதல் வகுப்பு ஆசிரியர் பின் வரும் பொருள்களில் சிலவற்றைப் பற்றி ஓரங்க நாடகங்களும் கும்மிகளும் தயாரித்துச் சுலபமாக நடிப்பதற்கு ஏற்றபடி தம் வசம் வைத்திருக்கவேண்டும்.

1. விதை விதைப்பு, நடவு, அறுவடை போன்ற விவசாய வேலை பற்றிய நடனங்கள், நாடகங்கள்.
2. அடியவர்கள், சமயாசாரியார்கள் முதலியோர் சரித்திரக் காட்சிகள்.
3. இந்திய சரித்திரம், தமிழ்நாட்டுச் சரித்திரச் சம்பவங்கள்
4. பிற நாட்டுக் குழந்தைகளின் வாழ்க்கை பற்றிய நாடகங்கள்.

3. சித்திரம் : உள்ளத்தை வெளியிடுவதே இங்குப் பிரதான நோக்கம். கரும்பலகை போன்ற பெரிய இடம் வேண்டும். தங்கள் அனுபவத்தையும், கற்பனையையும் ஒட்டிக் குழந்தைகள் எழுதுவார்கள்; சுற்றுப்புறம், தங்கள்

தொழில் சம்பந்தப்பட்ட படம் எழுதுவார்கள். நுணுக்கி எழுதாமல், கையை ஓட்டி எழுதும்படி பழக்கவேண்டும். எழுதுவதில் நேரே உட்காருதல், எழுதுகோலைச் சரியான முறையில் பிடித்தல், எழுதும் கருவி, தன்னுடைய உடை, வர்ணம் முதலியவற்றைத் துப்புரவாகவும் திருத்தமாகவும் வைத்திருத்தல் ஆகியவை கவனிக்கவேண்டிய அம்சங்கள். கற்பலகை, பென்சில், பேனு, வர்ணம், நீரில் கரைக்கிற வர்ணம், வர்ணச் சாக்கட்டி முதலியவற்றை உபயோகிக்கலாம்.

வர்ணமும் உருவமும்: வர்ணத்தின் சரியான பெயர்கள் - எதிரிடை வர்ணங்கள், கறுப்பு, வெள்ளை, சிவப்பு, பச்சை, மஞ்சள் முதலியன. இயற்கை வர்ணங்களைத் தேடுதல். உருவங்களை ஒப்பிடுதல் - உதாரணம்: மாவிலை, அரசிலை, வாழையிலை. நிறமுள்ள விதைகளைப் பல உருவங்களாக அமைத்தல்.

அலங்காரம் -கோலம்: வெள்ளை மாவு - பலநிறப் பொடிகள் தயார் செய்து அவற்றால் அலங்காரக்கோலம். செங்கற் பொடி - சிவப்பு. மாவிலை கோவை யிலைகளை நிழலில் உலர்த்தி இடித்தால் பச்சைப்பொடி. சுண்ணும்பு-வெள்ளை. மணல் - வெள்ளைப்பொடி. கரித்தூள்-கறுப்புப் பொடி.

தோரணம்: மாவிலை - தென்னங் குருத்தோலை, பனங் குருத்தோலை முடைந்து கட்டுதல். காகிதத் தோரணம் வேண்டாம்.

விளையாட்டு ஆட்டம்: இது உடற்பயிற்சிக்குச் சாதகமான பகுதி. சாதாரணமாய்ப் பாடசாலை வேலைமுறை பலவற்றில் போதிய உடற்பயிற்சிக்கும் இடமிருக்கிறது. உதாரணம்:

1. சுகாதார வேலை - பெருக்குதல் குழிதோண்டுதல் தண்ணீர் இழுத்தல் முதலியவை.
2. விவசாய வேலை - கொத்துதல், குழி தோண்டுதல், தண்ணீர் விடுதல் முதலியவை.
3. நடனம், நாடகம் - உடம்பை வசப்படுத்திப் பயிற்றுவதற்கு நல்ல சாதனம்.

சாத்தியமானபோது ஏறுவதற்கும், குதிப்பதற்கும், கயிறு தாண்டுவதற்கும் பொருத்தமான உபகரணங்கள் எளிய முறையில் அமைக்கவேண்டும். வரிசையாக நிற்றல், நடத்தல், ஓடுதல், நிமிர்ந்து நடத்தல், உத்தரவின்படி அழகாகத் திரும்புதல் முதலிய பல பயிற்சிகளைக் கொடி வணக்கத்தையொட்டி உண்டுபண்ணவேண்டும்.

9. கதை, பாட்டு, விளையாட்டு, சித்திரம்

1. கதை: பிள்ளைகளுடைய வாழ்க்கையில் மனோபாவனை அதிக இடம் பெற்றிருக்கிறது. மனோபாவனைக்கு இடமாயிருப்பது கதை. எவ்வளவு சோர்விருந்தாலும் கதையென்ற மாத்திரத்தில் பிள்ளைகள் உற்சாகமடைவார்கள். பச்சைக் குழந்தைகள்கூட எவ்வளவு சிக்கலான கதைகளையும் புரிந்துகொண்டு ஒன்று விடாமல் திருப்பியும் சொல்கிறார்கள். தாங்களே கதை சொல்வதும் உண்டு. வேறுவகையால் பெறமுடியாத அனுபவத்தின் ஆழத்தையும் விரிவையும் விஷய அறிவையும் குழந்தைகள் கதை கேட்பதன் மூலம் பெறுகிறார்கள்.

பேசாத குழந்தைகள் விரைவில் பேச ஆரம்பிப்பதற்கும், சொல்வளத்தைப் பெருக்குவதற்கும் கதை அருந்துணையாய் இருக்கிறது. தவிர, எப்போதும் சுய நோக்கமாகவே இருக்கிற குழந்தை கதை கேட்கும்போது கதையில் வரும் பாத்திரங்களின் சுகதுக்கத்தைத் தானும் மனோபாவத்தால் பகிர்ந்துகொள்ளுகிறது. இதன் பயனாய்ச் சுய நோக்கம் அல்லது சுயநலம் சற்றே குறைந்து பிறர் நலத்தைக் கருதுகிற நல்லியல்பு குழந்தைக்கு வருகிறது. கதை, நாடகப் பண்பையும் பரோபகார உணர்ச்சியையும் வளர்க்கிறது. கதையின் அங்கமாக நீதியைக் கொண்ட அழகான கதைகள் குழந்தையிடம் நல்லொழுக்கத்தை வளர்க்கத் துணைபுரியும்; ஆனால் நீதியே பிரதானம் அன்று.

பிராணிகளைப் பற்றிய கதைகள் குழந்தைகளுக்கு மிகவும் விருப்பமானவை. பஞ்ச தந்திரக் கதைகள் - ஈசாப் கதைகள் - இதோபதேசக் கதைகள் போன்றவை குறிப்பிடத்தக்கவை.

கதை சொல்லும் முறை : ஆசிரியர் உணர்ச்சியில்லாமல் கதை சொல்லிப் பயனில்லை. தாமே அந்தந்தக் கதாபாத்திர மாக இருந்து கதையை நடத்தவேண்டும். கதையில் வரும் உணர்ச்சி, அவருடைய முகபாவத்தாலும், குரலின் ஏற்றத் தாழ்வாலும், கை கால்களின் சேஷ்டையாலும், தேர்ந்து உபயோகிக்கும் சொற்களாலும், பிள்ளைகள் மனத்தைப் பற்றிக்கொள்ளவேண்டும். பிள்ளைகள் கதை கேட்கிறோம் என்ற நினைப்பில்லாமல் தாங்களே கதாபாத்திரங்களாகி விடுகிறார்கள். இந்தப் பழக்கத்தால் மறைமுகமாக ஒரு நல்ல பலன் உண்டு : ஆசிரியர் பிள்ளைகளுடைய நிரந்தரமான அன்பைப் பெறுகிறார்.

சில சொற்களையும், வாக்கியங்களையும், ஓசைகளையும் திருப்பித் திருப்பிப் பலமுறை சொல்லவேண்டியிருக்கும். சொல்வதைப் பிள்ளைகள் விரும்புகிறார்கள். பெரியவர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் திருப்பிச் சொல்லாமல் விடக் கூடாது. சொன்னதையே சொல்வதில் குழந்தைகளுக்குத் திருப்தி அதிகம். கூடுமான வரையில் முதல் வகுப்புக் குழந்தைகள் புரிந்து கொள்ளக்கூடியவாறு கதைகளில் முடிச்சு அல்லது சிக்கலில்லாமலிருப்பது மிகவும் அவசியம். பழங்கதை யென்பதனால் கெடுதியில்லை. குழந்தைகளுக்கு எல்லாம் புதுக்கதைகளே. சொன்ன கதையைத் திருப்பிச் சொல்வது தவறாகாது.

ஒரு வருஷத்தில் 40 கதைகள் சொல்லிக் கொடுக்கலாம். மாதிரிக் கதைகள் சில பின் வருவன :

**புராணக் கதைகள் :** 1. பிரகலாதன். 2. துருவன் 3. தாயுமான சுவாமி 4. இராமனும் பரதனும்-பாதுகைபெற்று வந்தது. 5. கண்ணன் - காளிங்கநர்த்தனம். 6. மார்க்கண்டேயன். 7. கண்ணப்பன்.

**நாட்டுக் கதைகள் :—** 1. சிவாஜி. 2 அசோகர். 3. தேசிங்குராஜன். 4. குமணன். 5. பாரி. 6. வள்ளுவர்.

**இலக்கியக் கதைகள் :—**ஔவை, கபிலர், நாயன்மார், ஆழ்வார்.

பிராணி பற்றிய கதைகள் :— 1. குள்ளநரியும் காக்கையும். 2. பாட்டியும் எலியும். 3. காக்கையும் குடமும். 4. எலியும் தவளையும். 5. நரியும் திராட்சையும். 6. சிங்கமும் சுண்டெலியும். 7. முயலும் சிங்கமும். 8. ஆமையும் முயலும் 9. பூனையும் குரங்கும் - தோசை பங்கிட்டது. 10. ஆமையும் வாத்தும் - குளம் வற்றி வேறு இடத்துக்குச் சென்றது. 11 பாம்பும் காகமும் 12. குல்லாய் வியாபாரியும் குரங்கும் - குரங்கின் தன்மை. 13. மானும் காக்கையும் நரியும் - பஞ்சதந்திரக் கதை. 14. ஓநாயும் கொக்கும் - தொண்டையில் முள் எடுத்தது. 15. நாயின் நல்லறிவு - வைத்தியரிடம் அழைத்துச் சென்றது.

வேடிக்கைக் கதைகள்- :1. மாயவன் கதை. 2. சிட்டுக் குருவி கதை. 3. தெனாலிராமன் பூனை வளர்த்தது.

பிறநாட்டுச் சிறுவர் பற்றிய கதைகள் :–1. பன்றி சுட்ட கதை. 2. நெப்போலியனும் சிப்பாயும். 3. ஹாலந்து நாட்டுச் சிறுவன் கதை. 4. வாஷிங்டன். 5. வில்லியம் டெல். 6. கசபியங்கா.

பாட்டு :—பாடல்களின் தன்மையை மேலே பாடத் திட்டப்பகுதியில் கலையுணர்ச்சி என்ற தலைப்பின்கீழ் இசையென்பதில் சொல்லியிருக்கிறோம். ஒரு வருஷத்துக்குச் சுமார் 50 பாடல்கள் கற்றுக்கொடுக்கலாம். சிலவகை மாதிரிப் பாடல்களைக் கீழே காணலாம்.

1. பிரார்த்தனைப் பாடல்கள்:– 1. கல்லார்க்கும் கற்றவர்க்கும்— அருட்பா. 2. பொழுது புலர்ந்தது—பாரதியார். 3. ஓம்சக்தி - பாரதியார். 4. தலையே நீ வணங்காய்—தேவாரம் 5 திருத்தாய் செம்பொத்தே – பிரபந்தம். 6. அன்பின் வடிவாம் ஆண்டவனே. 7. உலகம் யாவையும்—கம்பர். 8. நாமாவளிகள் : 1. அம்பலத்தரசே. 2. ரகுபதிராகவ. 3. ராஜாராம. 4. நடராஜா.

2. கொடி வணக்கப் பாடல் :— வந்தே மாதரம்— பாரதியார். 2. தாயின் மணிக்கொடி—பாரதியார்.

3. நாட்டு வாழ்த்துப் பாடல் :—1. வாழிய செந்தமிழ்—பாரதியார். ஜனகணமன—தாகுர்.

4. ஆட்டப்பாடல்கள் :—1. பாப்பா பாட்டு—பாரதியார். 2. தேசமுத்துமாரி—பாரதியார். 3 சண்முகர் கும்மி—அருட்பா. 4. முத்துமாரி — பாரதியார். 5. டமர டமர டங்கர டம். 6. வாத்து. 7. கைத்திறன்-தேசிக விநாயகம் பிள்ளை.

5. வழிநடைப் பாடல்கள் :— 1. தேச சேவை செய்யவே. 2. அச்சமில்லை—பாரதியார். 3. வாழ்க வாழ்க உலகெலாம்—நாமக்கல் கவிஞர். 4. விடுதலை—பாரதியார். 5. சங்கூதுவோம்—நாமக்கல் கவிஞர்.

6. இயற்கைப் பாடல்கள் :—பச்சைக்கிளி. 2. கோழி. 3. நாய் - வீட்டுவாசல். 4. பசு. 5. மழை. 6. பசுவும் கன்றும்—தேசிகவிநாயகம் பிள்ளை.

7. தொழில் பாட்டுகள் :- 1. சுழலு தக்கிளி சுழலு. 2. வருவாய் தக்கிளி வருவாயே. 3. பருத்தியைச் சுத்தம் செய்திடுவோம்.

8. கதைப்பாட்டுகள் :- 1. எலியும் தவளையும். 2. காக்கையும் வடையும். 3. நெற்பானையும் எலியும் 4. ஊக முள்ள காகம்.

3. விளையாட்டு :- விளையாட்டினால் ஏற்படுகிற முதல் பயன் குழந்தையின் ஆரோக்கியம். விளையாட்டு குழந்தையிடம் இயல்பாயுள்ள பற்றுக்களைத் தூண்டிவிடுகிறது. ஓரளவு இது குழந்தையிடமுள்ள அதிகமான சக்தியை வெளிப்படுத்தி உல்லாசமாக வேலை செய்யச் செய்கிறது. விளையாட்டிலேயே இயற்கையாக ஒரு கட்டுப்பாடும் நற்பயிற்சியும் அடங்கி இருக்கின்றன. உடல் உறுப்புக்களையெல்லாம் நினைத்தபடி வேலை செய்விப்பதில் விளையாட்டு முக்கியமானது. விளையாட்டு ஓரளவுக்குக் குழந்தை தானாக விரும்பி ஈடுபடும் காரியம் ஆதலால் எப்போதும் உற்சாகம் குன்றாமலிருக்கிறது. ஆகவே• உள ஆரோக்கியமும்

அமைகிறது. வகுப்பில் பிள்ளைக்குப் பிள்ளை நிரம்ப வித்தியாசமிருக்கிறது. சிலர் படிப்பில், சிலர் தொழிலில், சிலர் பாடுவதில் வல்லவர்களாயிருக்கிறார்கள். சிலர் இவற்றில் திறமை இல்லாத போதிலும்கூட விளையாட்டில் திறமை யோடிருக்கிறார்கள். ஆகவே, விளையாட்டில் இவர்களுக்கு முதன்மையான இடம் கொடுத்து ஆசிரியரும் இவர் களுடைய விளையாட்டுத்திறமையைக் கௌரவித்தால், இவர் களுடைய மனம் திருப்தியடைகிறது. வேறு காரியங்களில் திறமையில்லாவிட்டாலும், இந்தத் திறமையை எல்லோரும் அங்கீகரிக்கும்போது, இவர்களுக்கு மேலும் மேலும் ஊக் கம் பெருகி, காலக்கிரமத்தில் எல்லாவற்றிலுமே சுமாரான திறமை வரும்படி செய்கிறது.

அன்றியும், பிள்ளைகளின் கற்பனையை விளையாட்டு வளர்க்கிறது. நேர்முகமாய்ப் பார்க்கவோ, செய்யவோ முடி யாதவற்றைக் கற்பனையால் பையன் பாவித்துக்கொள்ளு கிறான். ஓரளவு மன ஆறுதல் பிறக்கிறது.

விளையாட்டில், பிள்ளைகளிடம் ஆசிரியர் மேற்பார்வை எப்பொழுதும் இருக்கவேண்டும். உற்சாக மிகுதியால் அவர்கள் தங்கள் சக்தியை மீறியும் செல்வதுண்டு ஆனல் அதன்பின்னே அதிகச் சோர்வு ஏற்படும். ஆசிரியர் இதை யுணர்ந்து சோர்வு வந்தபின் விளையாட்டை நிறுத்தாமல் சோர்வு வரும்முன் விளையாட்டை நிறுத்திவிட வேண்டும். இன்னும் விளையாடவேண்டும் என்று சொன்னாலும், ஆசிரி யர் விளையாட்டை நிறுத்தி வேறுவழியில்தான் அவர்கள் ஊக்கத்தைச் செலுத்தவேண்டும். விளையாட்டை அளவு படுத்துவது ஆசிரியரே. விளையாட்டிலும் கூட, உணர்ச்சி மிகவும் முக்கியமானது. இவ் வுணர்ச்சியைத் தூண்ட வேண்டும். பாடசாலையில், பிள்ளைகள் பலர் கூடி விளையாடு வார்கள் ஆதலால், சமூகப் பயிற்சியிலடங்கிய அனேக பண்புகள் பூரண விளக்கம் பெறுவதற்கு இங்கு சந்தர்ப் பம் ஏற்படுகிறது. ஆசிரியர் இச்சந்தர்ப்பங்களைக் கவனித்துப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். பாடசாலைவிளையாட்டுக்கு உபகரணங்கள் தேவையாயிருந்தால், கூடுமானவரை அவற்

றைப் பாடசாலையிலேயே அல்லது கிராமத்துக்குள்ளேயே கிராமிய முறையில் தயாரித்துக்கொள்வது பொருத்தம்.

முதல் வகுப்புக்குச் சில மாதிரி விளையாட்டுகள் இங்கே தரப்பட்டுள்ளன.

தனிக்குழந்தை விளையாட்டு :-1. ஊஞ்சல். 2. சறுக்கு மரம். 3. ஏற்ற விளையாட்டு. 4. கயிறு தாண்டல்.

குழு விளையாட்டு : 1. ராஜாவைக் கண்டுபிடி 2. சிரித்தவர் எழுந்திரு. 3 திரிதிரி பந்தம். 4. பற பற. 5 கண்ணு மூச்சு 6. மணிவிளையாட்டு. 7. நாற்காலி விளையாட்டு (தடுக்கு). 8 இங்கே வா. 9 ரயில் வண்டி. 10. நொண்டி விளையாட்டு 11. கரடி மாமா. 12. கட்டை தூக்கு. 13. கோலி விளையாட்டு. 14 பந்து விளையாட்டு. 15. சில்லு விளையாட்டு. 16 பாண்டி விளையாட்டு.

4 சித்திரம் : முதல் வகுப்புப் பிள்ளைகளுக்கு ஆரம்பத்தில், கற்பலகையில் பலபத்தால் படம் வரையச் செய்யலாம். பிறகு வெள்ளைக் கட்டியாலும், வர்ணச் சாக்கினாலும் முறையே படம் வரையச் செய்யலாம். கொஞ்சம் பயிற்சி பெற்ற பின் ஒரு பக்கம் எழுதாத காகிதங்களைச் சேர்த்து ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒரு சிறு நோட்டு தைத்துக் கொடுப்பது நல்லது. அந்த நோட்டில் முதலில் பென்சிலாலும், பிறகு வர்ணங்களாலும் சித்திரம் வரையச் செய்யலாம். இந்த வர்ணங்களை விலைகொடுத்து வாங்கிஉபயோகிக்க வேண்டியதில்லை. இயற்கையிலிருந்து இந்த நிறங்களைத் தயாரித்து உபயோகிக்கமுடியும். இலைகளிலிருந்தும், பூக்களிலிருந்தும், பழங்களிலிருந்தும் இவற்றைத் தயார் செய்யலாம்.

| | |
|---|---|
| சிவப்புப் போகன் வில்லா<br>பசலைப் பழம்<br>சந்தனச் செம்பருத்தி<br>அடுக்குச் செம்பருத்தி | சிவப்பு |
| ஆரஞ்சு போகன் வில்லா<br>மாதுளம் பூ | ஆரஞ்சு (காவி) |

செம்பருத்திப்பூ—நீலம்
பூலாப் பழம்—கருநீலம்

| | |
|---|---|
| குவளைப் பூ<br>பூசணிப் பூ<br>தங்கஅலரிப் பூ | மஞ்சள் |
| உன்னிப் பூ | —பழுப்பு நிறம் |
| செவ்வலரிப் பூ | —இளஞ் சிவப்பு |
| குப்பைமேனியிலை<br>அகத்தியிலை | பச்சை |

முதல்வகுப்பு ஆசிரியர் சித்திரபாடத்தில் வைத்திருக்க வேண்டிய நோக்கம், பிள்ளைகளின் கலையுணர்ச்சியைத் தூண்டிவிடுவதாகும். ஆகவே, அவர் தாமாகப் பிள்ளைகளுக்கு ஒரு சித்திரம் எழுதிக் காட்டாதபடி காட்சியிலிருந்தும் அனுபவத்திலிருந்தும், கற்பனையிலிருந்தும் பிள்ளைகள் தாங்களாகவே எழுதும்படி தூண்டக் கடமைப்பட்டவராவார். பிள்ளைகள் எழுதும்போது குறைகளிருக்கலாம். வயது வந்தவர்கள் அபிப்பிராயத்தில் சித்திரம் பூரணமில்லாமல், பொருத்தமான அமைப்புடையதாயில்லாமல், தோற்றலாம். ஆனால் குழந்தையானவன் தன் அபிப்பிராயத்துக்குப் பொருத்தமென்று பட்டதையே எழுதியிருக்கிறான். ஆகவே அவன் அபிப்பிராயத்தில் தவறு இருக்கக்கூடும். வரைந்த சித்திரம் தவறு என்று நாம் எண்ணக்கூடாது. ஆகவே, மீண்டும் அவன் மூல உருவத்தைக் காணும்படி செய்து நன்றாய்க் கவனித்துப் பார்க்கும்படி தூண்டவேண்டும். பலமுறை கவனித்துப் பார்த்தபின் அவன் எழுதுவது திருத்தமடைந்துவரும். ஆசிரியர் அதைப் பாராட்டவேண்டும். அப்பொழுது பிழையிருந்தாலும்கூட அதைப் பழிக்கலாகாது. பழித்தால் ஊக்கம் குன்றி வளர்ச்சி தடைப்படும். பிறகு பொதுவான வளர்ச்சிக்கே இடமிராது

## முதல் வகுப்பில் கொண்டாடத் தக்க விழாக்கள்

பாடசாலையில் நடக்கும் எல்லா விழாக்களிலும் எல்லாக் குழந்தைகளும் கலந்து கொள்வது பெரிதும் விரும்பத்

தக்கது. ஆனால் முதல் வகுப்புப் பிள்ளைகள் மிகவும் சிறு குழந்தைகள் ஆதலால், எல்லா விழாக்களிலும் இவர்கள் கலந்து கொள்வது சாத்தியமாயிராது எனினும், பின்வரும் விழாக்கள் சம்பந்தப்பட்ட வரையிலாவது பாடசாலையின் பொதுக் கொண்டாட்டத்தில் இவர்கள் கலந்து கொள்ள வேண்டும். வகுப்பிலும் இவை பாட போதனைக்கு இடமாயிருக்கவேண்டும்.

1. விசேஷ நிகழ்ச்சிகள்

(அ) பாடசாலையின் ஆண்டுவிழா; அதுபோலப் புத்தகசாலைத் திறப்பு விழா, கட்டிடத் திறப்பு விழா முதலானவை.

(ஆ) சூரியகிரகணம், சந்திரகிரகணம், வால் நட்சத்திரம் போன்றவை.

(இ) ஊரில் நடைபெறும் கோயில் உற்சவம் முதலாயின.

(ஈ) பாடசாலைக்கு வரும் விருந்தினர் காரணமாக அமைக்கும் கொண்டாட்டம்.

2. மாதவாரி நிகழ்ச்சிகள்

| இலக்கியம் | சமயம் | சமூகம் | தேசியம் |
|---|---|---|---|
| | சித்திரை | | |
| அப்பர் சுவாமிகள்<br>ராமானுஜர் | | தமிழ் வருஷப் பிறப்பு<br>சித்திரா பௌர்ணமி | சிவாஜி |
| | வைகாசி | | |
| நம்மாழ்வார்<br>சம்பந்தர் | புத்தர்<br>சங்கரர் | | |
| | ஆனி | | |
| மாணிக்கவாசகர்<br>பெரியாழ்வார்<br>அருணகிரிநாதர் | திருமஞ்சனம். | | விவேகானந்தர் |
| | ஆடி | | |
| ஆண்டாள்<br>சுந்தரமூர்த்தி<br>ஔவையார்<br>தேசிகவிநாயகம் | வரலக்ஷ்மி விரதம்<br>ரம்சான் | 18ஆம் பெருக்கு | தாகூர்<br>15 ஆகஸ்டு சுதந்திர தினம் |

| இலக்கியம் | சமயம் | சமூகம் | தேசியம் |
|---|---|---|---|
| | **ஆவணி** | | |
| 11 செப்டம்பர்<br>—பாரதி | அவிட்டம்<br>கிருஷ்ணஜயந்தி<br>விநாயக<br>சதுர்த்தி | | ராமகிருஷ்ண<br>பரமஹம்சர் |
| | **புரட்டாசி** | | |
| ராமலிங்க<br>சுவாமி | நவராத்திரி<br>விஜயதசமி | சரசுவதி பூஜை<br>ஆயுதபூஜை<br>நந்தனர் | 2 அக்டோபர்<br>காந்தி ஜயந்தி |
| | **ஐப்பசி** | | |
| திருமூலர் | கடைமுழுக்கு<br>பக்ரீத் | தீபாவளி | ஜவஹர்லால் |
| | **கார்த்திகை** | | |
| திருமங்கை<br>ஆழ்வார் | கார்த்திகை | | கட்டபொம்மு<br>வ.உ.சிதம்பரம் |
| | **மார்கழி** | | |
| தொண்டரடிப்<br>பொடி<br>தியாகராஜர் | வைகுண்ட ஏகாதசி<br>கிறிஸ்து பிறப்பு<br>முகம்மது பிறப்பு<br>ஆருத்திரா தரிசனம் | போகிப்<br>பண்டிகை | |
| | **தை** | | |
| தாயுமானவர் | பூசம்<br>சண்டேசர்<br>கண்ணப்பர் | பொங்கல்<br>மாட்டுப்<br>பொங்கல்<br>கரிநாள் | சுபாஷ்போஸ்<br>குடியரசு<br>தினம்<br>காந்தியடிகள்<br>மறைவு |
| | **மாசி** | | |
| குலசேகரர்<br>வள்ளுவர் | மகம்<br>சிவராத்திரி | | கஸ்தூரிபா |
| | **பங்குனி** | | |
| கம்பர்<br>காரைக்காலம்மை | ஸ்ரீராம நவமி | காரடை நோன்பு | |

# 8. கால அட்டவணை

ஆதாரக்கல்வி முறையில் தினசரிக் கால அட்டவணை வார முழுமைக்கும் தயாரிப்பது ஆசிரியர் திறமையைச் சோதிக்கிற ஒரு கடினமான வேலை. ஆகவே மாதிரி அட்டவணை யொன்றைக் கீழே கொடுத்திருக்கிறோம்.

சாதாரணமாய் வாரத்தில் $5\frac{1}{2}$ நாட்கள் வேலைசெய்வது வழக்கமாயிருக்கிறது. சனி பிற்பகலும் ஞாயிறு முழுமையும் வார விடுமுறை நாட்கள். சில பாடசாலைகள், வியாழன் பிற்பகலும் வெள்ளியும் விடுமுறை விடுவதுண்டு; சில பாடசாலைகள் வாரம் ஆறு நாள் வேலை செய்யவும் கூடும்.

அந்தப் பிரதேசச் சூழ்நிலையையும் அங்கு ஏற்படும் விசேஷச் சந்தர்ப்பங்களையும் ஒட்டி விடுமுறையை மாற்றிக் கொள்வது அவசியமாகும். உதாரணமாக, கிராமத்தில் திங்கட்கிழமை சந்தை நடைபெறுகிறது என்றால், அன்று பாடசாலை செம்மையாய் நடத்துவது சிரமப்படும். பிள்ளைகளில் அனேகர் அன்று தங்கள் பெற்றோருடன் சந்தைக்குப்போய் சாமான் வாங்கவும் எடுத்து வரவும் நேரும். எல்லாப் பிள்ளைகளையும் அத்தகைய சந்தர்ப்பத்தில் பள்ளிக்கூடம் வரச்சொல்வது நியாயமாகாது. அன்று விடுமுறையாயிருந்தால் பிள்ளைகளுக்கும் பெற்றோருக்கும் நல்லது. உபாத்தியாயரும் சந்தைக்குச் சென்று அங்குவரும் பிள்ளைகளைப் பார்க்கவும், அங்கே அவர்கள் கவனித்தறியவேண்டியவற்றை அறிவிக்கவும் கூடுமானால், இதுவே சிறந்த கல்விப் பயிற்சியாயிருக்கும். பிள்ளையின் சமூகப் பயிற்சியில் இந்தத் தினமானது பிரதான அங்கம் வகிப்பதோடு, சந்தைக்குப் போய்ச் சாமான் வாங்கும் போதும், புதிய பொருள்கள் மனிதர்கள் செயல்கள் ஆகியவற்றைக் காணும் போதும், வேறு எவ்வகையிலும் பெறமுடியாத அறிவையும் மனவிரிவையும் சிறுவன் இங்கே பெறுகிறான் ஆதலால், இதற்கு இடங்கொடுக்குமாறு பாடசாலைக்கு அன்று விடுமுறை தருவது அவசியம். அப்போது ஞாயிற்றுக்கிழமையை வேலை நாளாகவும், திங்கட்கிழமையை விடுமுறை நாளாகவும் வழக்கமாய் மாற்றிக்கொள்ளலாம்.

வாரத்தில் $5\frac{1}{2}$ நாள் வேலை செய்வதே போதும். அல்லது அதுவே அதிகம், கல்லூரியில் இருப்பது போல 5 நாள் வேலைதான் சரி என்று பலர் நினைக்கிறார்கள் ஆசிரியர் நிலைமையை எண்ணிப்பார்த்தால் இது ஒரு வேளை பொருத்தமாயிருந்தாலும் இருக்கலாம். ஆனால் பாடசாலை, பிள்ளைகளுக்காகவே அன்றி உபாத்தியாயருக்காகவல்ல. பிள்ளைகளின் மனப்பான்மையையே இங்கு நாம் பிரதானமாய்க் கருதவேண்டும். நல்ல பாடசாலை இருக்கும் பட்சத்தில், பிள்ளைகள் வீட்டைவிடப் பாடசாலையையே அதிகம் விரும்புகிறார்கள். ஏனெனில், இங்கு மன உல்லாசத்துக்கும் கைகளின் செயலுக்கும் அதிக இடம் கிடைக்கிறது. ஒத்த தோழர்களும் இங்கு பலர். கல்வி ரீதியாகப் பார்க்கும் பொழுது, இவற்றால் அறிவு வளர்ச்சி அதிகம் உண்டாகிறது. எனவே, இத்தனைக்கும் இடமான பாடசாலையில் பிள்ளைகள் அதிக நாள் இருக்கமுடியுமானால், பிள்ளைகளுக்கு மிகவும் நல்லது, பெற்றோரும் இதை வரவேற்பார்கள். கட்டாயமாய் உட்காரவைத்து எழுத்துப்படிப்பிலேயே அதிக நேரம் செலவிடுகிற பாடசாலைக்கு ஒருவேளை, அதிக நாள் விடுமுறை தேவையாயிருக்கலாம். நம் பாடசாலைகள் அப்படியல்ல. பிள்ளைகளுக்கு ஒன்றரை நாளாவது ஓய்வு வேண்டாமா என்போர் கூற்று, நம் பாடசாலைகள் பொறுத்த வரையில், சரியாகாது.

மேற் கூறியது, தினசரி வேலை செய்வதற்கான நேரத்துக்கும் பொருந்தும். காலை 3 மணியும் மாலை $2\frac{1}{2}$ மணியும் வேலை நேரமாக வைத்துக்கொள்வது வழக்கம். (அனேக பாடசாலைகளில் இந்த $5\frac{1}{2}$ மணி நேரத்தைக்கூட 5 ஆகக் குறைத்துக் கொள்கிறார்கள். நம்முடைய நோக்கம், நம்மிடம் படிக்கும் குழந்தைகளை இந்த நாட்டின் உத்தமமான பிரஜைகளாக ஆக்குவது; ஏதோ படிப்புக் கற்றுக் கொடுத்து மேல்வகுப்புக்கு மாற்றுவது மாத்திரமல்ல. ஆகவே, பாடசாலையில் எந்த நேரமும் குழந்தையினுடைய மகிழ்ச்சி குன்றாமலும் சோர்வு தோன்றாமலும் அவன் செயல் முறையையும் வேலை முறையையும் நாம் அமைக்கிறோம்.

<table>
<tr><th></th><th colspan="8">முற்பகல்</th><th></th><th colspan="5">பிற்பகல்</th></tr>
<tr><th>நாள்</th><th>8-45<br>9-00</th><th>9-00<br>9-10</th><th>9-10<br>9-20</th><th>9-20<br>9-30</th><th>9-30<br>10-30</th><th>10-30<br>10-40</th><th>10-40<br>11-40</th><th>11-40<br>12-00</th><th></th><th>2-00<br>3-00</th><th>3-00<br>3-10</th><th>3-10<br>4-10</th><th>4-10<br>4-40</th><th>4-40<br>4-45</th></tr>
<tr><td>திங்கள்</td><td rowspan="6">சமூகத்துப்புரவு வேலை</td><td rowspan="6">காலைப்பிரார்த்தனைக்கூட்டம்</td><td rowspan="5">உடல் துப்புரவு வகுப்பு</td><td rowspan="5">பத்திரிகைச்செய்தி</td><td rowspan="5">நூற்றல் தொழில்</td><td rowspan="5">இடை நேரம்</td><td rowspan="5">இயைப்புப் பாடம்</td><td rowspan="5">கதை - பாட்டு</td><td rowspan="6">உணவுக்காக இடை நேரம்</td><td rowspan="5">நூற்றல் தொழில்</td><td rowspan="5">இடை நேரம்</td><td rowspan="5">இயைபுப் பாடம்</td><td>தோட்ட வேலை</td><td rowspan="5">நாட்டு வாழ்த்து</td></tr>
<tr><td>செவ்வாய்</td><td>விளையாட்டு</td></tr>
<tr><td>புதன்</td><td>தோட்ட வேலை</td></tr>
<tr><td>வியாழன்</td><td>விளையாட்டு</td></tr>
<tr><td>வெள்ளி</td><td>தோட்ட வேலை</td></tr>
<tr><td>சனி</td><td colspan="6">— பாலர் சபை —</td><td colspan="5">— விடுமுறை —</td></tr>
<tr><td>ஞாயிறு</td><td colspan="14">பூரண விடுமுறைத் தினம்</td></tr>
</table>

சுறு சுறுப்பும் சந்தோஷமுமே குழந்தையின் இயல்புகள் இவற்றைக் கவனித்துப் பாடம் நடத்தும் போது காலவரையறையேது ? $5\frac{1}{2}$ மணியை 6 ஆகப் பெருக்கிக் கொள்வதும் பொருத்தம்தான். $8\frac{1}{2}$ மணிக்குப் பாடசாலையைக் காலையில் தொடங்கி 12 மணி வரை நடத்தலாம். சில இடங்களில் பிள்ளைகளுக்கு மத்தியானம் சாப்பிட்டு வர அதிக நேரம் பிடிக்கிறது. அங்கு வேலை நேரம் 2 முதல் $4\frac{1}{2}$ என்பதை $2\frac{1}{2}$ முதல் 5 ஆக மாற்றிக் கொள்ளலாம் பனி, மழை முதலிய காலங்களில் காலை $8\frac{1}{2}$—12 என்பதை 8-45—12-15 என்பதாகத் தள்ளி வைத்துக்கொள்வதும் நியாயமாகும். பாடசாலையின் தினசரி வேலை நேரம் என்பது உபாத்தியாயருக்காகவோ கல்வி யிலாகாவுக்காகவோ அல்ல. படிக்கும் குழந்தைகளின் வசதிக்காகத்தான் பருவ கால நிலைமையை ஒட்டிச் சற்று இதை மாற்றிக்கொள்ள அஞ்சவேண்டியதில்லை.

முற்பகல்

1. துப்புரவு : துப்புரவு வேலையோடு பாடசாலை ஆரம்பமாகிறது. வகுப்பறை, தாழ்வாரம், சுற்றுப்புறம், நடைபாதை, கொடி வணக்கம் செய்யுமிடம், பிரார்த்தனை செய்யுமிடம், சிறு நீர்க்குழி, கக்கூசு, கிணற்றடி முதலியவற்றை எல்லா வகுப்பு ஆசிரியர்களும் கலந்து மாணுக்கர் சக்திக் கேற்றபடி அவர்களையே திட்டமிடச் செய்து துப்புரவு செய்விக்க வேண்டும். பள்ளிக்கூடத்தின் முன்புறவாயிலிலும், அதை ஒட்டிய நடைபாதையிலும் தண்ணீர் தெளித்துக் கோலமிடவேண்டும். பிள்ளைகளின் கலை உணர்ச்சியை வளர்ப்பதற்கு இவ்வேலையைப் பிரதானமாகக் கொள்ளவேண்டும். வாரத்தின் கடைசி நாளில் துப்புரவு வேலைக்கு இன்னும் அதிக நேரம் செலவிட்டு, ஒட்டறையடித்தல், சாணமிட்டு மெழுகுதல் முதலிய வேலைகள் இருந்தால் செய்து முடிக்க வேண்டும். சிமிண்டு அல்லது கல்தரையைத் தண்ணீர் விட்டுக் கழுவவேண்டும்.

2. பிரார்த்தனை :—பள்ளிக்கூடப் பிள்ளைகள் அனைவரையும் வரிசையாய் ஒழுங்காக உட்காரச் செய்து பிள்ளைகளைக்

கொண்டே பொருத்தமான எளிய பாடல்களைப் பாடிப் பிரார்த்தனை நடத்தவேண்டும். பொதுப் பிரார்த்தனை இருப்பது மிகவும் அவசியம். எல்லாப் பிள்ளைகளுக்கும் மாற்றி மாற்றிப் பாடச் சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும். நிமிர்ந்து உட்காருதல், எல்லோரும் ஒத்த குரலில் தாளம் தவருமல் பாடுதல் ஆகியவற்றைச் சிறப்பாய்க் கவனிக்க வேண்டும். ஒரே பாட்டை வருஷம் முழுவதும் பாட வேண்டாம். அடிக்கடி பாடல்களை மாற்றிக் கொள்வது நல்லது. சிறந்த பாடல் மட்டுமே பாடலாம்.

3. துப்புரவு ஆரோக்கிய பாடம் : ஆரம்பத்தில் தினசரி சுகாதாரக் கேள்விகள் கேட்கச் செய்யலாம். சுகாதாரப் பழக்க வழக்கங்கள் படிய இது உதவும். பழக்க வழக்கங் கள் ஓரளவு படிந்த பின்னர், தினமும் சுகாதாரக் கேள்வி கள் கேட்பதை விட்டு, அந்த நேரத்தில் அன்றன்றைய சந்தர்ப்பத்துக்கேற்ப சுகாதார அறிவுக்கானவற்றை விளக் கிச் சொல்லவேண்டும்.

4. செய்தி சொல்லுதல் :—முதலில் பிள்ளைகளைக் கேள்வி கேட்டுத் தாங்களாக அவர்கள் ஊர்ச் செய்தி தெரிவிக்கும் படி செய்யவேண்டும். ஆசிரியர் முன்னமே தாம் முதல் நாள் தினசரி பத்திரிகை படித்துக் குறித்து வைத்துக் கொண்டு முதல் வகுப்புப் பிள்ளைகளுக்கு என்ன செய்தி யைச் சொல்லுவது முடியுமோ, அவசியமோ, அதைத் தெளிவாகச் சொல்லவேண்டும். அதே நேரத்தில் ஊர்ச் செய்தி மூலமாகவும், பத்திரிகைச் செய்தி மூலமாகவும் இவற்ருேடு தொடர்பு கொண்ட எல்லா அறிவையும் எளிதாகப் பிள்ளைகளுக்குப் போதிக்கவேணடும்.

ஊர்ச் செய்தி, பத்திரிகைச் செய்தி அறியுமுன் பாடசாலைச் செய்தி ஏதாகிலும் இருந்தால் அதை முன்னதாகக் கூறவேண்டும். பத்திரிகைச் செய்தி சொல்லுவதில் பின்வரும் கருத்துக்கள் ஆசிரியர் மனத்தில் இருக்கவேண்டும். மேல் வகுப்புகளில், படித்த

லாகிய கலை, விரிவாக வாசிக்கும் பழக்கம், படித்தலில் இன்பம், தெளிவு, விளக்கம், வேகம் ஆகியவை பொருந்த வாசித்தல், பொது அறிவின் விரிவு, ஆட்சிமுறை முத லான பலவகை அறிவு—இவற்றில் பயிற்சி பெறவேண்டும். திருத்தமான உச்சரிப்பு, சொல்வளப் பெருக்கம், சிந் தனை எண்ணத்தை வெளியிடும் முறை, மற்ற நாடுகள், விலைவாசி, நல்லுணர்ச்சி, தன்நாகரிகத்தில் பெருமை ஆகிய பண்புகளைப் பத்திரிகைச் செய்தியால் வளர்க்கவேண்டும்.

5. தொழில் :—ஆரம்பத்தில் தொழிலை 30 நிமிஷம் செய்து 5 நிமிடம் ஓய்வு கொடுத்துப் பிறகு தொழில் 30 நிமிஷம் செய்விப்பது பொருத்தமாயிருக்கும். (அரை மணிக்கு மேல் பிள்ளைகள் தொடர்ந்து வேலை செய்தால் சிரமப் படுவார்கள் என்று எண்ணுபவர்கள் இப்படிச்செய்யலாம்) தொழிலில் கிரமமான பயிற்சி வந்தபின், தொடர்ந்து ஒரு மணி நேரம் முழுமையும் தொழிலில் ஈடுபடுத்தி, பிறகு 10 நிமிஷம் சேர்ந்தாற்போல் ஓய்வு கொடுக்கலாம். காலைத் தொழில் நேரத்தில் நூற்றல் சம்பந்தப்பட்ட பூர்வாங்க வேலைகளை — பருத்தி சுத்தம், பஞ்சரைத்தல், பட்டை போடுதல் ஆகியவைகளை — செய்விப்பது நன்று யிருக்கும்.

6. ஓய்வு :— தொழில் செய்து முடித்தபின் இடத்தைத் துப்புரவு செய்து சற்றுக் காலாறவும் கைகால்களைச் சுத்தம் செய்து தண்ணீர் குடித்து வந்து உட்காரவும் இந்த அவ காசம் தேவை.

7. இயைபுப் பாடம்:- வருஷத்துக்குச்சுமார் 40 வாரம் பள்ளிக்கூடம் தொடர்ந்து நடைபெறும். இந்த முதல் வகுப் புத் தொழில், இயற்கை, சமூகச் சூழ்நிலைகளில் வருஷத் துக்குச் சுமார் 40 செயல்கள் திட்டமிட்டுக்கொள்ளலாம். வருஷம் முழுவதும் வீசனத்தில் நூல் வீசுகிறோம். அதி லிருந்து பெறக்கூடிய அறிவைச் சிறப்பாக ஒரு வாரத்தில் சொல்லிக் கொடுப்போம். இப்படித் திட்டமிடப்பட்ட 40 செயல்களையும் பாடங்களாகப் போதிப்பதற்கு முயல வேண்டும். ஒரு செயலை ஒரு வாரத்துக்குப் பாடமாகக்

கொண்டு, அந்தச் செயலுக்கு அந்த வாரத்தில் முதன்மை கொடுக்கவேண்டும். செயலை முறைப்படி செய்து அத னேடு இயைபுபடும் தமிழ், கணிதம் விஞ்ஞானம், சமூக சாஸ்திரம் என்ற பாடங்களைப் போதிக்கவேண்டும். இந்த நேரத்துக்கு இந்தப்பாடம் என்று வரையறை செய்வது சரியாகாது. இவை நான்கு பாடங்களும் ஒரு நாளில் போதிக்கும்படி யிருக்கலாம். அல்லது ஒரு நாளில் விஞ் ஞானப் பாடமோ மற்றென்றே வராமலேயே இருக்கலாம். இந்த இந்தப் பாடங்களை இன்னநேரத்தில் போதிக்க வேண்டும் என அட்டவணையில் குறிப்பிட்டுப் பயனில்லை. ஆனல் தினமும் தமிழும் கணிதமும் போதிக்கவேண்டும். அதனேடு, சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திப் போதிக்கவும் இந்த நேரத்தை உபயோகித்துக்கொள்ளலாம். செய்கிற செயல்கள் எல்லாவற்றின் மூலமும் தமிழ்ப் பயிற்சி வரக் கூடியது.

8. கதை, பாட்டு :—முதல் வகுப்புப் பிள்ளைகளுக்குத் தினமும் கொஞ்ச நேரம் கதை சொல்லவும் பாட்டுப் பாட வும் செலவிடுவது மிகவும் அவசியம்.

பிற்பகல்

9 தொழில்: —இந்த நேரத்தில் தினமும் 2--2-30 வரை மௌன நூற்பு நடைபெறவேண்டும். ஆரம்பத்தில் பிள்ளை களுக்குக் கிரமமான பயிற்சி ஏற்படும் வரையிலும், இந்த வகுப்பில் இது சாத்தியமில்லை. சுமார் 6 மாதங்களுக்குள் திருத்தமாக நூற்கப் பயிற்சி ஏற்பட்டிருக்கும். இதன்பின் மௌன நூற்பு தொடங்கலாம். இதுவரையில் ஆசிரியர் ஒவ்வொரு பிள்ளையாகத் தனியே கவனித்துத்தான் ஆக வேண்டும். நூலின் சமம் - முறுக்கு - பிணைத்தல் முதலிய வற்றைப் பற்றி ஆசிரியர் எப்போதும் கவனித்துக் கொண்டே யிருக்கவேண்டும். கூடுமானவரை இந்த நேரத் தில் அமைதி குலையாமல் பிள்ளைகளின் நூற்பைச் சரி செய்யவேண்டும்.

10. ஓய்வு
11. இயைபுப்பாடம் } முன் 6, 7 போலவே.

12. தோட்டவேலை, விளையாட்டு.

தோட்டவேலையின் அவசியத்தைக் கவனித்து ஆசிரியர் ஒரு நாளில் பிள்ளைகளை விளையாட்டில் ஈடுபடுத்தாமல் விடலாம் அல்லது ஈடுபடுத்தலாம். எந்தப் பிள்ளையும் சோம்பியிராமல் மற்றப் பிள்ளைகளுடன் கலகலப்பாகச் சேர்ந்து தோட்டவேலை செய்யும்படியோ, விளையாடும்படியோ அமைக்கவேண்டும்.

13. நாட்டு வாழ்த்து :—"வாழிய செந்தமிழ்", "ஜன கண மன" இரண்டிலும் பழக்கவேண்டும். தவருமல் எல்லோரும் நிமிர்ந்து நின்று உரத்த குரலில் கம்பீரமாக ஒத்துப் பாடவேண்டும். நாட்டு வாழ்த்து என்றுல் ஆசிரியருக்கும் பிள்ளைகளுக்கும் ஒரு பக்தி உணர்ச்சி உண்டாக வேண்டும்.

14. பாலர் சபை :—வாரத்தின் கடைசி நாளன்று காலை தொழில் நேரத்திற்குப் பிறகு பாலர் சபைக் கூட்டம் வைத்துக்கொள்ள வேண்டும். தவருமல் வாரம் ஒரு கூட்டம் இருக்கவேண்டும்.

(1) பாலர் சபை வாரம் தோறும் வாரக் கடைசி தினத்தன்று காலையில் கூடுகிறது. பாலர் சபை கூடுவதற்கு முன் பாடசாலையின் விசேஷத் துப்புரவும் கிராமசேவையும் வைத்துக்கொள்வது நன்று. ஒரு வாரம் கிராம சேவையும் அடுத்தவாரம் விசேஷத் துப்புரவும் மாறிமாறி இருக்கலாம். கிராம சேவையில் சிறுபிள்ளைகள் விசேஷமாகச் சாதிக்க முடியாவிட்டாலுங்கூட, சேவையில் ஈடுபடுகிற பழக்கமும் மனப்பான்மையும் ஏற்படுவது பிரதானம்.

(2) பாலர் சபை அமைப்பதில் சிறப்பான நோக்கம், பிள்ளைகளிடம் சுயஆட்சித் திறனையும், இன்பத்தையும் தோற்றுவித்தலாகும். சுயஆட்சித் திறனை விவகாரமென்றும் இன்பத்தைக் கலாநிகழ்ச்சி என்றும்பிரிக்கலாம். மந்திரி சபைத் தேர்தல் அறிக்கை, கேள்வி நேரம், தீர்மானங்கள், வேலை நடத்துதல் இவை பாலர் சபையின் விவகாரமாகும். பாலர்களே சொந்தமாகக் கதை சொல்லுதல், பாட்டுப் பாடுதல், நடிப்பு, அபிநயம், சம்பாஷணை, நாடகம்—இவை கலா

நிகழ்ச்சிகளாகும். ஒருவாரம் பாலர் சபையின் விவகாரமும் அடுத்த வாரம் பாலர் சபையின் கலாநிகழ்ச்சியுமாக மாறி மாறி வைத்துக்கொள்ளலாம்.

குறிப்பு :—வாரத்தின் முதல் நாள் காலையில் கொடி வணக்கம் வைத்துக்கொள்வது அவசியம். இதில் கொஞ்ச நேரமாகும். மற்றப் பாடங்களும், வேலைகளும் சற்றே தள்ளி வைக்க நேரிட்டால் தவறில்லை. கொடியைப் பற்றிய பெருமித உணர்ச்சியும் மரியாதையும் இன்னும் போதுமான படி ஏற்படாத நம் நாட்டில், அடிக்கடி கொடி வணக்கப் பயிற்சி இருப்பது மிகவும் பயனுடையது.

இலக்கியமன்றம் போன்ற பிற நிகழ்ச்சி இருக்குமாயின், அதையும் வாரத்தில் இன்ன நேரமென்று கால அட்டவணை யில் திட்டமாய்க் குறிப்பிட்டுக் கொள்வது நல்லது.

காலை 10-40—11-40 இயைபுப் பாடம் என அட்ட வணையில் குறிப்பிட்டிருக்கிறது. இது மாதிரிக்காகத்தான். செய்தி சொல்லிய பிறகு சில சமயங்களில் குறித்த ஒரு செய்தியை ஒட்டிப் பாடமாகத் தொடர்புபடுத்தி விளக்க அதிக நேரம் தேவையாயிருக்கும். காலராவை உதாரண மாகச் சொல்லலாம். ஊரில் காலரா இருந்து மரணமும் சம்பவித்திருக்கலாம். பிள்ளைகள் அதை ஊர்ச் செய்தியில் சொல்லியவுடன், அதைப்பற்றி விளக்கிச் சொல்லுவதற்கு 9-20–9-30 வரையிலுள்ள 10 நிமிஷ நேரம் போதாமலிருக் கலாம். அப்போது இதற்கு அதிக நேரம் எடுத்துக்கொண்டு பின் காலை இயைபுப் பாடத்துக்குக் குறிப்பிட்ட நேரத்தைச் சற்றுக் குறைத்துக் கொள்வதில் குற்றமில்லை. ஒரு பைய னுக்குச் சிரங்கு அதிகமாகக்கண்டு அதனோடு அவன் பாட சாலைக்கு வரக்கூடும். அதுசமயம் ஆசிரியர் அவன் கையைத் தேய்த்துக் கழுவி, கந்தகம், களிமண் முதலிய பொருள் களால் சிகிச்சை செய்யவேண்டியிருக்கும். இதற்கும் 10 நிமிஷ நேரம் போதாது. கண்வலியும் அப்படியே.

## 9. செயல் திட்டம்—மாதவாரி

முன்னுரை

**நா**ற்றல் தெழிலும் தோட்ட வேலையும் வருஷ முழு மையும் தொடர்ந்து நடைபெறவேண்டிய செயல்கள்.

பன்னிரண்டு மாதங்களில், கோடை விடுமுறை ஒரு மாதம் நீங்க, மற்றப் பதினொரு மாதங்களும் இவை நடைபெற வேண்டும். இம்மாதங்களுக்குரிய திட்டங்கள் முறையாகப் பின்னே கூறப்பெற்றுள்ளன; இவை முதல் வகுப்புக் குரியவை.

முதல் வகுப்பு உபாத்தியாயர், மாதத் திட்டத்தை நான்காகப் பிரித்து, நூற்பு சம்பந்தப்பட்டவரையிலாவது வரிசையாக நான்கு வாரங்களிலும் என்ன என்ன வேலை களைச் செய்வது என்று முறைப்படுத்திக் கொள்ளவேண் டும்; தோட்ட வேலை கொஞ்சம் மாறக்கூடிய இயல்புள்ள தாகையால், முன்னதாக அதைப்பற்றிக் கூற இயலாது. கால நிலைமை, பருவமழை, பூச்சிகள் உண்டாதல் முதலான தன்மைகளால் வேலைத்திட்டம் கொஞ்சம் மாறுதலடையும்,

பாடக்குறிப்பு: உபாத்தியாயர் தினசரி பாடக்குறிப்பு எழுதவேண்டும். பாடக்குறிப்பு எழுதாத உபாத்தியாயர் பள்ளிக்கூடம் செல்வது, கருவியில்லாமல் தொழிலாளி வேலை செய்யப்போவதுபோல, கல்லூரியில் பேராசிரியர் பாடக் குறிப்பின்றிப் பிரசங்கம் செய்யமுடியலாம். ஆனால் ஆதாரப் பாடசாலையில், கட்டாயம் பாடக்குறிப்பு வேண் டும். தொழில், பாட்டு, தாய்மொழிப் பயிற்சி, மற்றப் பாடங்கள் ஆகிய யாவையும் பற்றிய குறிப்பு அல்லது தயாரிப்பு வேண்டும். தயாரிப்பு இல்லாமல், எவ்வளவு அனுபவம் உடையவராயிருந்தாலும், பாடம் நடத்த முற் படுவது, ஆதாரக் கல்வி யாகட்டும், வேறெந்தக் கல்வியாகட் டும், கல்வியையும் பிள்ளைகளையும் பாழ்படுத்துவதாகும்.

பிள்ளைகளின் நேரம் சிறிதுகூட வீண் போகாதிருக்க வும், அடுத்தபடி என்ன செய்வது என்ன போதிப்பது என்று தயங்காமலிருக்கவும் முன்யோசனை வேண்டும். இதைப் பதிவு செய்து வைத்திருப்பதே பாடக்குறிப்பு. துண்டுத்தாளில் இல்லாதபடி ஒரு தனி நோட்டுப் புத்தகத்தில் இருந்தால், இது பிற்பட்ட உபயோகத்துக்காக வைத் திருக்க உதவும். குறிப்பு எழுத எழுதத்தான், முந்திய வருஷப் போதனையைவிட அடுத்த வருஷப் பாடப்போதனை

அபிவிருத்தி பெற்றதாயிருக்கும். ஆதாரப் பாடசாலைகளில் பல இன்று நாம் நினைக்கிறபடி உயர்தரமாக நடைபெறாத தற்குள்ள பல காரணங்களில் முக்கிய காரணம், ஆசிரியர்கள் பாடத்தை முன்னதாகத் தயாரித்துக் கொள்ளாமை. இயைபுப் பாடம் என்பது புதிய முறை. ஆசிரியர்களுக்கு இதில் தேர்ச்சியும் குறைவுதான்; இதில் தவறில்லை. இக் குறைவை நிறைவு செய்வது அவரவர் முயற்சியும் சிரத்தையும். மேலும்,பாடத்திட்டத்தில் அனேக விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆசிரியருக்கு எல்லாம் தெரிந்திருக்க முடியாது. அன்றியும், தெரிந்த விஷயங்களைத் தொடர்பு படுத்தவேண்டும். நேற்றைய போதனைக்கும் இன்றைய போதனைக்கும் தொடர்புபடுத்திக் கற்பிக்கவேண்டும், இன்றைய பாடம் நாளைய பாடத்துக்குத் தோற்றுவாயாக அமையவேண்டும். இத்தனைக்கும் தயாரிப்பு இருந்தால் தான் முடியும். நினைத்து நினைத்து முன் யோசனை இன்றிக் கூறுவது பூர்த்தியான பாடமாகாது; நேரமும் வீண் போகும். முன் தயாரிப்பு இன்மையால், கற்பிக்கவேண்டிய பல பொருள்கள் கற்பிக்கப் பெறாமலே போகும். பிள்ளைகளுக்கு இது பெரிய நஷ்டம்; இதனால், ஆசிரியருக்கும், பொறுப்புடைமைப் பயிற்சிக்குப் பதிலாக, பொறுப்பின்மைப் பயிற்சி ஏற்படுகிறது.

பாடக் குறிப்பு தயாரிக்க, தினமும் பதினைந்து நிமிஷம் தான் ஆகும். வாரத்தொடக்கத்தில், இவ்வாரத்தின் பிரதான செயல் இன்னது, அதை எப்படி 5-6 நாட்களில் பிரித்துச் செய்வது என்று ஒரு மணி நேரம் செலவழித்துத் திட்டமிட்டு விட்டால், மற்றது எளிதாகும். செயல் என்று சொல்லும்போது அதில் பல அம்சங்கள் அடங்குகின்றன. மூலப்பொருள்கள், உபகரணங்கள், எல்லாப் பிள்ளைகளுக்கும் வேலை, வேலையின் பதிவு, படிப்பு, ஒத்திடுகை ஆகிய அனேகம் அம்சங்கள் உள்ளன. முன் தயாரிப்பு இல்லாமல் இவை நன் முறையில் நிறைவேறுவது எவ்விதம்? கரும்பலகையருகே போனபின் சாக்கட்டியில்லாமல் விழிக்கிற ஆசிரியர்களை நாம் பார்க்கிறோம். சாதாரணப் பாடசாலையிலேயே நிலைமை இதுவென்றால், ஆதாரப் பாட

சாலையில் இன்னும் அதிகப் பொறுப்புடன் முன் தயாரிப்பு செய்துகொள்ளவேண்டும். தயாரிப்பு முதலில் கஷ்டமாய்த் தோற்றினாலும், நாளடைவில் பழக்கமாகி எளிதாகும்.

வகுப்பில் அவ்வப்போது எழும் பிரசினைகளையும் யோசனைகளையும் உடனுக்குடன் தனியே குறித்துக்கொள்வது மிக்க பயனுடையது. மறுநாள் பாடத் தயாரிப்பு நேரத்தில் இக்குறிப்பைப் பார்த்தால் கவனித்துச் சேகரிக்க வேண்டியவை எளிதில் சேகரித்துவிடலாம். எதுவும் விட்டுப்போகாது.

## (அ) ஆதாரத் தொழில் — நூற்றல்

முதல் மாதம்

**முதல் வாரம் :—** குழந்தைகளைச் சுகாசனத்தில் உட்கார வைத்தல். அட்டையின்மேல் வெற்றுத் தக்கிளியை வைத்து வலது கை ஆள்காட்டி விரலால் சுற்றுதல். நடுவிரலுக்கும் மோதிர விரலுக்கும் மத்தியில் கம்பியை வைத்துக் கட்டை விரலால் சுற்றுதல். ஒவ்வொரு விரலின் பயன். சுறு சுறுப்பாக வெற்றுத் தக்கிளியைச் சுற்றத் தெரிந்த பிள்ளைகளுக்கு மட்டில் நூற்கக் கற்பித்தல். பட்டையை இடதுகையில் பிடித்தல், நூற்க ஆரம்பிக்கும்போது பட்டையைப் பிடித்தல், தக்கிளியைச் சுற்றுதல் ஆகிய இரு வேலைகளையும் பிள்ளைகள் செய்யக் கஷ்டப்படுவார்களாகையால் ஆசிரியர் உதவி செய்யவேண்டும். ஒவ்வொரு குழந்தைக்கும் ஆசிரியர் நூற்றுக் காண்பிக்க வேண்டும். தக்கிளியை விட்டு வலக்கையை எடுக்காமலேயே சுழற்றி நூற்கச் செய்யவேண்டும் பலமற்ற நூலுக்கு மறு தக்கிளியைக் கொண்டு முறுக்கேற்றிச் சுற்றச் செய்தல். அறுந்த நூலை முடிவில் ஆசிரியரே இணைத்துக் கொடுக்கவேண்டும்.

**இரண்டாவது வாரம் :–** சுகாசனத்தின் சௌகரியம். தக்கிளி சுற்றலில் உபயோகப்படும் உபகரணங்கள். தக்கிளி சுழலும் வேகத்துக்குப் பட்டையை உயர நேராக இழுத்துக் கொண்டுபோகச் செய்தல். பட்டையின் அடியை இடக்கை ஆள்காட்டி விரலாலும் நடுவிரலாலும், பட்டையின்

நுனியை மோதிர விரலாலும் பெருவிரலாலும் பிடிக்கச் செய்தல். அட்டையின் மேலேயே சுழலும்படி சுற்றிவிட்டு நூற்பதில் கவனம். அறுந்த நூலைக் கழிவாகப் போடாமல் பட்டையில் வைத்து நூற்கச் செய்தல். ஆசிரியரே நூலை வீசனத்தில் சுற்றி வைத்துக் கொள்ளவேண்டும். முறுக்கில்லாத நூலுக்குத் திரும்ப மறுதக்கிளி கொண்டு முறுக்கேற்றச் செய்யவேண்டும். கண்டு நூல் - பிடி நூல் - கை நூல் - புது நூல் என்ற பெயர்கள்.

மூன்றுவது வாரம் :— பிள்ளைகளுக்கு நன்றுக நூற்கத் தெரிந்தபோதிலும் நூலிலும், நூற்கும் முறையிலும் பல குறைகள் இருக்கும். முறுக்கில் கூடுதல் குறைதல், நூலில் சமமின்மை ஆகிய குறைகள், நூலில் பட்டையைப் பந்து மாதிரி ஆக்கிவிடுதல், கண்டு நூலிலும் ஒழுங்காகச் சுற்றுமை, அறுந்த நூலை இணைக்காமல் சுற்றுதல், அறுந்த நுனி காணுமல் போதல் ஆகிய குறைகள் ஏற்படும். இவற்றை எல்லாம் ஆசிரியர் திருத்திக் கொடுக்கவேண்டும்.

நான்காவது வாரம் :—நூற்ற நூலைச் சரிபார்த்து மறு தக்கிளியில் சுற்றுதல், நல்ல முறுக்கும், சமமுமுள்ள நூலுக்கு முயற்சி. அறுந்த நூலை இணைக்கக் கற்பித்தல், கண்டு நூலைச் சரியாகச் சுற்றுவதில் கவனம். தக்கிளியின் பாகங்கள் : கூர். வட்டு, கம்பி, கொக்கி. ஆசிரியரே நூற்ற நூலை வாங்கி வீசனத்தில் சுற்றிக்கொண்டு சிட்டங்களைச் சேமித்து வைக்கலாம்.

### இரண்டாம் மாதம்

இதற்குள் எல்லாப் பிள்ளைகளுக்கும் நன்றுக நூற்கத் தெரியும் 8 இலிருந்து 10 ஆம் எண்வரை நூற்பதற்குப் பயிற்சி. ஆள்காட்டி விரலாலும், பெருவிரலாலும் தக்கிளியை வேகமாய்ச் சுற்றி நூற்கச் செய்தல். சாம்பல் உபயோகப்படுத்துவதன் அவசியம். பெயர் எழுதிய அட்டைகள் கொடுத்தல், மந்திரிகள் கருவிகள் வழங்குதல், மாணவர்களுக்குச் சரியான இடம், புது நூலுக்கு முறுக்கேற்றிப் பின் நூல் இழுத்தல். உபயோகமில்லாத

நூலைப் பிள்ளைகளுக்கு எடுத்துக்காட்டுதல். முறுக்கு அதிகமா குறைவா, நடுவில் மெல்லியதா, நூல் மெல்லியதாக அல்லது கனமாக இருந்தால் என்னசெய்யவேண்டும் என்பவைகளைப் பிள்ளைகளுக்கு எடுத்துக்காட்டவேண்டும். நூலை அறுத்துப் பார்த்து அறும் ஓசையின் மூலம் நூலின் பலத்தை அறியச்செய்தல். நூற்கும்போது பார்வையைப் புது நூலில் செலுத்துவதன் அவசியம். இரண்டடி வீசனத்தில் பிள்ளைகளே சுற்றுதல் ஒவ்வொருவருக்கும் தனித் தனி வீசனம், சுற்றும்போதே சுற்றுக்களை எண்ணுதல். 40 சுற்றுக்களாகக் கட்டுக் கட்டுதல். கட்டுக் கட்ட வர்ண நூலைத் தயாரித்தல். 4 இழை லை முறுக்கிச் செம் பருத்திப் பூவில் தேய்த்தல். சரியான முறையில் - வல முறையாகச் சுற்றுவதையும் மாறிச் சுற்றுமலிருக்கவும்-கவனித்துக்கொள்ளுதல், அறுந்த நூலை எடுத்து இணைத்துச் சுற்றுதல்.

## மூன்றும் மாதம்

நூற்றல் :—ஆள்காட்டி விரலாலும், பெருவிரலாலும், சுழற்றி நூற்றல். சமமாகவும் முறுக்கு உள்ளதாகவும் இருந்தால் நூல் பலமாக இருக்கும் என்பதை உணர்த்துதல் ; தக்கிளியை வேகமாகச் சுற்றிவிட்டு தக்கிளியைச் சுற்றும் கையைத் தக்களிக்குமேல் 6 அங்குல தூரத்தில் நூலைப் பிடித்து நூற்கப் பழக்குதல். இதுவரை தக்கிளியை விட்டுக் கையை எடுக்காமலேயே நூற்று வந்தார்கள். இனி நூலைப் பிடித்து நூற்பதற்குப் பயிற்சி தரவேண்டும் நூல் அறுபடுவதன் காரணம். கட்டிகளைச் சரிப்படுத்தி நூற்றல். வீசனத்தில் தவறுமல் சுற்றச் செய்தல், நூலை வீசனத்தில் எண்ணிக்கொண்டே சுற்றுதல். சுற்றி முடித்தவுடன் சிறு காகிதத் துண்டில் ஆசிரியர் சுற்றுக்களைப் பதிந்து வீசனத்தில் செருகிவைத்தல்.

பருத்தி சுத்தம் : சூரியன் செய்தல் : தூசி நீக்குதல், தூசிகளுடன் துசும்புகள் போகா வண்ணம் கவனமாகத் தூசி எடுத்தல், விதையிலிருந்து துசும்புகள் பிரிந்து விடாமல்

நீட்டிவிடுதல், துசும்புகளுக்குக் கேடு விளைவிக்காமல் நீட்டி விடுதல். பருத்தி சூரியன் பலவித உருவங்களில் வைத்தல். மொத்த சூரியன்களை எண்ணுதல். கணக்கு அறிவும் சித்திரப் பயிற்சியும்.

நான்காம் மாதம்

நூற்றல்: பட்டையின் நுனியில் பெருவிரலாலும் மோதிர விரலாலும் பிடித்திருப்பதன் அவசியம், புது நூலின் கனத்தைக் குறைப்பது எப்படி என்பதைச் செய்கிற வேலையையும் உபயோகப்படுத்தும் உபகரணங்களைப் பற்றியும் கேள்வி மூலம் விளக்குதல். நூற்கும்போதே அறுந்த நூலைப் பட்டையில் வைத்து இணைத்து நூற்க வைத்தல். நூலைக் கையில் பிடிக்கும்போது முறுக்கு அங்கு நிற்காமல் பார்த்துக்கொள்ளுதல். எந்தக் குறைகளை நீக்காவிட்டால் நூல் அறுந்துபோகும் என்பது.

பருத்தி சுத்தம்: பருத்தியில் என்னென்ன தூசிகள் இருக்கின்றன என்பது. பருத்தி, சுத்தம் செய்த பருத்தி, தூசி இவற்றை எங்கெங்கே வைப்பது என்பது, பருத்திச் சூரியன்களைப் பலவித உருவங்களில் வைத்தல், வரிசைக்கு 10 ஆக வைத்தல், 100 வரை எண்ணுதல். பத்துப் பத்தாகக் கூட்டல்.

பட்டை போடுதல்: பட்டை போட உபகரணங்கள். பட்டை, பலகை, கைப்பிடி, பட்டைக்குச்சி, காகிதம் முதலியன. பட்டை போடும்போது உட்காரவேண்டிய ஆசனம் வீராசனம். பட்டைபோடும் முறை. பலகையில் அடித்த பஞ்சைச் சமமாகப் பரப்பி வைக்கவேண்டும். பட்டைக் குச்சியை மத்தியில்வைத்துக் கைப்பிடியால் பஞ்சை மடித்து அதாவது கீழிருந்து மேலாக மடக்கி மேலிருந்து கீழ்முகமாக உருட்டவேண்டும். 7 அல்லது 8 தடவை உருட்டவேண்டும். பட்டையின் நீளம் 6" அல்லது 7" தான் இருக்கவேண்டும். பட்டைகளை அடுக்குதல். முன் பின்னாக வைக்காமல் அடிப் பட்டைகளை ஒரே மட்டமாக இருக்கும்படி அடுக்குதல், பட்டைகளை எண்ணுதல், நிறுத்தல் ,பட்டைக் காகிதத்தில் அழுத்திச் சுருட்டிக் கட்டுதல்.

குறிப்பு : பட்டை போடவும், பருத்தி சுத்தம் செய்யவும் நூற்றல் தொழிலுடன் பயிற்சி கொடுப்பதால், பிள்ளைகளுக்குப் பல தொழில்களை மாறிமாறிச் செய்வதனால் உற்சாகம் உண்டாகிறது. தொழிலை உற்சாகத்துடன் செய்ய இவ்வாறு பிள்ளைகளுக்கு ஒரு திட்டமிட்டுக் கொள்ளவேண்டும். எல்லாப் பிள்ளைக்கும் மற்ற வேலைகள் செய்யச் சந்தர்ப்பம் கிடைக்கவேண்டும். இந்த வகுப்புக்கு வேண்டிய பட்டைகளை இவர்களே போட்டுக் கொள்ளலாம். மேல் வகுப்புப் பிள்ளைகளைப் பஞ்சு அடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்யலாம். அடித்த பஞ்சை உடனே பட்டைபோடச் செய்யவேண்டும். ஆரம்பப் பயிற்சியில் சிறிது கவனம் செலுத்தி விட்டால் பழக்கம் தானகவே அமைந்துவிடும்.

ஐந்தாம் மாதம்

நடுவிரலாலும், ஆள்காட்டி விரலாலும் தேய்த்து நூற்று ஊற்றுதல். நூலைத் தக்கிளியில் ஊற்றும்போது பட்டையைப் பிடித்துள்ள கையின் பெருவிரலையும் மோதிர விரலையும் எடுத்து நூலைப் பிடித்துக்கொண்டு ஊற்றுதல். கண்டு நூல் ஊற்றுதல் படிப்படியான முயற்சி. 3 முறை, 2 முறைகளில் ஊற்றுவதன் வேகம். பட்டை பிடிக்கும் கையை எந்த முறையில் மேலே தூக்கவேண்டும் என்பது. நூல் ஊற்றும்போது தக்கிளி எவ்வளவு சாய்ந்திருக்க வேண்டும் எப்படிப் பிடிக்கவேண்டும் என்பவைகளைச் செய்து காட்டி விளக்குதல். சுண்டுவிரலும் பெருவிரலும் ஒருபக்கம், மற்ற மூன்று விரல்களும் ஒருபக்கம். ஒவ்வொரு விரலின் பயனையும் விளக்குதல். தக்கிளி மாற்றி நூற்றல். அறுபடாமல் நூற்றலும் அறுந்த நூலை இணைத்தலும் மிக்க அவசியம். ஒவ்வொரு பிள்ளைக்கும் இரண்டு தக்கிளிகள். 10 ஆம் நம்பர் நூல் நூற்க பயிற்சி.

பருத்தி சுத்தம் : பருத்தியை ஏன் சுத்தம் செய்ய வேண்டும் என்பது. பருத்தி விதையைச் சுற்றியுள்ள தூசும்புகளை நீட்டிவிட்டுச் சூரியன்போல் ஆக்குவதால் பயன் என்ன

என்பது வரிசையில் 2களாக, 5களாக வைத்து 100 வரை கூட்டல், கழித்தல், மொத்தச் சூரியன்களை எண்ணல். பருத்தி, சுத்தம் செய்த பருத்தி, தூசி இவைகளின் எடை கண்டுபிடித்தல்.

பட்டை போடுதல் : குச்சியை வைத்து உருட்டும்போது மோதிரம் போட்டு உருட்டுதல். கைப்பிடியை அழுத்தாமல் குச்சியை உருவுதல். 5, 6 தடவைகளில் உருட்டிப் பட்டை போடுதல். பட்டை போடுவதில் வேகம், திறமை. பஞ்சை மடித்து உருட்டிக் கைப்பிடியின் அடியால் லாகவமாகத் தள்ளுதல். பட்டைகளை எண்ணி நிறுத்திக் கட்டுதல். காற்றுப் புகாமல் பட்டையைப் பாதுகாக்க வேண்டியதன் அவசியம்.

## ஆரும் மாதம்

நூற்றல் : தொடையில் தேய்த்து நூற்று ஊற்றுதல். வலது சுகாசனம். உடைகள் வேலைக்கு இடையூருக இல்லாமல் ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டும். கையில் எந்தப் பகுதியால் தக்கிளியைத் தேய்க்க உபயோகிக்க வேண்டும். தக்கிளியின் எந்தப் பகுதியைத் தொடையின் எந்தப் பகுதியில் தேய்க்க வேண்டும் என்பது. சாம்பல் உபயோகிப்பதன் அவசியம். தக்கிளி குதிக்கும் காரணம். குதிப்பதை நிறுத்த உடனே தக்கிளியைத் தொட்டு விடவேண்டும் என்பது. இந்த முறை நூற்பில், கைநூல் நீளம் அதிகம் விட்டுக். கொண்டு நூற்கவேண்டும். கண்டு நூலின் தடிவம். கண்டு நூலை ஏன் அழுத்திச் சுற்றவேண்டும் என்பது. கண்டு சரிவதன் காரணம், அதை நீக்கும் முறை. சமமுள்ள - முறுக்குள்ள நூல் நூற்பதன் அவசியம். பாடிக் கொண்டே நூற்கச் செய்யலாம். சிட்டம் போடக் கற்பித்தல். சிட்டம் போட்டபின் கீழே உருட்டுதல். பெயர் எழுதிய சீட்டைச் சிட்டத்தில் செருகி வைத்தல். இரண்டடி வீசனத்தில் சுற்றுதல். வீசனத்தைப் பிடிக்கும் முறை. கைகளைச் சரியாக அசைத்து வீசுதல். தக்கிளியைச் சரியாகச் சுற்றுதல். வீசனத்தில் சுற்றுக்கள் சரியாக அமையவேண்டும். கொடிமுறுக்கு விழா

மல் சுற்றவேண்டும். சரியான முறையில் சுற்ற வேண்டும். 40 சுற்றுக்களாகக் கட்டுக் கட்டுதல். கடைசியில் இரண்டு கட்டுகளை ஒரு கண்ணியாகக் கட்டிச் சிட்டம் போடுதல்.

பருத்தி சுத்தம்:- சூரியன் செய்வதில் வேகம். வரிசைக்கு 4–5 சூரியன்களாக வைத்து எண்ணுதல். 100 வரை எண்ணுதல். எண்ணல் பயிற்சியை வளர்த்தல். எவ்வளவு பேர்கள் எவ்வளவு நேரத்தில் எவ்வளவு பருத்திச் சுத்தம் செய்தார்கள் என்பது. சுத்தம் செய்த பருத்தியைச் சேமித்து வைக்கும் முறை, அதன் அவசியம்.

பஞ்சரைத்தல் :–இம்மாதத்திலிருந்து பலகை மணை கம்பியில் பஞ்சரைக்கச் செய்யலாம். வேண்டிய கருவிகள் : பலகை மணை, கம்பி, பஞ்சு, தட்டு, தராசு. வீராசனத்தில் உட்கார வேண்டும். இடம் வலம் மாறி உட்காரச் செய்யலாம். பருத்தி இடப்புறம் பஞ்சு வலப்புறம் இருக்க வேண்டும். விதைகளைக் கையினுல் எடுக்காமல் கம்பியினுலேயே உருட்டி முன்புறம் தள்ளவேண்டும். இரண்டு இரண்டு விதைகளாக வைத்து அரைக்கப் பயிற்சி. அரைத்த பருத்தியின் எடை. வேலை செய்த நேரம் கண்டு பிடித்தல்.

பட்டை போடுதல் .—பட்டையின் நீளம் 6'' முதல் 7'' வரை இருக்கவேண்டும். பட்டைப் பலகையின் மேல் 6'' நீளம் 3'' அகலம் பஞ்சைப் பரப்பவேண்டும். மோதிரம் போட்டுப் பட்டையை உருட்ட வேண்டிய அவசியம் விளக்குதல். ஒரு தோலா எடைக்குப் பதினுறு பட்டை போடப் பயிற்சி.

ஏழாம் மாதம்

நூற்றல் :—தொடையில் வலக்கையால் தேய்த்து நூற்று ஊற்றுதல். வலது சுகாசனம். உட்காரும் முறை: தொடையில் தேய்க்கும்போது கொக்கி தோலில் உராயாமல் பார்த்துக் கொள்ளுதல். தேய்க்கும்போது தக்கிளி அட்டைமேல் படாமல் இருத்தல். சுழலும்போது தொடையின்மேல் உராயாமல் சுழலச்செய்தல். தக்கிளியை உள்ளங்கையில் வைத்துத் தொடையில் தேய்க்கவேண்டும்.

தொடையின் எந்தப் பாகத்திலும் உள்ளங்கையின் எந்தப் பாகத்திலும் தேய்க்கவேண்டும். என்பது. எந்தமுறையில் தேய்க்கவேண்டும் என்பது அடி உள்ளங் கையிலிருந்து விரல்களின் நுனிவரை அழுந்தத் தேய்த்தல். சாம்பல் அடிக்கடி உபயோகித்தல். எங்கெந்த இடங்களில் சாம்பல் தேய்க்க வேண்டும். அதன் உபயோகம். அறுந்த நூலைப் பிணைத்தல். நூல் பிணைக்கும்போது நூலின் நுனி வெளியே தெரியாமல் இருக்கவேண்டும். பிணைப்பதில் அடிக்கடி பயிற்சி கொடுத்தல். பிடிநூல் கைநூல் புதுநூல் அவசியம். கம்பியிலுள்ள அதன் வளையங்கள் எத்தனை என்பது. கைநூலின் நீளம் அதன் அவசியம். கண்டுநூலை அழுத்திச் சுற்றும்படிக் கவனித்துக் கொள்ளவேண்டும். பாடிக் கொண்டு நூற்றல். அதனால் வேகம் குறையாதவாறு பார்த்துக் கொள்ளல். சிட்டம் போடுதல். அடி நூலை யும் நுனி நூலையும் அடிநுனி கண்ணிகளில் சுற்றி விடுதல். சரியான முறையில் சிட்டம் போடுதல்.

பருத்திச் சுத்தம் :—தூசிகளை நீக்குதல். விரல்களை எப்படி உபயோகிக்க வேண்டும் என்பது. ஒவ்வொரு விரலின் பயன். வரிசைக்கு 7, 8 பருத்திச் சூரியன்கள் வீதம் 100 வரை வைத்து எண்ணல். மொத்தம் எண்ணுதல். சுத்தம் செய்த பருத்தி, தூசி ஆகியவற்றின் எடை. செய்த நேரம், அளவு கணக்கிடுதல். பாடிக்கொண்டே சுத்தம் செய்தல்.

பஞ்சரைத்தல் :—பஞ்சரைக்கும்போது கவனிக்க வேண்டியவை விதையில் பஞ்சில்லாமல் அரைத்தல். பலகை மணையையும் கம்பியையும் சரியாகக் கையாளுவதில் பயிற்சி. பலகை மணையின் நீளம், அகலம், கனம் கம்பியின்நீளம். பருத்தி, பஞ்சு, விதை இவை ஒவ்வொன்றின் எடை.

பட்டை போடுதல் :—ஒரு தோலாவுக்கு 16 பட்டை போடுவதன் காரணம். பட்டை அதிக நீளமானாலும் நீளக் குறைவாக இருநதாலும் ஏற்படும் விளைவு. நாலைந்து தடவைகள் உருட்டிப் பட்டை போடுதல். மோதிரம் பிடித்துப் பட்டை போடுவதன் காரணம். உபகரணங்களைப் பற்றிய

அறிவு. பட்டைப் பலகையின் நீளம் அகலம். குச்சியின் நீளம். பட்டைப் பலகையின் முன்புறம் உயரமாகவும் பின் புறம் தாழ்வாகவும் இருக்கக் காரணம்.

எட்டாம் மாதம்

நூற்றல் :—வலக் கெண்டைக் காலில் தேய்த்து நூற்று ஊற்றுதல். தொடையையும் கெண்டைக் காலையும் மாறி மாறி உபயோகித்தல். கெண்டைக்காலின் எந்தப் பாகத்தில் தேய்க்க வேண்டுமென்பது. தொடையில் தேய்த்த முறையில் உள்ளங்கையால் தேய்த்தல். எழுத்தாசனத்தின் சரியான அமைப்பு. தேய்க்கும்போது தக்கிளி அட்டையின் மேலேயே சுழல வேண்டும். அட்டையை விட்டு மேலே கிளம்பக் கூடாது என்பது. கொக்கி ஆடாதிருக்கத் தக்கிளியைப் பிடித்துவிட வேண்டும். ஆடும் காரணம். அடிக்கடி சாம்பலை உபயோகிப்பதன் அவசியம். கண்டு நூலை அழுத்தமாக ஊற்றுதல். நல்ல பலமுள்ள நூல் நூற்க வற்புறுத்தல். வேகம் முக்கியமல்ல, பலமுள்ள நூல்தான் முக்கியம் என்பதை விளக்கிக் காட்டுதல். சிட்டம் போடுதல். கட்டுகள் உள்ள இடத்தைச் சேர்த்துக் கையில் பிடித்து முறுக்கவேண்டும் என்பதற்குக் காரணம்.

பருத்திச் சுத்தம் :—சூரியன் செய்யும் முறை, அதனால் ஏற்படும் நன்மைகள். எண்ணல் பயிற்சி. கூட்டல் பயிற்சி தூசி மட்டில் நீக்கிச் சுத்தம் செய்யும் முறை, அதனால் ஏற்படும் நன்மைகள். செய்த வேலையின் நேரமும் அளவும்.

பஞ்சரைத்தல் :—பலகை மணை, அதன் அமைப்பு. மரத்தின் நாரோட்டம் குறுக்காக இருக்கும்படி அறுத்திருக்கிறது. நீளம் சுமார் 7''. அகலம் சுமார் 4''. கனம் 1''. கம்பியின் நீளம் 8'' முதல் 9''. மழைக்காலத்தில் விதை சுலபமாய் நீங்குவதில்லை. காரணம். கம்பியில் தூசு நீங்க என்ன செய்ய வேண்டும். செய்த வேலையின் நேரமும் அளவும் அறிவித்தல்.

பட்டை போடுதல் :—பட்டைகளை வரிசையாக அடுக்குதல். பட்டைகளின் அடிப்பக்கம் ஒரே அளவாக இருக்க

வேண்டும். வெளியே நீட்டிக்கொண்டும் உள்ளடங்கியும் இருந்தால் காற்று பட்டைக்குள் புகுந்து பருத்துவிடும். காற்று உள்ளே புகுந்த பட்டையைக் காட்டி அதை நூற்றுப் பார்க்கச் செய்தல். இக்காரணத்தினால் பட்டைகளை அழுத்திக் கட்டிவைக்க வேண்டும். அடித்த பஞ்சை உடனே பட்டை போட்டுவிட வேண்டும். காரணம். பத்து பத்துப் பட்டைகளாகச் சேர்த்துக் கட்டுதல். மொத்தம் போட்ட பட்டைகள். பத்துக் கட்டுகளைச் சேர்த்து நூறு பட்டை கொண்ட கட்டு. பத்து பட்டைகளின் எடை. ஒரு கட்டின் எடை. அடித்த பஞ்சை இடக்கையிலுள்ள பட்டைக் குச்சியால் வலக்கை உதவியுடன் எடுத்தல். பலகையில் சமமாகப் பஞ்சைப் பரப்புதல். பஞ்சு ஓர் இடத்தில் அதிகமாகவும் ஓர் இடத்தில் குறைவாகவும் வைத்துப் பட்டை போடுவதால் ஏற்படும் தீமை.

ஈரிழை முறுக்கேற்றல் :—தக்கிளி நிலை. அதன் அமைப்பு வலக்கையால் முறுக்கேற்றுதல். முறுக்கேற்றும் தக்கிளி எதிர்ப்புறமாக இடப்புரியாகச் சுற்றவேண்டும் என்பது. அதனால் தக்கிளியில் முறுக்கு நூலை வலம் புரியாகச் சுற்ற வேண்டும். நூல் கொக்கியில் சரியாக மாட்டச் செய்ய வேண்டும். நூல் பிரிந்து வராதிருக்க என்ன செய்ய வேண்டும் என்பது. பிடிநூல் அதிகம் விடவேண்டும். நூலை இடக்கையால் பிடிக்கும் முறை, வேலையின் நேரமும் அளவும்.

## ஒன்பதாம் மாதம்

நூற்றல் :—வலக் கெண்டைக் காலில் தேய்த்து ஊற்றுதல். எழுத்தாசனத்தின் நன்மை. தக்கிளியில் நூல் ஊற்றும் போது தக்கிளியை நகர்த்தாமல் பட்டைப் பஞ்சைப் பிடித்திருக்கும் கையைத் தக்கிளியை நோக்கிக் கொண்டு வருதல். ஊற்றும்போது தக்கிளி எவ்வளவு சாய்ந்திருக்க வேண்டும் என்பது. தக்கிளியின் தன்மை. அதன் ஒவ்வொரு பாகத்திலும் ஏற்படக்கூடிய குறைகள். வட்டு சிறியதாகப் பெரியதாக இருப்பதனால் ஏற்படும் பலன். அதன் வேலை. வட்டின் ஓரம் மேலிருந்து கீழ்ப்

புறமாகச் சாய்ந்திருப்பதன் காரணம். சாய்த்து நூலை ஊற்ற வசதி. கம்பியிலிருந்து வட்டு நழுவாமலிருக்க இரண்டு வெவ்வேறு உலோகத்தால் ஆக்கப்பட்டிருக்க வேண்டும். இரும்பு - பித்தளை.

பருத்திச் சுத்தம் :—பருத்தி எடுத்தல், செடியை மிதிக்காமல் பருத்தி எடுத்தல். பருத்தியை எடுக்க வேண்டிய நேரம்—காலை. காலையில் பருத்தியை எடுக்க வேண்டிய காரணம். சருகு குருடு முதலியவை நீக்கி எடுத்தல். கோது பிரிக்காமல் தூசு நீக்குதல். வரிசைக்கு 9 வைத்து 100 வரை எண்ணுதல். பருத்திச் சுத்தம் செய்வதில் வேகம். துப்புரவு மனப்பான்மை.

பஞ்சரைத்தல் :—பருத்தியைக் காய வைத்து அரைக்க வேண்டிய அவசியம். ஈரம் ஆவியாகி உலரும். அதனால் துசும்புகள் விதையிலிருந்து சுலபமாக நீங்கும். வலம் இடம் நேர் ஆகிய மூன்று முறைகளிலும் வீராசனத்தில் அமர்ந்து அரைத்தல். பலகை வழுக்குவதன் காரணம். அதை நீக்க மணலில் உராய்தல். கம்பியின் துரு நீக்குதல். கால அளவு கணக்கிடல்.

பட்டை போடுதல் : அடிபடாத பஞ்சு குருடு பிஞ்சு சொத்தை இவைகளை நீக்கிப் பட்டை போடுதல். துசும்புகளைப் பலகையின் குறுக்கே வைத்துப் பட்டை போடுதல். கைப்பிடிப் பலகையை உள்ளங்கையால் அழுத்தி வேகமாக உருட்டுதல். 3-4 தடவைகளில் உருட்டிப் பட்டை போடுதல்.

ஈரிழை முறுக்கேற்றல் :—தொடர்ந்த பயிற்சி.

பத்தாம் மாதம்

நூற்றல் :—சுகாசனத்தில் இடக்கை ஆள்காட்டி விரலால் தேய்த்து நூற்றல். எந்த விரல்கள் தக்ளியைச் சுழற்ற வேண்டுமென்பது. தக்ளி இடம்புரியாகச் சுற்றுகிறதா வலம் புரியாகச் சுற்றுகிறதா எனக் கவனிக்கச்

செய்தல். வலம் புரியாகச் சுழல்வதன் காரணம் விளக்கல். தக்கிளியின் வேகம் குறையாமல் நிலையான வேகத்துடன் சுழலச் செய்தல். இடக்கையால் ஏன் நூற்கவேண்டும். கம்பி என்ன உலோகம். கம்பியின் நீளம், எடை, அதன் வேலை, கூர், அதன் வடிவம், நீளம். நீளமாக இருப்பதன் காரணம். கொக்கி, அதன் உருவம் எதைப்போல இருக்கிறது. அதன் வேலை, கொக்கியின் அகலம் குறைவாயும் அகலமாயும் இருப்பதனால் நூற்பில் உண்டாகும் மாறுபாடு. தக்கிளி சுழலும்போது தலை ஆடுவதன் காரணம். (ஏகமையப்புள்ளி.) நூற்றலில் பாதிநேரம் வலது கெண்டைக்காலில் நூற்கச் செய்தல் 80 சுற்றுகளாகக் கண்ணி கட்டுதல். நல்ல நூலின் லட்சணங்கள். நூலின் முறுக்கு, சமம், பலம் உள்ள நூல்.

பருத்திச்சுத்தம் :—வேகமாகச் சுத்தம்செய்தல். வகுப்புக்கு வேண்டியவை முழுமையும் சுத்தம் செய்து கொள்ளல்.

பஞ்சரைத்தல்:—விதைகளில் துசும்பு ஒட்டி வராமல் அரைத்தல். அரைக்கும்போது விதை பிரிந்து போவதைக் கவனித்தல். துசும்பை உருளைக் கம்பி அழுத்திப் பிடித்துக் கொண்டு விதை முன்னே தள்ளப்படுவதைக் கவனித்தல். கம்பியின் இரு வேலைகள். நேரமும் எடையும் கணக்கிடல்.

பட்டை போடுதல் :—சமமான பட்டை போடப் பலகையில் சமமாகப் பஞ்சைப் பரப்பவேண்டுமென்பது. நீளத்தில் ஒரே அளவுள்ளதாகப் போடுவதன் அவசியம். அடி பெருத்து நுனி சிறுத்து இல்லாமல் போடுதல். 16 பட்டை கொண்ட கட்டுகள். 1, 2 தோலா எடையுள்ள கட்டுகள். அதுபற்றிய கணக்குகள்.

ஈரிழை முறுக்குதல் :—இடம்புரியாக முறுக்கேற்றி இடம் புரியாகக் கண்டு நூல் சுற்றுதல். கண்டு நூல் சுற்றுவதில் இடம்புரியாகச் சுற்றுவதற்கும் வலம் புரியாகச் சுற்றுவதற்கும் உள்ள வேறுபாடுகளைக் கண்டறிதல். இடக்

கெண்டைக்காலில் தேய்த்து முறுக்கேற்றிச் சுற்றப் பயிற்சி.

## பதினோராம் மாதம்

நூற்றல்:—இடக்கையால் இடது தொடையில் தேய்த்து நூற்று ஊற்றுதல். வலது தொடையிலும் இடது தொடையிலும் மாறி மாறி நூற்றல். இது சுகாசனம் அமைப்பு. இடது தொடை உயரமாக வலக்காலை முன் மடித்து உட்காருதல். தொடையின் எந்தப் பாகத்தில் ஆரம்பிப்பது. உள்ளங் கையில் தக்கிளியைப் பிடித்து முன் நோக்கித் தேய்க்க வேண்டும். வலம்புரியாகத் தக்கிளி சுழல இப்படி மாற்றித் தேய்க்கிறோம் என்பதை எடுத்துக் காட்டல். நல்ல தக்கிளியின் லட்சணங்கள். அதன் ஒவ்வொரு பாகமும் அமைந்திருக்க வேண்டியது எப்படி.

பஞ்சு சுத்தம் :—தொடர்ந்த பயிற்சி

பஞ்சரைத்தல் :—வேகம். உள்ளங்கையில் வலி ஏற்படாத வண்ணம் கம்பியை உருட்டுதல். செய்யும் வேலையைத் தொடர்ந்து சொற்றொடர்களால் விளக்குதல்.

பட்டை போடுதல் :—துசும்புகள் பட்டையின் நீளப் போக்கில் அமையுமாறு பட்டை போடுதல். பட்டை எடை எண்ணிக்கை $\frac{1}{4}$, $\frac{1}{2}$, $\frac{3}{4}$ தோலா அளவில் பட்டைகள் எண்ணல் (4, 8, 12) என்பன.

ஈரிழை முறுக்குதல் :—தொடர்ந்த பயிற்சி.

## தொழில் வகுப்பு முறை

இவ்வகுப்பில் பருத்தியிலிருந்து (பஞ்சடித்தல் நீங்கலாக) நூற்றல்வரை எல்லா வேலைகளையும் பிள்ளைகளே செய்கிறார்கள். காலை வகுப்பில் பருத்தி சுத்தம் பஞ்சரைத்தல் பட்டை போடல் முதலிய வேலைகள் செய்யலாம். மாலை வகுப்பு முழு நேரமும் நூற்கலாம். இரண்டாவதாக ஒரே சமயத்தில் வகுப்பை 5 குழுக்களாகப் பிரித்துக் கொள்ளுதல். ஒவ்வொரு குழுவுக்கும் ஒவ்வொரு தலைவரை ஏற்

படுத்தல். ஒரு குழு பருத்திச் சுத்தம் செய்யவும், ஒரு குழு பஞ்சரைக்கவும் ஒரு குழு பட்டை போடவும், ஒரு குழு நூற்கவும் செய்தல். அடுத்த வேளையில் பருத்தி சுத்தம் செய்த குழு பஞ்சரைக்கவும், பஞ்சரைத்த குழு பட்டை போடவும், பட்டை போட்ட குழு நூற்கவும், நூற்ற குழு பருத்தி சுத்தம் செய்யவும் செய்யலாம். அடுத்த வேளையில் அதே போல் மாற்றுதல். ஒரு முழு வரிசை இந்த நான்கு வேலைகளையும் செய்யும் இப்படியாக நான்கு வரிசைகளிலும் நான்கு குழுக்கள் உட்கார்ந்து வேலை செய்வது மிகவும் ஏற்றதாக இருக்கும். இந்த நான்கு வேலைகளும் ஆறும் மாதத்திலிருந்து பூர்த்தியாகத் தொடங்குவதால் இந்த வேலை முறையை ஆறும் மாதத்திலிருந்து பின்பற்றுவது நலமாக இருக்கும். அதற்குள் பிள்ளைகளும் இவ்வாறுள்ள குழு முறையில் வேலை செய்வதற்குத் தயாராகி விடுவார்கள். ஒவ்வொரு குழுவின் தலைவரும் இந்த வேலைகளைக் கவனித்துக் கொள்ளச் செய்ய வேண்டும் கருவிகளையும், பொருள்களையும் தலைவர்கள் பரிமாறிக் கொள்ளச் செய்ய வேண்டும். வகுப்புக்கு வேண்டிய பருத்தி முழுமையும் சுத்தம் செய்யவும் பட்டை போடவும் செய்யலாம். இதனால் பிள்ளைகளே வேலையைத் திட்டமிட்டுச் செய்யும் அறிவு உண்டாகிறது. மேலும் இதனால் சமூகப் பயிற்சிக்கான வசதிகளுக்கு இடமுண்டாகிறது இந்த நான்கு வேலைகளும் ஒரே சமயத்தில் நடக்கும் போது வகுப்பு மிகவும் நன்றாக இருக்கும்

## (ஆ) துணைத்தொழில் — தோட்ட வேலை

தோட்டவேலை சம்பந்தமாக மாதவாரிப் பாடத்திட்டம் தரும்போது அதுபற்றி நிச்சயமான சில வரையறைகள் உள்ளன. தோட்டவேலை பொதுவாய்ப் பருவகால மாறுதலைப் பொறுத்தது. மாதத்துக்கு மாதம் நிலைமை வேறு. அந்தந்த மாதம் செய்ய வேண்டிய வேலையை அடுத்த மாதம் செய்யலாமென்று தள்ளி வைக்க முடியாது.

தோட்டவேலை, இட அமைப்பு, மண்வளம், நீர்வசதி ஆகியவற்றையும் பொறுத்திருக்கிறது. அன்றியும் எந்த

வசதி இருந்த போதிலுங்கூட, முதல் வகுப்புப் பிள்ளைகள் சிறு குழந்தைகளானபடியால், அவர்கள் வேலை ஓர் அளவுக்கு உட்பட்டது.

மேலும், எல்லா நிலைமைகளுமே தமிழ் நாட்டில் ஓர் இடத்தில் உள்ளதுபோல் மற்றோர் இடத்தில் இல்லை. சீதோஷ்ண நிலைமை இடத்துக்கு இடம் மாறுகிறது. ஓர் இடத்தில் மழை அதிகம். மற்றோர் இடத்தில் மழையே இல்லை. தஞ்சையும் செங்கற்பட்டும் உதாரணங்கள். ஆதலால் பின்வரும் திட்டத்தை மேற்கொள்ள முயலும்போது இந்த மாறுபாடும் நினைவு இருக்க வேண்டும். பொதுவாகப் பின்வரும் திட்டமானது ஐப்பசி மாதத்தில் பருவ மழை பெய்யும் பிரதேசத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.

ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதம் செய்யும் வேலை, பயிர் இவை சம்பந்தமாக உள்ள கதை, பழமொழிகளைக் கற்பிப்பது அவசியம்.

ஜூன் (வைகாசி - ஆனி)

கோடை விடுமுறைக்குப் பின் பாடசாலை திறக்கிறது. பொதுவான தோட்டத் துப்புரவு வேலை இருக்கும். கிளை, தழை, குப்பை, வேண்டாத செடிகள் இவற்றைச் சேகரித்து எருக்குழியில் போடுதல். வேலி அடைத்து நிலத்தை ஒரு முறை இருமுறை கொத்தித் தருவது மேல் வகுப்பு வேலை. கொத்திய இடத்தில் ஆசிரியர் பிள்ளைகளின் உதவியால் நிரவி வரப்புப் போடலாம். செய்யத்தக்க வேலை இரண்டு: கீரை தெளித்தல், சாத்தூர் மிளகாய் விதை தெளித்தல்- நாற்று இருந்தால் நடுதல். மாத முதல் வாரத்தில் மேல் வகுப்புப் பிள்ளைகளைக்கொண்டு பயிர்க்குழிகள் தயாரித்து வைக்க வேண்டும். சில சமயம், மாதக் கடைசியில் இக் குழிகளில் பறங்கியும், பூசணியும் பயிர் செய்யலாம்.

கீரைப்பாத்தி, அமைப்பு, வாய்க்கால் வசதி. மிளகாய்ப் பாத்தி, அமைப்பு, வாய்க்கால் வசதி. விதை தெளித்தல், தெளிப்பதன் கருத்து. சாம்பல் தூவுதல், தென்னோலை

போட்டு மூடி வைக்கோல் தெளித்தல்—இதன் பொருள்—ஈரங்காத்தல், தண்ணீர் தெளிக்க அனுகூலம். நீர் தெளித்தல் – பூவாளி. பூவாளியின் அவசியம். மூட்டம் பிரித்தல். விதை முளைத்தல், அதற்கான நாட்கள், தண்ணீர் தெளித்தல்.

பொதுவாக மாத முழுமையும் சாண உரம், தழை குப்பை சேகரம் செய்தல்.

ஜூலை (ஆனி—ஆடி)

பொதுவாக எல்லாச் சாகுபடி வேலைக்கும் தொடக்கம், ஆற்றுப் பாசனம் உள்ள இடங்களில் புது வெள்ளம் வரும். மிளகாய் நாற்று நடவு, பயிர்க் குழிகளில் விதை ஊன்றுதல். இரண்டு வகை :

1. அவரை – அதன் வகைகள். தட்டைப் பயிறு.
2. பூசணி வகை. தரையில் படர – பூசணி, பறங்கி, வெள்ளரி, மிதிபாகல். சுரை, பீர்க்கு வேலியில் படர. பந்தல் - பாகல், புடல், கக்கரி.

ஆறு மாதக்கீரைத் தண்டு விதை தெளித்தல்.

கத்தரி நாற்று விடுதல். கிழங்குப் பயிர்கள்—சேனை, சேமை, கருணைக்கிழங்கு, மஞ்சள். கொத்துமல்லி விதையை உடைத்தல், தெளித்தல். மொச்சை, சோளம், கேழ்வரகு, துவரை, கம்பு முதலான புன்செய்ப் பயிர்கள். பாதை ஓரங்கள் முதலிய வசதியான இடங்களில் அலங்காரமாக, சிவப்புப் பொன்னுங்கண்ணி, பச்சைப் பொன்னுங்கண்ணி, மான்செவிப் பசலை முதலியவற்றை இணுக்காக ஒடித்து அலங்காரமாக நடுதல். வேலிக்கால்களில் செம்பருத்தி, நந்தியாவர்த்தம், அலரி போன்ற பூஞ் செடிகள் நடுதல்—இரவு ராணி, மருதோன்றி, (மருதனை). புதிய வாழை. வேலியோரம் முருங்கை, அகத்தி நடுதல். சுண்டை பயிர் செய்தல். நன்செய் இருந்தால் நெற்பயிர்.

சென்ற மாத முளைக் கீரையைக் கலைத்துப் பறித்தல். முன்னமே நட்ட மிளகாய்க்குக் களைவெட்டுதல். மிதி

பாகல் களை வெட்டுதல் கத்தரி, கொத்து மல்லி இவைகளுக்கு முன்போல் மூட்டம் போடுதல் நீர் தெளித்தல், மூட்டம் பிரித்தல். பெரிய வகுப்புப் பிள்ளைகள் வாய்க்காலில் நீர் இறைத்தால் மடைமாறுதல்.

ஆகஸ்ட் (ஆடி-ஆவணி)

களை எடுத்தல். அவரை, பூசணி இனம், சாத்தூர் மிளகாய், கத்தரி. நாட்டு மிளகாய் – பறித்து நடுதல். கீரை கொத்துமல்லி – வாரமொரு முறை கலைத்துப் பிடுங்குதல்

கருணை, மஞ்சள் – களை கொத்துதல். வாரமொரு முறை தண்ணீர், பதினைந்து நாளைக்கு ஒரு முறை களை. வெங்காயம்—நடுதல். சீமைத் தக்காளி விதைத்தல். எறும்பு இழுக்காமல் பாதுகாத்தல். முளைத்துச் சில நாள் வரை வெயில் படாமல் பாதுகாத்தல். கொத்தவரை, வெண்டை விதை ஊன்றுதல். தூரம், ஊன்ற வேண்டிய ஆழம் முள்ளங்கி – சம தரையில் ஊன்றுதல். நெருக்கி ஊன்றலாம். ஆறு அங்குல தூரம். நாலு நாட்களில் முளை. பத்து நாளில் குச்சியால் களை எடுக்கலாம். சாத்தூர் மிளகாய், கருணை – நன்ருய் மட்கிய எருவிடுதல். கம்போஸ்டு செய்வதில் பங்கு கொள்ளுதல். தண்ணீர் இறைத்தல் –சாத்தூர் மிளகாய், கத்தரி, பயிர்க்குழி, மிதிபாகல். அவரை, பாகல் புடல் - படர்கொம்பு செருகுதல். பந்தல் போடுதல்.

தனிப்பந்தலாக அல்லது பாடசாலை முன் புறத்தில் வளைவுப் பந்தலாக அமைத்தல் - மல்லிகை நித்தியமல்லிகை அடுக்கு மல்லிகை, முல்லை, ரெங்கூன் மல்லிகை, சம்பங்கி, ஆண்டிகோனு, மயிர் மாணிக்கம், பசளைக்கொடி - சிவப்பு, வெள்ளை. பூஞ்செடிகள்—பல நிறங்களில் காசித்தும்பை, சூரிய காந்தி, செவ்வந்தி, துலுக்கச் சாமந்தி, மிதிபாகல்— எருவிட்டுக் கொத்திக் களை எடுத்துக் கட்டி இல்லாமல் சமப்படுத்துதல்.

செப்டம்பர் (ஆவணி - புரட்டாசி)

சீமைக் காய்கறி—முட்டை கோஸ், நூல்கோல், விதை தெளித்தல். தக்காளி நடுதல், நட்ட கன்றுக்கு நிழல் கொடுத்தல். வெங்காயம்—பதினைந்து நாளில் தாள் விடும். வளர்ச்சி 5 அங்குலம். அதிகம் காயாமல் நீர் விடுதல், களை எடுத்தல்—குச்சியால். ஆறுமாதக் கீரைத் தண்டைப் பெயர்த்து நடுதல். கருணை மீண்டும் களை, தண்ணீர். கொத்தவரை—பக்கக் கிளைகளைத் தவறாமல் கிள்ளி விடுதல். கொத்தவரை வெண்டை மிதிபாகல்—காய் பறித்தல். மிதிபாகல் கையால் அழுத்திப் பார்த்துக் காய் பறிக்கும் முறை.

காய்ப்புக்கு வரும் பயிர்களில் விதைக்குக் காய் நிறுத்திக் கொள்வது அவசியம். பயிர்க் குழிகளுக்கு அதிகத் தண்ணீர் விடுதல். புடல், பாகல், காய்க்கும். ஒணான் நறுக்குதல். கவனித்தல். முள்ளங்கி பறித்தபின் மீண்டும் முள்ளங்கி போடலாம். பொன்னாங்கண்ணி, பசலை சமைக்கக் கத்தரித்து எடுத்தல். ஈரங்காயாமல் நீர் பாய்ச்சுதல், சீமைக் காய்கறி நாற்றுப் பறித்து நடுதல்.

அக்டோபர் (புரட்டாசி - ஐப்பசி)

பலவகைக் காய்கள் பறித்தல். கீரை ஆய்தல். கொத்தவரைக்குக் கம்பு நிறுத்திக் கட்டுதல். தக்காளிக்குப் பந்தல் போடுதல். வேண்டுமானால் தக்காளி பதியன் போடுதல்.

காசித்தும்பை முதலிய பூஞ்செடிகளுக்கு எருவிடுதல். தக்காளி எருவிட்டு, மண் அணைத்து நீர் பாய்ச்சுதல். புழு பூச்சிகள் கவனித்தல். கத்தரிக்குக் களை கொத்தி எரு விட்டு மண் அணைத்தல். வெங்காயத்துக்குக் களை கொத்தித் தண்ணீர் இறைத்தல். ஆறு மாதத்துக் கீரை களை எடுத்தல். வெள்ளரிப் பிஞ்சு பறித்தல்

நவம்பர் (ஐப்பசி - கார்த்திகை)

அடை மழை. பாத்திகளில் நீர் தேங்காமல் வடி கட்டுதல். வாய்க்கால்கள் அமைத்தல். சாய்ந்த செடி

களை நிமிர்த்துக் கட்டுதல். தக்காளிக் காய்கள் தரையில் படாமல் தூக்கிக் கட்டுதல். மழைக்கு முன்பே புடல், பாகல், மிதிபாகல் விதை எடுத்துச் சேமித்தல். சேமிக்கும் முறை, நீரில் அலம்பி எடுத்து வைத்தல், சாணத்துடன் அடைதட்டிக் காயவைத்து எடுத்தல்.

டிசம்பர் (கார்த்திகை - மார்கழி)

கத்தரியில் விழும் புழு, பூச்சிகள்-சன்னூசி வண்டு பச்சாளை ஆகிய பூச்சிகள். போக்கும் முறை—சாம்பல் புகையிலைக் கஷாயம் அவரை—அசுகுணி - காலையில் சாம்பல் தெளித்தல். பாகல்—பச்சாளைப் புழு, கம்பளிப் புழு.

கத்தரிப் பழம் விதை எடுத்தல். பறங்கி பூசணி, காய்ப்பு, பிஞ்சு பறித்தல். ஆண்பூ. பெண்பூ வேறுபாடு, தத்துவம். மிளகாய்ப் பழம் பறித்துக் காயவைத்து எடுத்தல். அவரை - காய் பறித்தல், நெற்று எடுத்தல். வேலிப் பராமரிப்பு. நாட்டு மிளகாய் - பாத்தி அமைத்து விதை தெளித்தல்.

ஜனவரி (மார்கழி - தை)

பூஞ்செடிகள் நன்றாய்ப் பூக்கும். கிரமமாக எருவிடுதல், நீர் பாய்ச்சுதல். காசித் தும்பை—விதைஎடுத்தல். புதிய கீரை, கொத்துமல்லி, முள்ளங்கி விதை தெளித்தல் - பாத்தி அமைத்தல். நாட்டு மிளகாய் நாற்று நடுதல். வெண்டை, கொத்தவரை, மிதிபாகல், புதிதாகப் போடுதல், கோடைப் பறங்கி போடுதல். காய்பறித்தல். வெங்காயம் வெட்டி எடுத்தல். எடுத்ததைச் சேமித்து வைத்தல். புதிதாக வெங்காயம் போடுதல். காய் பறித்தல், தக்காளி விதை எடுத்தல்.

பிப்ரவரி (தை - மாசி)

புதுப் பயிர்கள். நடுதல், நீர் பாய்ச்சுதல், களை எடுத்தல், எருவிடுதல். கருணை, மஞ்சள், இஞ்சி வெட்டுதல்: வெட்டி எடுத்ததைச் சேமித்தல். புழு, பூச்சி, நோய் சம

பந்தமான பாதுகாப்பு. காய் பறித்தல், விதை எடுத்தல். காய்ந்த செடிகளைப் பிடுங்கி எருக்குழியில் சேமித்தல்.

மார்ச்சு (மாசி - பங்குனி)

நோயில் கவனம் - புழு, பூச்சிகள். மிளகாய், கத்தரிகளை எடுத்து எருவிடுதல். தண்ணீர் இறைத்தல். கவனித்துக் காய் பறித்தல். பழத்திற்கேற்ற காய்களை நிறுத்துதல். பறிக்கத் தக்க பருவம். கோடைப் பறங்கிக்குத் தண்ணீர் இறைத்தல். முள்ளங்கி—45 நாளில் பறித்தல். தோட்டம் பொதுவாய்க் காய்ந்து வரும் காலம். காயக் காயச் செடிகொடிகளை எருக் குழிக்கு கொண்டுவர வேண்டும். கத்தரி, மிளகாய்க்குத் தண்ணீர் இறைத்தல். பின்னர் மறுகாம்பு காய்க்கு இது அனுகூலம் செய்யும்.

ஏப்ரல் (பங்குனி - சித்திரை)

கோடை ஆரம்பம். தோட்டம் காய்ந்து வரும். மறுகாம்பு காய் காய்த்து வரும். கழிவுகளை எருக்குழியில் சேர்க்க வேண்டும். தழை உரத்துக்காக இலை சருகு சேகரிக்கலாம். மழை இருந்தால் தோட்டத்தைக் கொத்தலாம்.

குறிப்பு—மேலே குறிப்பிட்டவை எல்லாம் முதல் வகுப்புப் பிள்ளைகள் செய்யக்கூடும் என்று சொல்ல முடியாது. எனினும் இவற்றில் சிற்சில பயிர்களை ஆங்காங்கு முதல் வகுப்புப் பிள்ளைகளைக் கொண்டு செய்யலாம். முடிந்தால் பெருவள்ளி, காய்வள்ளி, பப்பாளி இவற்றை உரிய பருவங்களில் பயிரிடலாம். பப்பாளி சில வருடங்கள் இருந்து பலன் கொடுக்கும். தோட்டத்துக்கு அழகாகவும் இருக்கும். காய்ப்பும் அதிகம்.

முக்கியமாய்ச் சேர்த்துக்கொள்ள வேண்டியது பருத்திச் சாகுபடி. வேலிப் பருத்தி செம்பருத்தி ஆகிய இரண்டும்

ஆடிமாதம் பயிரிடத் தொடங்கினல் பல வருஷங்கள் வரை இருந்து பலன் கொடுக்கும். வேலிப் பருத்திச்சுளை பெரியது. செம்பருத்திச் சுளை சிறியது. வேலிப் பருத்தியில் இரண்டாம் வருஷம் புழு விழுந்துவிடும். ஆகையால் இது நல்ல தல்ல. கருங்கண்ணி மணல்சாரி நிலத்திலும், களிமண்ணிலும் நன்றாய்ப் பயிராவதில்லை. ஒட்டுக் கம்போடியா என்ற ஒரு புதிய ரகம் மணல்சாரியில் நன்றாகப் பயிராகிறது. துசும்பு நீளம். அதிகமான பலன் கொடுக்கும். ஆனல், ஆரம்பத்தில், கருங்கண்ணியைப் போல் நூற்கச் சுலபமாயிராது. பழகப் பழகச் சுலபமாயிருக்கும். பயிரிடத்தகுந்தது. கார்த்திகையில் பயிரிடத் தொடங்கினல் மூன்றுமுறை நல்ல பலன் கொடுக்கும். ஏறக்குறைய ஒரு வருடப் பயிர். கோடையில் தண்ணீர் இறைக்க வேண்டும். பருத்தி, அன்றாடம் காலையில் வெடித்தவுடன் மண், தூசி படாமல் எடுக்கவேண்டியது அவசியம். ஈரமாயிருந்தால் உலர்த்த வேண்டியது அவசியம். பஞ்சாப் பருத்தி என்ற புதுரகம் வழக்கத்துக்கு வருகிறது. பயிரிடத் தகுந்தது.

## 10. இயைபு முறை

ஆதாரக் கல்வியைத் 'தொழில் மூலம் கல்வி' யென்றும் சொல்கிறோம். அதாவது, இது வெறும் தொழிலை மட்டும் கற்பிக்கும் கல்வியல்ல; மற்றப்படி, தொழில் மூலமாய்க் குழந்தையினிடமுள்ள எல்லாவிதத் திறன்களையும் விளக்கம் பெறச் செய்கிறோம். அறிவு பெறுவதற்கு இது வரையில் புத்தகமே கருவியாக இருந்துவந்தது. இந்த ஏட்டுப் படிப்பு நிலையை மாற்றி, 'செய்து கற்றல்' என்ற கோட்பாட்டை இதில் அமுலுக்குக் கொண்டு வருகிறோம். செய்கிற தொழிலில் ஒவ்வோர் அம்சத்தையும் இது ஏன் எப்படி என்று இளம்பிள்ளை ஆராய்ந்து கற்றுக்கொள்ளும்போது, அவனுடைய சொந்த அறிவு தானக வளர்கிறது. கிளிப்பிள்ளை போல் ஏட்டிலிருப்பதை ஒப்புவிக்காதபடி, புத்திபூர்வமாக ஒவ்வொன்றையும் அறிகிறான். இதனல் செய்கிற தொழிலும் மேம்பட்டு அதனல் வரும் பலனும் அதிகமாகிறது.

சம்பந்தமில்லாத வெறும் புத்தகப் படிப்பில் ஒன்றைக் கற்பிப்பதற்குச் சொற்களும், புத்தகங்களுமே கருவியாய் இருக்கின்றன. ஒரு பொருளைத் தெரிந்துகொள்வதற்கும் ஒரு செயலைப் புரிந்துகொள்வதற்கும் அனேக ஆயிரம் வார்த்தைகளும் அனேகக் குறிப்புக்களும் தேவைப்படுகின்றன. ஆனால் ஆதாரக்கல்வி முறையில், மாணக்கன், சம்பந்தமுள்ள வஸ்துக்களோடு தானே பழகுகிறான். இவற்றுள் ஒன்றைக் கற்பிக்க வேண்டுமானால் ஆசிரியர் சில வார்த்தைகள் மட்டுமே சொன்னால், குறைந்த நேரத்தில் மிகவும் செவ்வையாக மாணக்கன் கற்றுக்கொள்ளுகிறான். இங்கு அவனுக்கு உதவுவன, புத்தியோடுகூட, செயலில் ஈடுபடுகிற கர்மேந்திரியங்கள். முழுமையும் இப்படிக் கற்றுவருகிற அறிவு, அவனோடு ஒன்றிவிடுவதால், பிற்பட்டு மறந்து போவதற்கு இல்லை; செய்து கண்ட உண்மையாதலால் இதில் சந்தேகம் தோன்றுவதுமில்லை.

குறிப்பிட்ட ஒரு செயல் செய்தபின் அச்செயலில் அடங்கியுள்ள அறிவுப் பகுதிகள் அத்தனையும் பிள்ளைகள் காணுமாறு செய்வதே இயைபு முறையாகும். ஒவ்வொரு செயலிலும் பல்வேறு செய்திகளும் உண்மைகளும் அடங்கியிருக்கின்றன. இவற்றை அறிவது பிள்ளையின் வேலைக்கும், அறிவுக்கும் உபயோகமாக இருக்கிறது. இவற்றையே நாம் இங்கு எடுத்துத் தனிப்படுத்திக் காட்டுகிறோம். இதையே வேறுவகையில் சொல்வதானால், ஒவ்வொரு செயலும் தன்னிடம் பொதிந்துள்ள ரகசியத்தை வெளிப்படுத்தும்படிச் செய்ய முயல்கிறோம் எனலாம். இயைபு முறையென்பது மறைவாயிருப்பதை வெளிப்படுத்துவது. இல்லாததைக் கொண்டுவந்து சேர்க்க முடியாது. இயைபு என்ற பெயரில் எதையும் சொல்லவும் கூடாது; சொல்லவும் முடியாது. குறித்த ஒரு செயலில் இன்ன பாடங்களை

இயைபுபடுத்திப் போதிக்கவேண்டும் என்று ஆத்திரப்பட்டுச் சம்பந்தமில்லா தவற்றுக்கு வலியச் சம்பந்தம் கற்பித்துப் போதிக்க முயல்வது கேடாகும். இது இயைபு முறையுமாகாது. சம்பந்தம் என்பது இயல்பாகச் செயலிலும் பாடத்திலும் பொருந்தியிருக்கவேண்டும்.

ஆசிரியர் பிள்ளைகளைப் பக்கத்து ஊர்ச் சந்தைக்கு அழைத்துச்செல்கிறார். சந்தை நடக்கும் இடம், சந்தையில் விற்பனையாகும் பொருள்கள், அவை உற்பத்தியாகுமிடங்கள், விலைவாசிகள், சந்தை நடக்கும் நேரம், அங்கு வரும் மக்களின் தரம், அங்குள்ள துப்புரவு நிலைமை முதலியவற்றைக் கவனித்து அறிந்து, வகுப்பில் இயைபு படுத்திப் போதிக்கவேண்டும். ஆனால் வகுப்பில் ஆசிரியர் சந்தையில் இன்னும் பார்த்த பொருள்களைக் கேட்க, பிள்ளை கரும்பைக் குறிப்பிடுகிறான். கரும்பைப் பற்றிய செய்திகளும் அறியத் தக்கவைதானே என்றெண்ணிக் கரும்பைப் பற்றி பாடம் நடத்துவது சரியாகாது. ஏனெனில், பிள்ளைகள் கரும்பைக் கண்ணால் கண்டார்களே தவிர அது பற்றிய செயல் எதையும் செய்யவில்லை; ஆராய்ச்சியும் நடத்தவில்லை; கரும்பைத் தின்று ருசி பார்க்கவுமில்லை. கரும்பில் பிள்ளைகள் கவனத்தை ஆசிரியர் ஈடுபடுத்தவுமில்லை. ஆகவே, இங்குப் பாடம் நடத்துவது பொருந்தாது; இது ஆதாரக்கல்வியாகாது, இயைபு முறையுமாகாது.

தலை சீவுதல் என்ற செயலுடன் இயைபுபடுத்தி ஆசிரியர் பாடங்கள் போதிக்கிறார். அப்போது கணித பாடம் போதிக்க வேண்டுமே யென்ற ஆசையில், அவர் 1 சீப்பு 9 பை வீதம் 36 சீப்பு விலை என்ன; 1 சேர் நல்

லெண்ணெய் 12 அணு வீதம் 12 சேர் நல்லெண்ணெய் விலை என்ன என்று கேட்கிறார். இயைபு முறைக்கு இந்தக் கணக்கில் சம்பந்தமே யில்லை. 36 சீப்பு, 12 சேர் நல்லெண்ணெய் ஆகியவை தலைசீவும் செயலுடன் சம்பந்தப்படாத விஷயம். அதே போல கணக்குப்பாடம் என்று தனியாக வைத்துக் கொண்டு, அதில் 1 சிட்டம் $4\frac{1}{2}$ அணு வீதம் 16 சிட்டம் விலை என்ன என்று ஆசிரியர் கேட்கிறார். சிட்டம் என்ற பெயர் சொன்ன மாத்திரத்திலே அது ஆதாரக் கல்வியோ, இயைபுமுறையோ ஆகாது. எந்த விதமான வகுப்புச் செயலோடும் இக் கேள்வி சம்பந்தப்பட வில்லை. ஆசிரியர்கள் இப்படிப்பட்ட போதனை முறையை விட்டு விடவேண்டும்.

செயல் மூலம் அறிவு பெறவேண்டுமென்பதே இயைபு முறை. செய்து கற்றல் என்ற விதியை எல்லா நாட்டுக் கல்வி நிபுணர்களும் ஏற்றிருக்கிறார்கள். இந்த விதியை உற்பத்தி ரீதியாகவும், விஞ்ஞான ரீதியாகவும் அமைத்திருப்பதே இயைபு முறையாகும். வாழ்க்கையையும் கல்வியையும் இரண்டல்லாத ஒன்றாக இணைத்துவிட்ட பெருமை இந்த முறைக்கு உரியது. இந்தியர்கள் என்ற முறையில் தத்துவரீதியாக ஒருபடி முன்சென்றிருக்கிறோம் என்று நாம் பெருமைகொள்வது நியாயமாகும். ஆதாரக்கல்வி ஆசிரியர்கள், புத்திபூர்வமாக இதை உணர்ந்து மனப்பூர்வமாகச் செயலில் கொண்டு வந்தால், நம் சமூகம் அறிவிலும் ஆற்றலிலும் நிச்சயம் மேம்படும்.

பாட அமைப்பு

ஒரு வகுப்புக்குரிய முழுப் பாடத்திட்டத்தையும் மாத வாரியாகப் பிரித்துக் கொள்ள வேண்டும் என்று நாம்

சொல்கிறோம். அப்படியே மாதவாரியான திட்டத்தையும் வாரத் திட்டமாகப் பிரித்து அமைத்துக்கொள்ளுவது அவசியம். இதையே இங்கு பாட அமைப்பு என்று கூறுகிறோம். இதில் அந்தந்த வாரத்திற்குரிய செயல் திட்டமும் அதனோடு இயைபுபடுத்திப் போதிக்கவேண்டிய பாட விவரங்களும் அடங்கும். செயல் திட்டம் பிரதானமாகையால் அதற்கு முன்னேற்பாடு அவசியமாகிறது. இந்தக் கல்வி முறையில் தனியான பாடம் என்றில்லாமல், செய்கிற செயலோடு, பாடங்கள் இயைபு பட்டேயிருக்கின்றன. ஆகவே, இந்த இரண்டு அம்சங்களையும் ஆசிரியர் கவனிக்க வேண்டியவராகிறார். குறித்த வாரத்துக்குரிய செயலுக்கு ஆனவற்றைத் திட்டமிட்டுக் கொள்வது முதல் அம்சம். அந்தச் செயலைப் பிள்ளைகள் செய்யச்செய்து, அவர்களுடைய கவனத்தை எவற்றில் ஈடுபடுத்தி எவ்வகையான பாடங்களில் செலுத்த வேண்டும் என்பது இரண்டாவது அம்சம். அதிகத் திறமையுடைய ஆசிரியராக இருந்தாலும் கூட, இப்படிப்பட்ட ஓர் அமைப்பின்றி வகுப்பு நடத்துவாரானால், குறைபாடுகள் அனேகம் ஏற்படும். கற்பிக்க வேண்டிய பாடங்கள் நின்று போகும். மாதத்திட்டம் பூர்த்தியாகாது; குறித்த செயலிலிருந்து பெறவேண்டிய அறிவு முழுமையும் கை வராது. ஆகவே, இக் குறைபாடுகளைத் தவிர்க்கவேண்டி, ஆசிரியர் முன்னதாக ஒவ்வொரு செயல் திட்டத்துக்குரிய பாட அமைப்பையும் அவ்வப்பொழுது முன்னதாகத் தயாரித்த பின்னரே வகுப்புக்குச் செல்லவேண்டும்.

மாதிரிப் பாடத் திட்டம் -

செயல் - பலகை

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| 1 திட்டமிடுதல். ஆயத்தம் செய்தல். பலகைமணையை மணலில்தேய்த்தல், கம்பியில் துரு நீக்குதல். பருத்தியைக் காய வைத்தல். | கருவிகள் - பலகை மணை, கம்பி, அட்டை, தராசு. படிக்கல், பருத்தி, காகிதம். | கருவிகளைச் சுத்தம் செய்தல். கம்பியிலுள்ள துரு நீக்குதல். பருத்தியிலுள்ள தூசி நீக்குதல். | வேண்டிய கருவிகள், செயல்கள் பற்றித் திருத்தமாய்த் தொடர்பாகப் பிள்ளைகளுடன் பேசுதல். |
| 2 மந்திரிகள் மூலம் கருவிகள் வழங்குதல். பருத்தி நிறுத்தல். வீராசனத்தில் உட்காருதல். மணையை எதிரே வைத்தல். பருத்தியை அட்டையின்மேல் இடப்புறம் வைத்தல். | ,, | இடம்சுத்தம், அட்டை, காகிதம் கை கால், சுத்தம். | பெயரை உச்சரித்தல், கருவிகளின் பெயர். |
| 3 இரண்டிரண்டு சூரியன்களாக மணையில் வைத்தல். கம்பியை இரு உள்ளங்கைகளால் அழுத்தி உருட்டுதல். வேகமாக உருட் | | துரு ஏறின பஞ்சு. அழுக்கு விதைகளில் துரும்பு இல்லாமல் சுத்தம். பஞ்சில் நசுங்கிய விதையில்லா | செய்த வேலையைத் திருத்தமான உச்சரிப்புடன் தொடர்பாகச் சொல்லச் செய்தல், சுத்தம் செய்யும் போது பாடுதல், |

நூற்றல் தொழில்

மணையில் பஞ்சு அரைத்தல்

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| வகுப்பிலுள்ள பிள்ளைகள். வேண்டிய கருவிகள், அரைப்பதற்கு வேண்டிய பருத்தி :- ஒருவருக்கு 2 தோலா, 20 பேருக்கு 40 தோலா. நிறுத்தல் பயிற்சி, தராசில் படிக்கல் இடத்தட்டிலும் பருத்தி வலத் தட்டிலும் வைத்து நிறுக்கவேண்டும். ஏன்? | கம்பியில் துரு எப்படி உண்டாயிற்று? துரு நீங்க என்ன செய்ய வேண்டும்? ஏன் துரு நீக்க வேண்டும்? எப்படி? துருவின் நிறம். காற்றடிக்காத இடத்தில் அரைக்க வேண்டும். ஏன்? பருத்தியைக் காய வைக்க வேண்டும். ஏன் எப்படி? எங்கே எப்பொழுது ? | நிறுத்தல் எந்தக் கையால் பிடிக்க வேண்டும். எப்படி ? |
| வகுப்பிலுள்ள பிள்ளைகள், கொடுக்கவேண்டிய பலகை. மணை கம்பி, அட்டை — எண்ணிக்கை. 5 பேர் ஒரு குழு 20 பேர் 4 குழு. ஒருவருக்கு 2 தோலா பருத்தி ஒரு குழுவுக்கு 10 தோலா பருத்தி, 4 குழுவுக்கு 40 தோலா. 40 தோலா - ஒரு ராத்தல். | வீராசனம். வேறு ஆசனங்கள். சுகாசனம், எழுத்தாசனம் வீராசனத்தின் அமைப்பு – இடம், வலம். ஏன் வீராசனம் போட்டு அரைக்க வேண்டும்? எப்படி? பருத்தியை இடப்புறம் வைப்பது ஏன்? | காலை மடித்து உட்காருதல் நிமிர்ந்து நேராக உட்காருதல் |
| நிறுத்தல் பயிற்சி<br>எண்ணி எண்ணி அரைத்தல், மொத்தம் அரைத்த விதைகள் எழுதுதல், நிறுத்தலளவை: எடுத்த பருத்தி 40 தோலா, மீதிப் பருத்தி 18 தோலா, அரைத்தது 22 தோலா. | ஏன் அழுத்தி உருட்ட வேண்டும்? விதையிலிருந்து பஞ்சு எப்படி நீங்குகிறது? விதை நசுங்கும் காரணம், விதையின் ஓடு மெல்லியதாக இருந்தால் (கம்போடியா)சொத்தைவிதையாக இருந்தால், பருத்தி | • |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| டுதல். விதைகள் முன்னே விழும்படி தள்ளுதல். விதை நசுங்காமல் அரைத்தல். நசுங்கிய விதைகளை நீக்கிப் பஞ்சைச் சேர்த்தல். பஞ்சை வலப்புறம் வைத்தல். நீங்காத விதைகளின் தலைப்பை நீட்டி மாற்றி அரைத்தல். 1-2 முறைகளில் அரைத்தல். பின் கப்பி கீழே விழாமல் மணைமேல் வைத்தல். விதையில் துசும்பில்லாமல் அரைத்தல். துசும்பு இருந்தால் கையால் நீக்கி விதையைச் சேகரித்தல். | | மல் சுத்தம். விரல்கள் பலகை மணையில் கம்பியில் நசுங்காமல் உருட்டுதல். நசுங்கினால் முதல் உதவி சிகிச்சை. ரத்தம்கட்டிக் கொண்டால் சாணம் தடவுதல். ரத்தம் கசிந்தால் ஈரத் துணி சுற்றுதல். | பின் படித்தல், எழுதுதல்.<br>1. வீராசனத்தில் உட்கார்ந்தேன்<br>2 பருத்தி அரைத்தோம்.<br>3. பலகை மணையில் அரைத்தோம்.<br>4. கம்பியை உருட்டினேன்.<br>5. விதை நீக்கினேன்.<br>6. விதை நிறுத்தேன்.<br>8. விதை நசுங்காமல் அரைத்தேன். |
| 4 பஞ்சு விதை, மீதிப் பருத்தி— சேகரித்தல். மந்திரிகள்மூலம் | | இடம், கருவி, சுத்தம் செய்தல், அழகாக அடுக்கி | எழுதுதல், படித்தல். |

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| நீட்டலளவை<br>பலகை மணை நீளம் அகலம் உயரம்,கம்பியின் நீளம், அங்குலம், அடி அளவுகள். | காயாமல் இருந்தால் விதை நசுங்கும். பலவகைப்பருத்தி கம்பியின் இரு வேலைகள்: பிடிப்பதும் தள்ளுவதும். பலகைமணை தேக்கு மரத்தால் செய்தது. மற்றப் பலகைக்கும் இதற்கும் வித்தியாசம். குறுக்குப்போக்கில் மரத்தின் நரம்புகள் இருக்கின்றன - காரணம். சொர சொரப்பு, பலகை மணை ஒரு புறம் உயரமாகவும் மற்றொரு புறம் தாழ்வாகவும் இருப்பதற்கு காரணம்; அடியில்பாதம் வைத்திருக்கும் காரணம். பலவகைமரங்கள்: தேக்கு பூவரசு, பயிராகும் இடங்கள். மரத்தால் ஆன பொருள்கள். கம்பி இரும்பால் ஆனது, கிடைக்குமிடம், மற்ற உலோகங்கள். இரும்பால் செய்த பொருள்கள். கம்பி மற்ற உலோகங்களில் இல்லாத காரணம். பலகை மணை, கம்பிவாங்கிய இடம். செய்த இடம். | |
| வகுப்பு முழுவதும் அரைத்த மொத்த பருத்தி 22 தோலா. பஞ்சு 6 தோலா, விதை 16 தோலா, ஒரு | ஒப்புமை - பலகை மணைக்கும் சாதாரண பலகைக்கும் வேறுபாடு, விதை நீக்க பல முறைகள், பலவகை மணை | |



| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| வாங்குதல். கருவிகளைச் சுத்தம் செய்து அடுக்கி வைத்தல். நிறுத்தல். | | வைத்தல். | |
| 5 செய்த வேலையைக் கூறுதல். வேலையைப் பதிவு செய்தல். | | | பலகையில் எழுதுதல், படித்தல். |

மாதிரிப் பாடத் திட்டம் – செயல்.

| | | | |
|---|---|---|---|
| 1 விதைத்தல், திட்டம்—இடம் தயாரித்தல். | கருவிகள் - மண் வெட்டி, களைக் கொட்டு, வாளி, பூவாளி- குவளை, சேர், ஆழாக்கு, காசு, விதை, வகைகள் நீர். | கை அலம்புதல், கருவி சுத்தம், விதையை ஈரம்படாமல் வைத்தல். | கீரை விதை, அவரை, பாகல், பீர்க்கு, புளிச்சைக்கீரை, பாத்தி, குழி. விதைக்கலாம், ஊன்றலாம், தெளிக்கலாம். நடலாம். பயிர்க் குழி. பந்தல், பாத்தி. |

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| ராத்தல் பருத்தி விலை 9 அணா, பலகைமணை விலை ரூ 1-2-0, கம்பி விலை ரூ. 0-6-0. பலகை மணை, கம்பி சேர்ந்து ரூ. 1-8 0<br>வேலை செய்த நேரம், தொடங்கிய நேரம். அரைத்த பருத்தி 22 தோலா 22 தோலா அரைக்க 30 நிமிடம் 40 தோலா அரைக்க சுமார் ஒரு மணி ஆகலாம். | கள், பலகை மணையின் வேலையும் கரும்பாலை உருளையின் வேலையும் – பலகைமணையில் அரைத்தல், அம்மியில் அரைத்தலும்அப்பளம்உருட்டுதலும்.<br>மழைக்காலத்தில் பருத்தி அரைக்கமுடியாது " காரணம். வெய்யில் காலத்திலேயே பருத்தியை அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். | |

## 2. தோட்ட வேலை

### விதைத்தல்

| | | |
|---|---|---|
| கீரை விதை படி 1 ரூபாய்<br>அரைப் படி 8 அணா<br>கால் படி 4 அணா<br>1 ஆழாக்கு 2 அணா<br>ரூபா. அணா, பை, படி. ஆழாக்கு. | ஏன் விதைக்க வேண்டும். பாத்தியில் தெளிக்க வேண்டிய விதை, குழியில்ஊன்ற வேண்டிய விதை. விதைக்கும் காலம். மாலையில் விதைப்பது நல்லது. ஏன். கீரை, புளிச்சைக் கீரை - செடி. பீர்க்கு. பாகல்-பந்தலில் படரும் கொடி முதலியன. தரையில் படரும் கொடிகளுக்குத் தனி இடம். ஒவ்வொரு பயிருக்கும் தண்ணீர் வசதி, பருவகாலம், ஏற்ற மண், எரு. | ஆடி-பதினெட்டாம் பெருக்கு அதன் பொருள் |

| செயல் | செயல் | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| 2 நல்ல விதை தேர்ந்தெடுத்தல், பொறுக்குதல், தூற்றல், புடைத்தல். | விதை, கூடை, முறம், சல்லடை, துடைப்பம் | விதைகளைச் சுத்தம் செய்தல், தூசி கைகால்களில் பட்டால் கழுவுதல், தூற்றுதல், புடைத்தல், காற்றின் திசையைக் கவனித்துத் தூற்றுதல். | கருவியின் பெயர், விதையின் பெயர், தோல், முளை, பருப்பு, விதையின் நிறம். தூற்றுதல் புடைத்தல், பொறுக்குதல், கொழித்தல், நோம்புதல். |
| 3 பாத்தி தயார் செய்தல், வரப்புக் கட்டுதல், நிரவுதல் குழி போடுதல் | சிறு மண்வெட்டி, களைக் கொட்டு, கயிறு, முளை, சிறு கழி. | கருவிகளைச் சுத்தம் செய்தல், கிளறும் பொழுது புழுதி முகத்தில் படியாமல் கிளறுதல், கை கால் சுத்தம் செய்தல், துணியில் மண் படாமல் வேலை செய்தல், | குழி போட்டோம், பாத்தி கட்டினோம் முதலிய வாக்கியங்கள், பிற சொற்கள். |
| 4 கீரை விதைப்பு, தூள் மண்ணுடன் கலந்து பாத்திகளில் தெளித்தல். கையால் மண்ணைத் துழாவி விடுதல், | விதை, தென்னங்கீற்று, வைக்கோல் | கைகால் சுத்தம் செய்தல், கருவிகளைச் சுத்தம் செய்தல், | கீரை விதைத்தோம். மண்ணைக் கிளறினோம், வைக்கோல் தெளித்தோம், கொத்தவரை |

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| மொத்த விதைகளில் கெட்ட விதைகள் போக நல்ல விதை எவ்வளவு, எத்தனை என்பது அளத்தலும் எண்ணுதலும், அளத்தல், எண்ணுதல், நிறுத்தல். | பூச்சி அரிக்காதது, தோல் சுருக்கமில்லாதது, முற்றிய விதை-நல்ல விதை. பிஞ்சு விதை கூடாது, ஏன். முளைக்கும் பாகம் கெடாமலிருக்க வேண்டும். பாதுகாக்கும் முறை, பானை டப்பிகளில் சாம்பல் கலந்து வைக்க வேண்டும். ஏன் ? அடிக்கடி காயவைக்க வேண்டும், ஏன் ? நல்ல விதைகளை எடுக்கும்முறை தூற்றுதல், புடைத்தல், விளக்கம். | தூற்றுதல் புடைத்தல் பெண்கள் செய்கிறார்கள். ஏன்? விரல்களின் திறமை |
| அளத்தல் பயிற்சி :<br>பாத்தியின் நீளம் 6 அடி<br>அகலம் 3 அடி<br>2 பாத்திகளின் அ 6 அடி<br>அவரைக் குழி 4<br>பாகல் குழி 5<br>பீர்க்குக் குழி 3<br>மொத்தக் குழிகள் 12<br>வேலை செய்யத் தொடங்கிய நேரம், முடித்த நேரம், வேலை செய்த நேரம். | மண்ணைத் தூளாக்குவதன் காரணம். ஏன் ? பாத்தி கட்டவேண்டும் ? எப்படி ? குழி என் போடவேண்டும்? கீரை விதைகளை ஏன் குழியில் போடுவதில்லை? அவரை விதைகளை ஏன் பாத்திகளில் போடுவதில்லை ? | பந்தல் போடுதல், வாரப்பு போடுதல் முதலிய வேலைகளில் மேல்வகுப்புப் பிள்ளைகளுடன் ஒத்துழைத்தல் (கூட்டுறவு) |
| முகத்தலளவைப் பயிற்சி :<br>கீரை விதை 1 ஆழாக்கு மண் 2 ஆழாக்கு மொத்தம் 3 ஆழாக்கு. 3 பாத்திக்கு 3 ஆழாக்கு. 1 பாத்திக்கு 1 ஆழாக்கு, விதைத்தவர் | கீரை விதையை ஏன் தூள் மண்ணோடு கலக்கவேண்டும் ? தெளிக்கும் முறை அதுபோன்ற வேறு சின்ன விதைகள் விதைத்த பின் மண்ணைக் கிளறிவிடும் கார | |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| தென்னங் கீற்று அல்லது ஓலை மூடுதல், மேலே வைக்கோல்தெளித்தல், ஓரத்தில் கொத்தவரை போடுதல். | மிலாறு சருகு | | விதை ஊன்றினோம், |
| 5 அவரை, பீர்க்கு, பாகல், புடல் விதைகளைக் குழிகளில் ஊன்றுதல், குழிக்குக் கரை அமைத்தல். | | கைகால் சுத்தம் செய்தல். கரையின் வட்டவடிவம். | அவரை விதை ஊன்றினோம், பாகல் விதை நட்டோம், பீர்க்கு விதை ஊன்றினோம், அவரை வகையின் பெயர்கள் : பச்சை, வெள்ளை, சிவப்பு, பட்டை அவரை, ஆட்டுக் கொம்பு அவரை. பாகல்: மிதி பாகல், கொம்பு பாகல், பயிர்க்குழி. |
| 6 நீர் விடுதல்: வாளி, பூவாளி தாழ்த்தி விடுதல், எங்கும் நீர் படும்படி தெளித்தல். | வாளி, பூவாளி. | துணியில் தண்ணீர்படாமல் கொண்டு வருதல், ஊற்றுதல், கருவிகள் கைகால் சுத்தம் செய்தல். | தண்ணீர் தெளித்தோம், தண்ணீர் ஊற்றினோம், மற்றச் செய்கைகள் : இறைத்தல், பாய்ச்சுதல். |
| 7 வேலைமுடிந்தபின் பிள்ளைகளுடன் | | பாத்திகளையும் குழிகளை | செய்த வேலையைத் தொடர் |

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| கள் 6 பேர்கள். 1 பாத்திக்கு 2 பேர்கள், விதைத்த நேரம் அறிதல். | ணம், மற்ற விதைகளுக்கு இவ் வேற்பாடு பலவிதம். மேலே ஏன் வைக்கோல் தெளிக்கவேண்டும். | |
| 1 குழிக்கு 3 விதைகள் (அவரை விதைகள்) 4 குழிக்கு12விதைகள் பாகல் விதை 15. பீர்க்கு விதை 9, மொத்தம் விதைகள் 36. விதை ஊன்றின ஆழம், அங்குலம், குழியின் குறுக்களவு, கரையின் அளவு, கரையின் வட்டவடிவம். | குழியில் எவ்வளவு ஆழத்தில் விதை ஊன்ற வேண்டும். ஏன். அதிக ஆழத்தில் ஊன்றினாலும் மேலே ஊன்றினாலும் ஏற்படும் பலன். குழிகளுக்கு ஏன் கரை கட்டவேண்டும், எப்படி ? | |
| மொத்தம் நீர் கொண்டு வந்த வாளிகள். ஒருவர் 3 வாளி, 12 பேர் 36 வாளி, 1 பாதிக்கு 4 வாளி, 2 பாத்திக்கு 8 வாளி, பாத்தி ஒன்றுக்கு 2 வாளி நீர், 12 பாத்திக்கு 24 வாளி நீர், வேலை செய்த நேரம் அறிதல்.<br>மொத்த வேலை செய்த நேரம் 1 மணி 30 நிமிஷம், மொத்தம் வாங்கிய | ஏன் தண்ணீர் ஊற்ற வேண்டும், தண்ணீர் ஊற்றுதல், தெளித்தல், பாய்ச்சுதல், ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதம். எப்படி. தண்ணீர் வசதி : கிணறு, குளம், வாய்க்கால், ஏரி, ஆறு முதலியவற்றிலிருந்து தண்ணீர்பாயும்விதம்.<br>விதை முளைக்க என்னென்ன வேண்டுமென்பது நீர், காற்று வெப்பம் | |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| கலந்து விவாதித்தல் பதில், | | யும் சுத்தமாக வைத்திருத்தல், | பாகச் சொல்லுதல், எழுதுதல், படித்தல். |

## மாதிரிப் பாடத் திட்டம்

ஆயுத

| | | | |
|---|---|---|---|
| 1 திட்டமிடுதல் — வாங்க வேண்டிய பொருள்கள், கிடைத்த பணம் - பூஜை துப்புரவு செய்ய அலங்காரம் செய்யத் தேவையான பொருள்களும் கருவிகளும், யார் யார் எங்கெந்த வேலைகளைக் கவனிப்பது என்பது, ஒவ்வொரு வேலையைக் கவனிக்க ஒவ்வொரு குழுவாக 5 குழு அமைத்தல், கடைத் தெருவுக்குப் போதல், வேண்டிய பொருள்கள் வாங்கி வருதல். | | துணி தரையில் படாமல் நடத்தல், வெளியில் போய் வருதல் கைகால் முகம் கழுவ வேண்டும். சுத்தமான பொருள்களாக வாங்கிவர வேண்டும். பொருள்களை சுத்தமாக வைத்திருக்க வேண்டும், தரை சுவர் சுத்தம் செய்தல். | ஒட்டறைஅடித்தோம். தரை பெருக்கினேன், தரை மெழுகினேன், கோலம் போட்டோம், கருவிகள் சுத்தம் செய்தோம், ஆயுதபூஜை-கலைமகள் விழா - நவராத்திரி பண்டிகை. அலங்காரம் செய்வோம், கலைமகளை வணங்குவோம். சந்தனம் மஞ்சள் குங்குமம் வாழைப்பழம் தேங்காய் கற்பூரம் பொரி கடலை வெல்லம் பச்சைக்கடலை. |

| கணிதம் | சாமானியவிஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
| --- | --- | --- |
| விதைகள்: அவரை 20, பாகல் 35, பீர்க்கு 35, போட்ட விதைகள்- அவரை, பாகல், பீர்க்கு, மீதியுள்ள விதைகள் -அவரை, பாகல், பீர்க்கு. புடல். | முதலியன. செடிவளர தேவையானவை. எந்தெந்த விதைகளை எப்படி எப்படி விதைக்க வேண்டும் என்பதை ஒப்பிடுதல்விதைகளின் வடிவம் ஒப்பிடுதல். | சித்திரம் : அவரை விதை முளைத்துவருவதில் பல நிலைகளைக்காட்டும் படம். |

3. விழாக் கொண்டாடுதல்

பூஜை

| | | |
| --- | --- | --- |
| 1 பிள்ளை 1 அணா<br>24 பிள்ளைகள் 24 அணா<br>1 ரூபா 8 அணா<br>பட்டியல் :<br>சந்தனம் 0 2 0<br>மஞ்சள் 0 1 0<br>குங்குமம் 0 1 0<br>வாழைப் பழம்-5 0 1 6<br>தேங்காய்-2 0 8 0<br>கற்பூரம் 0 1 0<br>பூ 0 1 0<br>பொரிகடலை 0 0 6<br>வெல்லம் 0 4 0<br>பச்சைக்கடலை 5 8 0<br>மற்றசெலவு 0 8 0<br>மொத்தம் 7 4 0<br>இவற்றை வாய்மொழியாகவே நாணயங்களுடன் கூட்டுதல். | கலைமகள் விழா கொண்டாடும் காரணம், ஆயுதங்களுக்குப் பூசை. உழைப்புக்குப் பூசை, எப்படிக் கொண்டாடுவது, எங்கெல்லாம் கொண்டாடுவார்கள், அலங்காரம் என்னென்ன, எப்படியெல்லாம் எங்கெல்லாம் செய்யலாம், விழாவுக்குத் தேவையான பொருள்கள் ஒவ்வொன்றும் எங்கே விளைகிறது ? | குழு உணர்ச்சி<br>1. துப்புரவுக்குழு.<br>2. தோரணக்குழு.<br>3. இட அலங்காரக் குழு.<br>4. கருவிகள் அலங்காரக் குழு<br>5. உபசரணைக்குழு. |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| 2 ஒட்டறை அடித்தல், தரை மெழுகுதல், கோலம் போடுதல், துப்புரவு விவசாயம் நூற்பு சம்பந்தமான கருவிகளைச் சுத்தம் செய்தல், தேய்த்துக் கழுவுதல். அலங்கரித்தல், வாசற்படி கழுவுதல், கதவு ஜன்னல் முதலியன கழுவுதல். | மாறு, கோலக்குழல் | துப்புரவு செய்வதற்கான கருவிகளை உபயோகிக்கும்முறை, இடங்களைத் துப்புரவு செய்தல், கருவிகளை துப்புரவு செய்வதற்குத் தேவையான பொருள்கள் துப்புர வாகத் தேய்த்துத் தண்ணீர் விட்டுக் கழுவுதல்- துடைத்தல். | ஒட்டறைஅடித்தோம், தரை பெருக்கினேன், தரை மெழுகினேன். கோலம் போட்டோம், கருவிகளைச் சுத்தம் செய்தோம். |
| 3 தோரணம் கட்டுதல், மாவிலை அசோகு இலை கொண்டு வருதல், தென்னங் குருத்து பனங் குருத்து கொண்டுவந்து பின்னி, தோரணத்துடன் கட்டுதல். பிரம்பு இலை குறுக்காக அமைத்தல், வாசற்படிகளில் மஞ்சள் சந்தனம் பூசி, குங்குமம் | இலை கத்தி குருக்கி கயிறு | உடைகளும் உடலும் அசுத்தப் படாமல் கட்டுதல், உடையில் மஞ்சள் சந்தனம் குங்குமம் படாமல் பூசுதல். | தோரணம் கட்டினோம், குருத்து பின்னினோம், மஞ்சள் பூசினேன், குங்குமப் பொட்டு வைத்தேன். |

| கணிதம் | சாமானியவிஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| கருவிகள் எண்ணுதல் தரையின் நீளம் அகலம் மெழுகின சாணியின் அளவும் தண்ணீரின் அளவும், ஒட்டறைஅடித்த கழியின் நீளம் 12 அடி, கூரையின் உயரம் 15 அடி, கோலம் போட்ட தூரம் அளத்தல், புள்ளிகளின் எண்ணிக்கை கூட்டுதல், $7+5+5+3+3+1+1=25$ நேர அளவு, ஒவ்வொரு வேலையும் செய்த நேரம். | ஒட்டறைஅடிப்பதன் காரணம், ஒட்டறை எப்படி உண்டாகிறது? சிலந்தியின் வரலாறு, நன்மையும் தீமையும் நீக்கும் முறை, சாணியைக் கொண்டு மெழுகுவதன் காரணம் சாணி கிருமிகளைக் கொல்லும் தன்மையுடையது என்பது, பலவகை சாணங்கள், பசுஞ்சாணத்தின் உபயோகம் - மெழுக ஏற்றது, கருவிகள் சுத்தம் செய்யும் பல முறைகள் - காரணம், துடைப்பது கழுவுவது முதலியன, கோலம் போடுவதன் காரணம், முறை. | சித்திரம்: பல நிற மாவுகள் தயார் செய்தல். வெள்ளை மண், அரிசிமாவு, கூழாங்கல்மாவு—வெள்ளை நிறம். செங்கல் மாவு. செம்மண் —சிவப்பு நிறம். மாவிலை, அரசு இலை, அசோகு இலை, காயவைத்துச் செய்த பொடி —பச்சை நிறம். |
| தோரணம் கட்டவேண்டிய நீளம், தேவையான கயிற்றின் நீளம் குறைந்தது எவ்வளவு, கட்டிய தோரண எண்ணிக்கை, வாசற்படியில் ஒரிலைத் தோரணம்-நீளம். மாவிலைகள் எத்தனை, 2 3 4 தோரணங்களில் | தோரணம்ஏன்கட்ட வேண்டும், எங்கெங்கே கட்டவேண்டும்? பலவகைத்தோரணங்கள். ஒவ்வொரு பொருளும் எங்கே கிடைக்கிறது? மஞ்சள் கிழங்கு வகை விளையும் இடம், சந்தனம் அருகில் கிடைக்குமிடம், குங்குமம் எப் | அலங்காரம் செய்தல். இடத்திற்கேற்ப தோரணம் கட்டுதல், அழகுபடுத்தும்முறைகள் பலவடிவ இலைகளால் தனித் தனியாகத் தோரணம் கட்டுதல்அரசுஇலை மாவிலைவடிவங்கள் |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| வைத்து, கதவுநிலையில் ஒரிலைத் தோரணம் கட்டுதல், அரசுஇலை மாவிலைத் தோரணம் கட்டுதல். | | | |
| 4 வழிபடும்இடத்தை அலங்கரித்தல், கோலமிடுதல், பலநிற மாவுகளால் சித்திரம் அமைத்தல், கலைமகள் படத்தை அலங்கரித்து வைத்தல். ஒழுங்காக அடுக்கி வைத்தல், புத்தகங்கள் போதனைக் கருவிகளை அடுக்கி வைத்தல், பலநிறப்பூ கட்டுதல், பூக்களால் அலங்காரம் செய்தல். | | அலங்காரப் பொருள்களைத் துப்புரவாகக் கையாளுதல். | படத்தை அலங்காரம் செய்தோம், ஆயுதங்களை அடுக்கிவைத்தோம், பூ கட்டினேன், பூக்களால் அலங்கரித்தோம். |
| 5 பூஜை செய்தல், பழங்கள் பண்டங்கள் முதலியன இலையில் வைத்தல். பிள்ளைகள் வரிசையாக உட்காருதல், தேங்காய் உடைத்தல், சாம்பிராணி தூபம் காட்டுதல், கற்பூரம் ஏற்றுதல். நீர் விடுதல், கலைமகளை வணங்குதல், பாடுதல், தின்பண்டம் வழங்குதல் - பெறுதல்-உண்ணுதல், வரிசையாக எழுந்து சென்று கை கழுவுதல். | | தூய உடை அணிந்து தூய மனதுடன் கடவுளை வணங்க வேண்டும், தின் பண்டங்களைக் கீழே சிந்தாமல் துப்புரவாக உண்ணுதல். உண்டபின் கை கழுவுதல், பழத் தோல்களைக் கண்ட | வரிசையாக உட்கார்ந்தோம், கலைமகளை வணங்கினோம். பாட்டுப் பாடினோம். கடலை தின்றோம், வரிசையாகப் போனோம். “வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்” ஓம் சக்தி ஓம்சக்தி’, —பாரதியார். |

| கணிதம் | சாமானியவிஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| எத்தனை மஞ்சள் பூசிய இடம். நீளம், அகலம், வைத்த பொட்டுகளின் எண்ணிக்கை, 1 வரிசைக்கு எத்தனை ? 5 வரிசைக்கு எத்தனை ? | படிச் செய்கிறார்கள் என்பது, அரசுஇலை மாவிலையின் வடிவங்கள். | பலநிற இலைகளால் தோரணம் கட்டுதல். |
| படத்தின் நீளம் அகலம், பூக்களின் எண்ணிக்கை, நாரின்நீளம், பூ சரத்தின் நீளம் குறைந்தது எவ்வளவு? மொத்தம் அடுக்கி வைத்துள்ள கருவிகள் பதிந்து வைத்தல். | பள்ளிக்கூடத் தோட்டத்திலுள்ள பூக்கள், கடையில் விற்கும் பூ. பூவின் நிறம்-வாசனை, வழிபடும் இடம், படம் கலைமகள், எங்கு வாங்கியது யார் வரைந்தது என்பது, கரும் பலகையில் வரைந்துள்ளது. | பூக்களின் நிறம், நிறங்களை அழகு பெறக் கறத்தல். |
| வாங்கிய கடலை 5படி. வேக வைத்த பின் 10 படி, 80 பிள்ளைகளுக்கு 10 படி, 1 படி கடலைக்கு 8 பிள்ளைகள், 1 பிள்ளைக்கு 1 ஆழாக்கு, பூஜை செய்த நேரம். | ஆயுதங்களை வணங்குகிறோம், ஏன் எங்கே வணங்குகிறோம் கோவிலில் வீட்டில் எப்படிப் பூசை செய்கிறார்கள்? பூசை செய்ய என்னென்ன வைத்தோம்? சாம்பிராணியின் தன்மை-நெருப்பில் உருகும்-கற்பூரம் எரியும், ஜப்பான் சீனாவில் கற்பூரம் அதிகம், வர்த்திப் புகை | தின்பண்டங்கள் வழங்கும் போது தன் முறை வரும் வரை காத்திருப்பது, கொஞ்சமாக இருந்தால் அதைக் கிரமமாகப் பங்கிட்டுக் கொள்ளுதல், அழகாக உண்ணுதல், கூட்டத்தில் இடித்துத் தள்ளாமல் தன் முறை வரும் வரை காத்திருப்பது. |

| செயல் | கருவி | துப்புரவு ஆரோக்கியம் | தமிழ் |
|---|---|---|---|
| | | இடங்களில் போடக்கூடாது-சேமித்துப் பயன் படுத்தல். | பேச்சு : கலைமகள் உருவம், இன்னும் படிக்கிறாள், ஆயுதங்களுக்குபூஜை, உழைப்புக்கு தனை—தூய்மை, கதை. |
| ஆயுதம் கலைத்தல்,பூஜைப் பொருள்கள் வைத்தல், கற்பூரம் கொளுத்துதல், வணங்குதல், பாட்டுப் பாடுதல், கருவிகளை ஒழுங்காக எடுத்து உரிய இடத்தில் அடுக்கி வைத்தல். தோரணங்களை அவிழ்த்து, இலைகொத்துக்களையும் பிறவற்றையும் குப்பையில் போடுதல். | | வழிபடும் இடம் வகுப்பறை பள்ளிக் கூடம் - சுற்றியுள்ள குப்பைகளைப் பெருக்கிக் குழியில் சேமித்தல். கருவிகளை துடைத்து உரிய இடத்தில் வைத்தல்; தோரண இலைகளைக் குவித்துக் குப்பையில் சேமித்து உரமாக்கல். | ஆயுதம் கலைத்தோம், அடுக்கி வைத்தோம், தோரணம் பிரித்தோம், பாட்டுப் பாடினோம், கலைமகளை வணங்கினோம்- கலைமகள் வணக்கம். "ஓம்சக்தி", "வெள்ளைத் தாமரை"—பாரதியார். நாடிப் புலங்கள்' -தேசிகவிநாயகம் "புத்தகத் துள்ளுறை மாதே" |
| 7 விழா கொண்டாடியதைப்பற்றிப் பிள்ளைகளுடன் கலந்து பேசுதல், எழுதுதல், படித்தல். | | இடம் துப்புரவு, உடல் ஆரோக்கியமாக இருக்க | விழாக் கொண்டாடியதைப் பற்றித் தொடர்பாகச் சொல்லுதல்- |

| கணிதம் | சாமானியவிஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
|---|---|---|
| | யும் நல்ல வாசனையாக இருக்கிறது. | |
| மொத்தக் கருவிகளை எண்ணுதல், பதிந்து வைத்தவைகளைச் சரி பார்த்தல், வேலை செய்த பிள்ளைகள், வேலை செய்த நேரம், | தோரணங்களில் இலைக் கொத்துகள் ஏன் வாடிவிட்டன என்பது, அவற்றை வீணாக்காது பயன் படுத்துவது எப்படி? குப்பையாக்கும் முறை, கம்போஸ்டு எரு தயார் செய்யும் முறை. | கதை : கலைமகளை வழிபட்டவர் கதைகள் - கம்பர், காளிதாசர், ஒட்டக்கூத்தர்; குமரகுருபரர். நாடகம். |
| ஆயுத பூஜை எந்தத் தேதியில் கிழமையில் வந்தது, மொத்த வருமானம் செலவு அறிதல். | ஏன் ஆயுத பூஜை கொண்டாடினோம்? மற்ற விழாக்கள். ஒன்றுக் கொன்றுள்ள | மரியாதையாகக் கேட்பது, விடை கூறுவது, பேசும் போது தன் முறை |

| செயல் | கருவி | சுப்புரவு ஆரோக்கியம் | தமிழ். |
|---|---|---|---|
| | | நாம் உண்ட சத்துப் பொருள்களின் சத்துவிவரம் | படித்தல்—எழுதுதல், பாட்டுக்களைப் பாடுதல் |

முதல் வகுப்பு வருஷத்துக்குரிய செயல் திட்டம்

வருஷத்தில் சுமார் 40 வாரம் பாடசாலை நடைபெறக் கூடும். 40வாரத்துக்கும் தனித்தனியான 40 செயல்கள் ஏற்படுத்திக் கொள்ளலாம். இவை முழுமையும் செய்தாக வேண்டும் என்று கட்டாயமில்லை. மாதிரிக்காகப் பின்வரும் செயல்கள் தரப்பட்டுள்ளன. சோம்பேறித்தனமாகவோ, கண்மூடித்தனமாகவோ இவற்றை அப்படியே செய்ய முயல வேண்டாம். முயல்வது தவறாகும். இவை ஆதாரக்கல்விக்கு இடமாகிய ஆதாரத் தொழில், சமூகச் சூழ்நிலை, இயற்கைச் சூழ்நிலை என்ற மூன்றையும் தழுவியவை. சில தனிச்செயலாயிராமல் பிற செயல்களுடன் செய்யத்தக்கவையாயிருக்கும். உதாரணம் – உல்லாசப் பிரயாணம்: பொருட் காட்சி தயாரிக்க, சாம்பல் தயாரிக்கக் கருவேல மரம் தேடி உல்லாசப் பிரயாணம். ஒவ்வொரு பிரயாணத்திலும் செயலிலும் பொருட்காட்சிக்குப் பொருள் சேர்க்கலாம்.

| கணிதம் | சாமானிய விஞ்ஞானம் | சமூகப் பயிற்சி |
| --- | --- | --- |
| | ஒற்றுமை வேற்றுமை. நாம் எப்படிக்கொண்டாடினேம்? கோயில்களில் வீடுகளில் எப்படிக்கொண்டாடினர்கள்? தொழில் நடக்குமிடங்களில் எப்படிக் கொண்டாடுகிறார்கள். | வரும் வரை திருப்பது. |

I. ஆதாரத் தொழில்—நூற்றல்

1. பருத்தி எடுத்தல்
2. பருத்தி சுத்தம்
3. பருத்தி அரைத்தல்
4. பஞ்சு சுத்தம்
5. பட்டை போடுதல்
6. தக்கிளி நூற்பு
7. கெண்டைக் காலில் தேய்த்து நூற்றல்
8. வீசனத்தில் வீசுதல்
9. சிட்டம் போடுதல்
10. ஈரிழை முறுக்குதல்
11. அறுந்த நூலை இணைத்தல்
12. நல்ல தக்கிளி தேர்ந்து எடுத்தல்
13. தொடையில் தேய்த்து நூற்றல்
14. நல்ல நூல் தேர்ந்து எடுத்தல்
15. பொருட்காட்சி தயார் செய்தல்

II. சமூகச் சூழ் நிலை

1. பல் விளக்குதல்
2. குளித்தல்
3. துணி துவைத்தல்
4. தலை சீவுதல்
5. வகுப்பறை சுத்தம்செய்தல்
6. குடிநீர் வைத்தல்
7. சிரங்குக்குச் சிகிச்சை செய்தல்
8. விநாயக சதுர்த்தி கொண்டாடுதல்
9. ஆயுத பூசை
10. கார்த்திகை தீபம்
11. வருஷப்பிறப்பு
12. கிறிஸ்துமஸ்
13. சர்க்கா ஜயந்தி
14. ஆண்டு விழா
15. கொடி வணக்கம்
16. மரம் நடு விழா

## III. இயற்கைச் சூழ்நிலை—தோட்டவேலை

1. நிலம் தயாரித்தல்
2. எரு விடுதல்
3. விதைத்தல்
4. நீர் பாய்ச்சுதல்
5. களை எடுத்தல்
6. நாற்று நடுதல்
7. புழு பூச்சி எடுத்தல்
8. காய்கறி பறித்தல்
9. குப்பை உரம் தயாரித்தல்
10. எரு சேகரித்தல்
11. உல்லாசப் பிரயாணம்.
12. பதினெட்டாம்பெருக்கு.

கால அட்டவணை முதலிய இடங்களில் செயல் என்று சொல்லும்போது வேலைமட்டுமன்றி வேலைக்கு முந்திய திட்டத்தையும் பிந்திய திட்டத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். முந்திய திட்டம் என்பதில் பின்வருவன அடங்கும். நோக்கம் உணர்த்துதல்—நேரம், இடம் மூலப் பொருள், உபகரணம், மாணுக்கர் பிரிவு முதலான திட்டங்கள் தயாரிப்பு—துப்புரவு, ஏற்பாடு, பிள்ளைகள் தயாரித்துக் கொள்ளுதல், வேலையின் காரண காரிய உணர்வு, வேலையில் இன்பம்.

பிந்திய திட்டத்தில் வேலையின் பூர்த்தி, பதிவு, திட்டமும் பூர்த்தியும் ஒப்பிடுதல் ஆகிய அம்சங்கள் அடங்கும். பாடங்களோடு இயைபு படுத்துதல், ஏற்ற பழக்கங்களும் மனம்போக்கும் உண்டுபண்ணுதல் ஆகிய இரண்டும் செயலுக்குப்பின் வரும் பாடபோதனையாகும்.

செயல் திட்டம்: மூன்று தலைப்புக்களில் இங்கு செயல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. செயல்கள் அதிகம் என்று மலைக்கவேண்டியதில்லை. நூற்றல் சம்பந்தப்பட்ட செயல்கள் மட்டுமே முதல் வகுப்புப் பிள்ளைகளுக்குப் புதியவை. மற்றப்படி துப்புரவு ஆரோக்கியம் தோட்ட வேலை சம்பந்தப் பட்டவை ஒவ்வொரு வகையில் அவரவர் வீட்டிலேயே பாடசாலைக்கு வருமுன்பே குழந்தைக்குப் பழக்கமானவைதான்.

இனி, செயல்கள் நாற்பதுவேண்டுமா என்பது கேள்வி. வருஷத்தில் நாற்பது வாரம் பாடசாலை நடக்கக்கூடும். ஆதலால் நாற்பது செயல்திட்டம் ஒரு வாரத்துக்கு ஒரு

செயல் விதம் நடத்தலாம். வாரம் ஒரு செயல் திட்டம் என்ருல், பாடசாலை நடைபெறும் ஐந்து நாளும் அச்செயலை நடத்தி அதன் மூலம் ஒவ்வொரு நாளும் கல்வி போதிக்க வேண்டும் என்பது கருத்து. உதாரணமாக, விநாய சதுர்த்தி என்ற விழாக் கொண்டாட்டம் நடத்துவதானல் அதுபற்றி ஐந்து நாளைக்குச் செயலைப் பின்வருமாறு பிரித்துக்கொள்ளலாம். முதல்நாள்-திட்டமிடுதல், விநாயகர் செய்வதற்கான மண்தேர்தல். இரண்டாம் நாள் - மண் கொணர்தல் பிசைதல். மூன்ரும் நாள்-விநாயகர் உருவம் செய்தல். நான்காம் நாள்-துப்புரவு, இட அலங்காரம். ஐந்தாம் நாள் - அன்றைய அலங்காரம், வழிபாடு விழா முடித்தல். இவ்விதமாக ஐந்து நாளைக்கு வேலையைப் பிரித் துக் கொண்டபின் ஒவ்வொரு நாளும் அன்றைய வேலை மூலம் கல்வி போதிக்கிரேம். கல்வி போதனையில் தினந் தோறும் திட்டமான தமிழ் கணித பாடங்கள் தொடர் பாய் நடைபெறவேண்டும். இது பற்றிய ஒரு கருத்து மட் டும் இங்கே கருதற்குரியது.

தமிழ்-கணிதம் என்ற பாடங்களை அன்றன்று நடத் தும் பொழுது ஒவ்வொரு நாளும் நடத்துகிற பாடம் அந் தந்தச் செயல்பிரிவை ஒட்டிப் புதிதாகவே இருக்கும். குழந் தையின் மனமானது புதியவற்றை விரைந்து கற்ருலும் கூட, விரைந்து மறந்துகொண்டே வருகிறது. ஆதலால், புதிதாய்க் கற்றவை மனத்தில் நிலைபெறுமாறு செய்வதற் குப் பயிற்சி கொடுப்பது அவசியம். இந்தப் பயிற்சிக்குக் காலம் வேண்டும். ஒவ்வொரு நாளும் புதிய புதிய செய லாய் இருக்கும்போது இந்தக் காலம் கிடைப்பதில்லை. ஆதலால் இதற்கென்று தனியே ஒரு வாரம் ஒதுக்கிவிட வேண்டும். ஒருவாரம் செயல்திட்டமொன்றை நடத்திய பின் அடுத்தவாரம் அதுபற்றிய இப்பயிற்சிக்காக ஒதுக்கி வைத்துக் கொள்ளலாம்.

இவ்வாறு பயிற்சிக்காக ஒருவாரம் ஒதுக்கும்போது செயல் நடத்துவதற்கான வார எண்ணிக்கை குறையும். ஒருவாரம் செயல்மூலம் பாடமும், அடுத்தவாரம் பயிற்சி

யும் என்று வைத்துக்கொண்டால், வருஷத்தில் மொத்தம் இருபது செயல் திட்டங்களே நடைபெறக் கூடும். நாற்பது செயல்களுக்குப் பதிலாக இருபது செயல்களை மட்டும் செய்து இவற்றின் மூலம் பூரணப் பயிற்சி கிடைக்கச் செய்வது மிகவும் நல்லது; இதில் தவறில்லை.

ஒருவாரம் தனியான பயிற்சி என்று சொல்வதனாலேயே ஆதாரக் கல்வித் தரம் குறைந்து போயிற்று என்று யாரும் எண்ண வேண்டியதில்லை.

## 11. பாடக் குறிப்பு - செயல்வாரி

முன்னமே பத்தாம் பகுதியில் குறிப்பிட்ட மாதிரிப் பாடங்களில், குறிப்பிட்ட தொழிலை வாரத்தின் வேலை நாட்களுக்கு எப்படிப் பிரித்துக் கொள்வதென்றும் ஒவ்வொரு செயலின் மூலம் வெவ்வேறு பாடங்களை எப்படி இயைத்துப் போதிப்பதென்றும் அட்டவணை அமைத்துக் காட்டினோம். இங்கு பாடத் திட்டத்திலுள்ள வெவ்வேறு பகுதிகளை எங்கெந்தச் செயலுடன் இணைத்துப் போதிக்க முடியும் என்பது பற்றிச் சிறு குறிப்புத் தரப்பட்டுள்ளது. திட்டம் அமைக்கும் ஆற்றல் குறைவாயுள்ள ஆசிரியருக்கு இக்குறிப்புக்கள் பயன் படும்.

கணிதம்

(அ) எண்ணல் பயிற்சி :- நூற்றல். பருத்தி சுத்தம். சூரியன், வீசனத்தில் நூல் சுற்றுதல். பட்டை போடுதல். பட்டைகள் சிட்டங்களின் மொத்தம்.

தோட்ட வேலை : விதை எண்ணுதல். நாற்று எண்ணுதல். காய் எண்ணுதல்.

சமூகம் : பிள்ளைகளை எண்ணுதல்.

(ஆ) கூட்டல் :-நூற்றல்: பருத்தி சுத்தம். சூரியன்கள்.

நூற்பு : நூற்ற பட்டைகள்.

பட்டை போடுதல் : போட்ட மொத்தப் பட்டைகள். காலையும், மாலையும் மொத்தம்.

வீசுதல்: வீசனத்தில் சுற்றிய சுற்று.

சிட்டம்போடுதல்: மாதா மாதம் போட்ட மொத்தச் சிட்டங்கள்.

தோட்டவேலை: (1) பாத்தி நீள அகலம் அளத்தல்.

(2) விதைத்தல்: ஒவ்வொரு குழியிலும் போட்டது. ஒவ்வொரு வரிசையிலும் போட்டது. ஒவ்வொருவரும் போட்டது. மொத்தம்.

(3) நீர்விடுதல்: மொத்தம் எத்தனை வாளி தண்ணீர் ஊற்றினோம் என்பது.

(4) நாற்று நடுதல்: எல்லா வரிசைகளிலும் நட்ட நாற்றுக்கள்.

(5) பூச்சி எடுத்தல்: மொத்தம் எடுத்த பூச்சிகள்.

(6) காய்கறி பறித்தல்: மொத்தம் பறித்த காய்கள்.

துப்புரவு ஆரோக்கியம்: பல் விளக்குதல்:–பல் குச்சிகளின் மொத்த நீளம். பற்களின் எண்ணிக்கை.

(இ) கழித்தல்:—நூற்றல்: நூற்ற சுற்றுகள். பிள்ளைகள் ஒருவருக்கொருவருள் உள்ள வித்தியாசம். குழுக்களுக்குள் வித்தியாசம், காலையில் நூற்றதற்கும், மாலையில் நூற்றதற்கும் வித்தியாசம். வீசனத்தில் மொத்த நூலின் அளவு—கண்ணியும் சுற்றுக்களாகவும் எழுதுதல். முதலில் இருந்த நூல், இப்பொழுது இருந்த நூல் என அறிதல். பட்டை போடுதல்; ஒருவருக்கொருவர் பட்டை போட்டதில் உள்ள வித்தியாசம். குழுவுக்குக் குழு வித்தியாசம்.

தோட்ட வேலை:—(1) தோட்டத்தின் மொத்த நீளத்தில் கொத்தியது போக மீதி.

(2) விதைத்தல்: மொத்த விதையில் நட்டது போக மீதி.

(3) நாற்று நடுதல்: கையில் உள்ளதில் நட்டது போக மீதி.

(4) காய்கறி பறித்தல் : மொத்தக் காய்களில் விற்றது போக மீதி.

(ஈ) நிறுத்தலளவை:—குறிப்பு : எடையைத் தோலாக் கணக்கிலேயே கணக்கிடுவது நல்லது, அணுக் கணக்கில் எடையைக் கணிப்பது இவ்வகுப்பில் சரியல்ல.

40 தோலா 1 ராத்தல்.

கூட்டல்: (1) நூற்றல்:—பருத்தி எடுத்தல். ஒவ்வொரு நாளும் எடுத்த பருத்தி எடை. மாதம் முழுவதும் எடுத்த மொத்த எடை.

(2) பருத்திச்சுத்தம் :— ஒவ்வொரு குழுவிலும் செய்தது. மொத்தம் சுத்தப் பருத்தி, தூசி, எடை.

(3) பருத்தி அரைத்தல் : ஒவ்வொருவரும் அரைத்தது, எல்லாப் பிள்ளைகளும் அரைத்தது, மொத்தம். பஞ்சு எடை, விதை எடை, கழிவு எடை இம்மூன்றையும் கூட்டுதல்.

(4) பஞ்சு சுத்தம் : சுத்தம் செய்த பஞ்சு, கழிவு இரண்டின் மொத்த எடை.

(5) பட்டை போடுதல் : மொத்தப் பட்டைகள். எடை கூடுதல், பிள்ளைகள் போட்ட மொத்தம். குழுக்கள் போட்டது மொத்தம்.

(6) நூற்றல் : காலை, மாலை நூற்ற பட்டை எடை. தக்கிளியின் எடை.

(7) சிட்டம் போடுதல்: சிட்டங்களின் மொத்த எடை.

தோட்ட வேலை :—(1) காய்கறி பறித்தல் : பறித்த ஒவ்வொரு வகைக் காயின் எடையின் மொத்தம். காய்களின் மொத்த எடை. 8 பலம் 1 சேர். 5 சேர் 1 வீசை.

(2) பூச்சி எடுத்தல் : மருந்து, எடை.

துப்புரவு ஆரோக்கியம் :—(1) குளித்தல், அரைப்புத் தூள், களிமண் எடை.

(2) ஒவ்வொருபிள்ளையின் எடையும் அறிதல். உயரம்.

கழித்தல் : நூற்றல் : பருத்திச்சுத்தம். பருத்தி எடையி லிருந்து பஞ்சு எடைபோக மீதி விதையின் எடை. பருத்தி எடையிலிருந்து விதை எடைபோக மீதி பஞ்சு எடை.

பஞ்சு சுத்தம் : எடுத்த பஞ்சில் தூசி எடைபோக மீதி சுத்தப் பஞ்சு எடை. அதே போல தூசி எடை.

நூற்றல் : (1) பஞ்சரைத்தல். எடுத்த பருத்தியில் பஞ்சு போக மீதி விதை எடை. விதை எடை அறிந்து மீதிப் பஞ்சு எடை அறிதல்.

(2) பட்டை போடுதல் : பஞ்சு எடையில் பட்டை எடைபோக மீதிக் கழிவு எடை.

(3) நூற்றல் : எடுத்த பட்டை எடையிலிருந்து மீதி இருக்கும் பட்டை எடையைக் கழிக்க வருவது நூற்ற பட்டை எடை.

(4) சிட்டம் போடுதல் : சிட்டங்களின் எடை வித்தியாசம். சென்ற வாரத்துக்கும் இவ்வாரத்துக்கும் வித்தியாசம்.

தோட்ட வேலை :—காய் பறித்தல் : மொத்தக் காய்களிலிருந்து விற்ற காய்களின் எடை போக மீதிக் காய்கள் எடை. மொத்தக் காயிலிருந்து ஒருவகைக் காய்போக மீதிக் காய்களின் எடை.

துப்புரவு ஆரோக்கியம் : யாருடைய எடை அதிகம் அல்லது குறைவு. உயரம்.

(உ) நீட்டலளவை :– நூற்றல், பஞ்சரைத்தல். பலகை மணையின் நீளம், அகலம், கம்பியின் நீளம் அறிதல்.

பட்டை போடுதல் : பட்டையின் நீளம், குச்சியின் நீளம், பட்டைப் பலகையின் நீளம், அகலம், கைப்பிடியின் நீளம் அகலம் அறிதல்.

நூற்றல் : தக்கிளியின் நீளம், அட்டையின் நீளம் அகலம், புது நூலின் நீளம்.

வீசுதல் : வீசனத்தின் நீளம், ஒரு பக்க நீளம், ஒரு சுற்று நூல் நீளம், கண்ணிக்கயிறு நீளம், எல்லாப் பிள்ளை

களின் கண்ணிக்கயிறு மொத்த நீளம். அதற்கு வேண்டிய நூலின் நீளம்.

12 அங்குலம் 1 அடி. 3 அடி 1 கெஜம்.

தோட்ட வேலை-பண்படுத்துதல் : ஒரு பாத்தியின் நீளம், மொத்தப்பாத்தியின் நீளம். ஒரு பாத்தியின் அகலம், மொத்தப் பாத்திகளின் அகலம்.

துப்புரவு ஆரோக்கியம் : பிள்ளைகளின் உயரம் அளத்தல். மார்பளவு. வகுப்பறை : வகுப்பறை நீளம், அகலம், தாழ்வாரத்தின் நீளம், ஜன்னல் கதவின் நீள அகலம். ஒரு பல் குச்சி நீளம். தலை சீவுதல் : சீப்பின் நீளம், மரச்சீப்பின் நீள அகலம், தலைமுடி நீளம். துணி துவைத்தல் : துணியின் நீள அகலம், முழம், சாண் அளவு.

உல்லாசப் பிரயாணம் : நடந்த தூரம், மைல், பர்லாங், கெஜம் அளவு.

விழா கொண்டாடுதல் : தோரணத்தின் நீளம், மெழுகிய அல்லது கழுவிய இடத்தின் நீளம், அகலம்.

(ஊ) முகத்தலளவை :—தானியம் அளத்தல், சேர், படி, மரக்கால். எண்ணெய் அளத்தல். தோட்ட வேலையில் பூச்சிக்கு மருந்து தயாரிக்கத் தண்ணீர் அளத்தல்; படி, சேர். தண்ணீர் அளப்பதற்கும் தானியம் அளப்பதற்கும் உள்ள வித்தியாசம்.

(எ) கால அளவை :—நேரம் அறிதல் : கடிகாரம் பார்த்து மணியறிதல், 60 நிமிஷம் 1 மணி. வேலை தொடங்கும் நேரம், முடிந்த நேரம், வேலை செய்த நேரம். எல்லா வேலைகளையும் காலத்தைக் கணிக்கும் அறிவுடன் செய்தல். வருஷப் பிறப்புக் கொண்டாடுதல். 24 மணி ஒரு நாள். 30 நாள் ஒரு மாதம். 7 நாள் ஒரு வாரம். 4 வாரம் ஒரு மாதம். 12 மாதம் ஒரு வருஷம்.

(ஏ) நாணய அளவு :— நூற்றல் : சிட்டம், பருத்தி, பஞ்சு, விதை, இவற்றின் விலை. தக்கிளியின் விலை. சிட்டங்கள், தோலா, ராத்தல், பருத்தி, பஞ்சு, விதை முதலிய

வற்றின் விலை கண்டு பிடித்தல். 12 பை ஒரு அணா, 16 அணா ஒரு ரூபாய் என்பது.

தோட்ட வேலை : கருவிகளின் விலைகள். விதை, எரு, காய்கறிகள் விலை, மொத்த விலை.

துப்புரவு ஆரோக்கியம் : கருவிகளின் விலை. உல்லாசப் பிரயாணத்துக்குக் கொண்டுபோன பணம் செலவழிந்தது போக மீதி.

ஐ பின்னம் :— அரை, கால் அறிதல்.

| | |
|---|---|
| நிறுத்தல் | ½, ¼ தோலாக்கள் |
| | ½, 1 ராத்தல் |
| நீட்டலளவை | ½, 1 அடி |
| காலஅளவை | ½, 1 மணி. |
| நாணயம் | ½, 1 அணா, ½, 1 ரூபாய். |

(ஒ) வட்ட வடிவங்கள் :—வட்டம் : தக்கிளியின் வட்டு, வாளி, சாப்பிடும் தட்டு, கிணறு, கலைக்கொட்டின் பூண்.

சதுரம்: பாத்தி, தளவரிசைக் கல்.

நீண்ட சதுரம் : அட்டை, பட்டைப் பலகை, பலகை மணை, கற்பலகை.

நேர்க்கோடு : தக்கிளி, வீசனம், பலகை மணையின் கம்பி.

வளைந்த கோடு : ஒற்றையடிப்பாதை, கிணறு.

2. தமிழ்

(அ) பேச்சுப் பயிற்சி :—1. ஒவ்வொரு செயலையும் செய்யுமுன்னர்த் திட்டமிடுதல்.

2. செய்த வேலையைப் பற்றித் தொடர்ச்சியாகத் திருத்தமான வாக்கியங்களில் சொல்லுதல்.

3. சுகாதாரக் கேள்வி கேட்டலும் பதிலும்.

4. பாலர் சபையில் மந்திரிகள் அறிக்கை சொல்லல்.

5. செய்தி சொல்லுதல். ஊர்ச்செய்தி, தேசச் செய்தி, உலகச்செய்தி.

6. உல்லாசப் பிரயாணம் போய்வந்தது பற்றித் தான் நேரில் பார்த்தவற்றையும் கேட்டவற்றையும் தெளிவாக முழுவாக்கியங்களில் திருத்தமான உச்சரிப்புடன் சொல்லுதல்.

7. பள்ளிக்கூடத்திலும், ஊரிலும் நடந்த விழாக்களைப்பற்றியும், வந்த விருந்தினர்களைப் பற்றியும் பேசுதல்.

8. பலவிதக் கதைகள் சொல்லுதல் : தொடர்பாகச் சொல்வதில் கவனம் செலுத்துதல் வேண்டும்.

9. பள்ளிக் கூடத்திலும் ஊரிலும் நடைபெறும் தினசரி வேலை முறைகளைத் தொடர்பாய்த் திருத்தமாகச் சொல்லுதல்.

10. சிறு நாடகங்கள் நடித்தல்.

(ஆ) எழுத்துப்பயிற்சி :— தன் பெயர், பெற்றோர் பெயர், ஊரின் பெயர், தன் வகுப்பிலுள்ள மற்றப் பிள்ளைகளின் பெயர், ஒவ்வொரு பாடத்திலும் வரும் எழுத்துப் பயிற்சி.

கருவிகளின் பெயர் : நூற்றல், தோட்டவேலை, துப்புரவு ஆரோக்கியம் சம்பந்தமானவை.

செயல்கள் :— துப்புரவு, ஆரோக்கியம், விழாக்கள், நூற்றல், தோட்டவேலை ஆகியவைகளின் பெயர்.
நாள், கிழமை; மாதம்.

எழுத்துப் பயிற்சிக்குக் கரும்பலகையும், கற்பலகையையும் முக்கிய கருவிகளாகக் கொள்ளலாம்.

(இ) வாசிப்புப் பயிற்சி : கற்பலகை அட்டையிலுள்ள பெயர்கள் கரும்பலகையில் எழுதிய பாடங்கள் வரும் மொழிப் பயிற்சிப் பாட சம்பந்தமான சிறு சிறு வாக்கியங்கள் எழுதிய அட்டைகள், சுவரொட்டி விளம்பரங்கள், பிழைகளைத் திருத்திப் படித்தல் பயிற்சி. பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்ட அட்டைகள் படித்தல்.

3. சமூகப பயிற்சி :—

1. விருந்தினரை உபசரித்தல்:- மற்ற ஊர்களில் வாழ்க்கை விவரம், மரியாதையாகப் பேசுதல், குறுக்கே பேசாது பொறுமையுடன் கேட்டல், மரியாதையாக விடை கூறுதல். பள்ளியைப் பார்க்க வருபவர்களை வணங்க வேண்டிய முறை.

2. பாலர் சபை, நீதி மன்றம் : இங்கு மரியாதையாக நின்று மரியாதையாக விடை கூறுவது. பின் கேள்வி கேட்பது தன்முறை வரும்வரை காத்திருந்து கேள்விகள் கேட்பது. மற்றவர் பேசும்போது குறுக்கே பேசாதிருப்பது, பேசும்போது கூச்சல் போடாதிருப்பது.

3. விழா : கொண்டாடும்போது, பிரார்த்தனை செய்யும்போது, ஒருவர்பின் ஒருவராக இடித்துத் தள்ளாமல் வரிசையாகப் போவது, ஒருவர்பின் ஒருவராக வரிசையில் உட்காருவது.

4. பள்ளிக்கூடத்தின் விழாவில் தின்பண்டங்கள் வினியோகித்தல் : கோவில் விழாக்களில் தின்பண்டங்கள் வழங்கும்போது, சரசுவதி பூசை, பிள்ளையார் சதுர்த்தி, முழுமதி விழா முதலிய சந்தர்ப்பங்களில் உண்ண வரும்போது, ஒழுங்காகவும் அமைதியாகவும் வந்து உட்காருதல். தனது முறை வரும் வரை காத்திருத்தல். தனக்குத் தேவையான அளவுள்ள உணவு மட்டுமே பெற்றுக்கொள்ளுதல். உணவு கொஞ்சமாக இருந்தால் கிரமமாகப் பங்கிட்டுக்கொள்ளுதல். அழகாக உண்ணுதல்.

உண்கலம், பரிமாறும் கலம் ஆகியவற்றைச் சுத்தம் செய்து உரிய இடத்தில் வைத்தல்.

கூட்டத்தில் இடித்துத் தள்ளாமல் ஒருவர் பின் ஒருவராக நின்று தன் முறை வரும்வரை காத்திருத்தல்.

குடி தண்ணீர் :- முறையாக வரிசையில் நின்று தன் முறை வரும்வரை காத்திருத்தல், எச்சில்படாது துப்புரவாகக் குடித்தல், மூடுதல். பாத்திர சுத்தம்.

6. (அ) வகுப்புக்களில் ஆசிரியரிடம் மரியாதையாகக் கேட்பது, விடை கூறுவது, தனது முறை வரும்வரை காத்

திருந்து கேள்வி கேட்பது. கொடி வணக்கம், பிரார்த்தனை நடக்கும்போது ஒருவர் பின் ஒருவராகப் போவது, வரிசையில் உட்காருவது, எழுந்து வருவது.

(ஆ) வகுப்புப் பிள்ளைகளுடன் கெட்ட வார்த்தை பேசாதிருப்பது, மற்றவர் சாமானை அவர் அனுமதியின்றி எடுக்காதிருப்பது. தன்முறை வரும்வரைக் காத்திருப்பது. தன்னினும் இளையவர்களுக்கு உதவி செய்தல். மூத்தவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ளுவது.

7. உல்லாசப் பிரயாணம் போகையில் பாதைகளில் நடக்கும்போது பாதையின் ஓரத்தில் ஒழுங்காக நடந்து போதல், இருவர் பேசிக் கொண்டிருக்கும்போது அவர்களிடையே புகுந்து போகாதிருப்பது. வழியை மறைக்காமல் இருப்பது

8. துப்புரவு ஆரோக்கியம் : நூற்றல், தோட்டவேலை முதலிய வேலைகளில் தனித்தனிக் குழாமாக வேலை செய்தல். தன்முறை வரும்வரை காத்திருத்தல். தொழில் கருவிகளையும், மூலப்பொருள்களையும் மற்றவர்களுடன் பங்கிட்டுக் கொள்ளுதல். நல்ல விதமாக உபயோகித்தல். வேலை தொடங்கு முன்பும் முடிந்தபின்பும் இடத்தையும், கருவிகளையும் துப்புரவாக்கிக் கருவிகளை ஒழுங்காக உரிய இடத்தில் அடுக்கிவைத்தல்.

9. விளையாட்டுகள் விளையாடும்போது சமூகப்பயிற்சி. விளையாட்டுப் பகுதியில் கண்ட சமூகப்பயிற்சிகள்.

10: இல்லம் : வீடுகளில் இப்பயிற்சியைப் பிள்ளைகள் பெற ஆசிரியர் பிள்ளைகளின் வீடுகளோடு தொடர்புடையவராயிருக்கவேண்டும். இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள பயிற்சிக்கு ஆசிரியர் பிள்ளைகளையும் பெற்றோரையும் தூண்டி விடவேண்டும்.

4. சாமானிய விஞ்ஞானம்

கீழ்க்கண்டவைகளில் செயல் ஒவ்வொன்றையும், ஏன், எப்படி, எங்கே, எப்பொழுது; எதைப்போல என்பதைப் பற்றிய அறிவு.

1. நூற்றல் : பருத்தி எடுத்தல்: தூசும்புகளின் தன்மை, பருத்தி விளையும் இடம், எங்கே அதிகம் விளைகிறது. காரணம். பருத்தி விளையும் பருவகாலம், விதைக்கும் பருவம், பூத்து வெடிக்கும் பருவம் பருத்தியைச் சேகரித்தல், பாதுகாத்தல். பருத்தி அதிகமாய்க் கிடைக்குமிடம்.

பருத்தி சுத்தம் செய்தல்: தூசுகள் யாவை? எப்படிச் சேர்ந்தன? வெயிலில் உலர்த்துதல்.

பஞ்சரைத்தல் : பலகை மணையில் பஞ்சரைத்தல். வீராசனத்தில உட்காருதல். விதை நீக்குதல். பலகை மணையின் வழுவழுப்பை நீக்கும் முறை. பலகை மணையின் அமைப்பு. தேக்கு மரத்தால் செய்யப்பட்டது. இதனுல் செய்யப்பட்ட வேறு பொருள். அந்த மரம் உள்ள பிரதேசம். கம்பியில் துரு நீக்குதல். துரு ஏற்படக் காரணம். இரும்பினுல் செய்யப்பட்டது. மற்ற உலோகங்கள். ஏன் அவைகளால் செய்யக்கூடாது. இரும்பினுல் செய்யப்பட்ட வேறு பொருள்கள். பலகை மணையின் விதை நீக்கும் முறை எதைப்போல என்பது, கைமணையின் பஞ்சரைக்கும் முறை, ஆசனம் அதன் அமைப்பு. எந்த மரத்தால் செய்யப்பட்டது. எங்கே செய்தது. அதிலுள்ள ஆப்பைத் தளர்த்துவதும் முடுக்குவதும், பருத்தியை இழுத்து இழுத்துக்கொடுத்தல் பருத்தியை வெயிலில் உலர்த்தி அரைக்கவேண்டும். காரணம். எதைப்போல அரைக்கிறது என்பது.

பட்டை போடுதல் : வீராசனத்தில் உட்காருதல், பஞ்சைப் பரப்புதல், குச்சியை வைக்குமிடம், உருட்டுதல், முன்னே தள்ளுதல்; பட்டைகளை அழுத்திச் சுருட்டி வைத்தல், பட்டைப் பலகை ஒருபுறம் உயரமாகவும் ஒருபுறம் தாழ்வாகவும் இருக்கக் காரணம், குச்சி ஒருபுறம் மொத்தமாகவும் மற்ருெருபுறம் மெல்லியதாகவும் இருக்கக் காரணம். கைப்பிடியைப் பிடிக்கும் முறை, மோதிரம்போடுதல்.

நூற்றல் : சுகாசனம், தக்கிளியைச் சுழற்றுதல், பட்டை பிடித்தல், முதல் நூல் இழுத்தல், கண்டுநூல் சுற்றுதல்,

பிடி நூல் விடுதல், கைநூல் விடுதல், தக்கிளியை அட்டையின்மேல் வைத்து நூற்பதன் காரணம், சாம்பல் தேய்த்து நூற்பது, தக்கிளியின் அமைப்பு, நல்ல தக்கிளியின் இலட்சணங்கள், நல்ல நூலின் இலட்சணங்கள். வட்டு பித்தளை, கம்பி இரும்பு வெவ்வேறான உலோகங்கள் ஏன் ? பித்தளையால் செய்யப்பட்ட வேறு பொருள்கள்.

தக்கிளி எங்கு செய்தது, எப்படிக் கிடைக்கும்.

அறுந்த நூலை இணைத்தல் : நூலும் நூலும் இணைவதில்லை. காரணம். நுனி நூலைப் பஞ்சாக்கி என்ன செய்கிறோம்.

வீசனத்தில் வீசுதல் : நூலை வீசும் முறை. அறுந்த நூலைப் பிணைத்தல், கண்ணி கட்டுதல், நல்ல நூல் அறிதல், முறுக்கில்லாத நூலுக்கு முறுக்குக் கொடுத்தல். வீசனம் மரத்தால் செய்தது.

சிட்டம் போடுதல் : கண்ணிக் கயிறு இருக்க வேண்டிய இடம், முறுக்கிவிடுதல், ஒருமுகமாக உருட்டுதல், சேமித்து வைத்தல்.

2. தோட்ட வேலை : நிலத்தைக் கொத்தி விடுதல், கடப்பாரையால் பெயர்த்தல், மண்வெட்டி, களைக்கொட்டால் கொத்துதல், கட்டிகளை உடைத்து விடுதல், பாத்தி வரப்புக் கட்டுதல், கருவிகளை உபயோகிக்கும் முறை.

பலவகை மண் — ஏற்ற மண் — மண்வளம்.

எரு சேகரித்தல் : எரு தயாரிக்கும் பல முறைகள், எரு விடுதல், நிலத்தில் எரு கலத்தல்.

விதை நடுதல் : ஊன்றுதல், விதையின் அமைப்பு விதைக்கும் பருவம், நல்ல விதை, விதையிலிருந்து செடி உண்டாகும் விதம். பார்த்து அறிதல். விதை வேர், தண்டு, இலை, பூ, காய்.

நீர் விடுதல் : பருவ காலங்களுக்கு ஏற்ப நீர்விடுதல், தெளித்தல் ; பருவ காலங்களுக்கு ஏற்பச் செடியின்

வளர்ச்சியின் மாறுதல். செடியின் வளர்ச்சிக்கு நீர் ஊற்றுதல், பாய்ச்சுதல், நீர்விடப் பலவிதக் கருவிகள் வேண்டியவை. அவற்றின் அமைப்பு, செடியின் வளர்ச்சியில் வெவ்வேறு நிலைகள்.

களையெடுத்தல் : பலவிதக் களைகள். செடியின் வெவ்வேறு அங்கங்கள். களையைப் பயன்படுத்துதல். பலவிதக் களைக்கொட்டுகள், அவற்றின் அமைப்பு.

பூச்சியெடுத்தல் : மருந்து தயாரித்தல். செடிகளுக்குத் தீங்கு செய்யும் பூச்சிகள். உதாரணம் : அவரையில் அசுகுணி. அவை எவ்வாறு செடியைப் பாதிக்கின்றன என்பது. அவைகளைப் போக்க மருந்துகள். உபயோகிக்கும் கருவிகள். செடிகளுக்கு நன்மை செய்யும் பிராணிகள்.

காய் பறித்தல்: காய் ஒவ்வொன்றின் அமைப்பு. பயன்படும் முறை. காய்க்கும் வெவ்வேறு பருவகாலங்கள். விளைவில் மாறுதல்கள்.

3. துப்புரவு : ஆரோக்கிய பாடங்களில் வரும் எப்போது எப்படி ஏன் என்ற பகுதிகள். அந்தந்தச் செயல்களைச் செய்யும்போது சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அது சம்பந்தமாக இயைபுபடும் அறிவை — எப்போது எப்படி ஏன் எங்கே—என்பவைகளை விளக்கிப் போதிக்க வேண்டும்.

4. இயற்கைச் சூழ்நிலை : அமாவாசை, முழுமதிவிழா-பௌர்ணமி, வளர்பிறை, தேய்பிறை, வருஷப் பிறப்புக் கொண்டாடுதல், பருவகாலங்கள், சூரிய உதயம் அஸ்தமனம், கவனித்தல்.

கிரகணம் : வரும்போது கவனித்தல். சூரிய கிரகணத்தைக் கண்ணாடியில் மை தடவிப் பார்த்தல், பாத்திரத்தில் மஞ்சள்நீர் விட்டுக் கவனித்தல். இரவில் விழித்திருந்து சந்திர கிரகணத்தைக் கவனிக்கச் செய்தல். தோற்றம்.

உல்லாசப் பிரயாணம் : 1 இயற்கை: ஆறு, ஏரி, மலை, கடல், கால்வாய் முதலிய இயற்கைச் சூழ்நிலைகள். பலவகை

மரங்கள், செடிகள், கொடிகள், பயிர்கள், பிராணிகள் முதலியவற்றைக் கூர்ந்து கவனித்தல்.

2. கைத்தொழில் : நடைபெறும் இடங்களுக்கு : கைத் தொழில் நடைபெறும் முறை, தொழிலாளர் வாழ்க்கை விவரம், கருவிகள் அமைப்பு, வேலை செய்யும்முறை.

3. சந்தை : கடைத்தெரு, ரயில்வேஸ்டேஷன், தபா லாபீஸ் முதலிய இடங்கள். மக்களுடைய வாழ்க்கை நடை யுடை பாவனை முதலியவை பற்றிய விவரம்.

## 12. போதனை பற்றிய குறிப்புக்கள்

1. பிள்ளையின் மனப்போக்கை அறிதல் :

ஒவ்வொரு குழந்தையின் திறன்கள் அனைத்தையும் வளர்ப்பதற்கும், அக் குழந்தையினால் பாடசாலையில் வரக் கூடிய முழுப் பயனைப் பெறுவதற்கும், குழந்தையின் மனப் போக்கை ஆசிரியர் நன்றாய் அறியவேண்டும். என்ன பொருள்களை அவன் மனம் நாடுகிறது என்ன வழிகளில் அவன் தன் உள்ளத்தை வெளிப்படுத்துகிறான்—கண் எதை நாடுகிறது, காது எதை நாடுகிறது, கை என்ன செய்கிறது —என்று அறிந்தால்தான் அவனுக்கே கல்வி இன்பம் தரக் கூடியதாய் இருக்கும். எழுத்துப் படிப்பின் மூலமாய்க் குழந்தை மனப்போக்கை அறிவது அருமை. செயல்களின் மூலமாய் அறிவது எளிது. செயல்கள் செய்யும்போது அவனுடைய துப்புரவு உணர்ச்சி, கலை உணர்ச்சி, கணித உணர்ச்சி முதலியன வெளிப்படுகின்றன. மனப்போக்கு வெளிப்படுவதற்கான சந்தர்ப்பங்கள் பின்வருவன :

1 செயல்கள். 2 சித்திரம் 3. விளையாட்டு.

இவை ஒவ்வொன்றிலும் குழந்தை ஈடுபடும்போது ஆசிரியர் குழந்தையின் செய்கையைக் கவனித்து அதன் மூலம் அவன் மனப்போக்கு எத்தகையது என்பதை நிதா னித்து உணர்ந்து பாடசாலை வாழ்க்கையில் அந்த மனப் போக்குக்கு முரண் இல்லாதபடியும் அந்த மனப்போக்கைச் செம்மையாக வளர்க்கத்தக்க முறையிலும் அவனைச் செய லில் ஈடுபடுத்தவேண்டும்.

## 2 சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திப் போதித்தல்

ஆசிரியர் வகுப்பு நடத்திவருகையில் பிள்ளைகளின் கவனத்தை இழுக்கக்கூடிய சம்பவங்கள் சில எதிர்பாராமல் நிகழக்கூடும். அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளவும் சமாளிக்கவும் உபாத்தியாயர் அறிந்திருக்கவேண்டும். சம்பவத்தைக் கண்டு அஞ்சவோ, அதைப் புறக்கணிக்கவோ வேண்டுவதில்லை. உதாரணமாக பாடம் நடத்திக்கொண்டிருக்கும்போது வகுப்பில் ஒரு பையன்மீது ஒரு பல்லி விழுவதாக வைத்துக்கொள்வோம். பல்லி விழுவது எல்லோருக்கும் வேடிக்கை. பல்லி விழுந்த பையன் அதை உதறுகிறான். பல்லி ஓடுவதை எல்லோரும் கவனிக்கிறார்கள். பாடத்தில் பிள்ளைகள் கவனம் செல்லவில்லை. இந்தச் சமயத்தில் ஆசிரியர் மிக்க திறமையோடு பல்லியிடம் சென்றுள்ள பிள்ளைகளின் கவனத்தை அந்தத் துறையிலேயே பயன்படுத்திவிட வேண்டும். பல்லியின் உருவம் -- அதன் வாழ்க்கை -- பல்லி சொல்லுதல்—அதற்கு இனமான மற்றப் பிராணிகள் ஆகியவற்றைப்பற்றிப் பிள்ளைகள் புரிந்துகொள்ளக்கூடிய அளவு பாடமாகவே கற்பிக்கலாம். பல்லியினால் சற்று வேடிக்கையைக் கண்ட பிள்ளைகள் அதைப்பற்றி அவர் சொல்லுவதை அந்தச் சமயம் கூர்ந்து கவனிப்பார்கள். உபாத்தியாயர் சொல்லுவது முழுமையும் கேட்டபிறகு, மீண்டும் அதிகக் கவனத்தோடு, விட்ட பாடத்தைக் கவனிப்பார்கள். பிள்ளைகளின் ஆவலைத் திருப்தி செய்தாலொழிய, அவர்கள் கவனம் பாடத்தில் திரும்பாது.

சில சமயம் வகுப்பை விட்டுப் போகமுடியாத முக்கியமான வேலை வகுப்பில் நடைபெறக்கூடும். அப்போது ஆசிரியர் எப்படிச் சமாளிப்பார் என்பது கேள்வி. உதாரணமாக, வகுப்பில் பட்டைபோடும் செயல் நடைபெறுகிறதென்று வைத்துக் கொள்வோம். வெளியே ஆகாய விமானத்தின் சப்தம் கேட்கிறது பிள்ளைகள் ஆகாய விமானம் பார்க்க ஆசைப்படுவார்கள். பஞ்சையும் வைத்துவிட்டுப் போகமுடியாது. சிறிதுநேரம் சென்று பார்க்கலாமென்றால் ஆகாய விமானம் போய்விடும். இந்த நிலைமையில் ஆசிரியர்

பட்டையை உடனே போட்டு முடிப்பதிலுள்ள அவசரத்தைப் பிள்ளைகளுக்கு உணர்த்தி, விமானம் பார்த்துவிட்டு வந்து செய்யலாம் என்று தாமாகவே பிள்ளைகளுக்குச் சொல்லி அழைத்துக்கொண்டுபோய் ஆகாய விமானத்தைக் காட்டலாம். ஆகாய விமானம் சம்பந்தப்பட்ட விவரங்களை இயன்ற அளவு அப்போது அறிவிக்கலாம். ஆசிரியருடைய செய்கையால் பிள்ளைகளுக்குத் திருப்தி உண்டாகித் தாங்களாகவே விரைந்து திரும்பி வந்து, விட்ட வேலையை முடிப்பார்கள்.

இப்படிப் பிள்ளைகளின் மனப்போக்கை யறிந்து ஆசிரியர் நடப்பதனால் ஏற்படும் நன்மை அதிகம். பிள்ளைகளை வெளியே அனுப்பவில்லையென்றால், பொய்க்காரணம் சொல்லி வெளியே போகவேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாகும். ஆசிரியர் தங்கள் எண்ணத்தை உணர்ந்து, அதற்கு இடம் கொடுக்கிறார் என்று அறிவதால் அவரிடம் அன்பும் மரியாதையும் உண்டாகின்றன. பின்னொரு சமயம் அவர் பிள்ளைகளுக்கு இடம் கொடாமல் கடுமையாக இருந்தால்கூட அவர்கள், ஆசிரியரின் கடுமைக்கு நியாயமான காரணம் இருக்கக்கூடும் என்று நம்பி, மரியாதை குறையாமலேயே இருப்பார்கள். மேலும் ஆசிரியருடைய செய்கையால் பிள்ளைகளின் கட்டுப்பாடு குறையாமல் இருக்கிறது

3. தனிக் கவனம் செலுத்துதல்

செயல் செய்வதில் குழந்தைகளிடம் சொற்ப வேறுபாடுகள் இருக்கின்றன. சில பிள்ளைகள் சுறு சுறுப்பைவிடச் சோம்பலையே அதிகம் விரும்பக் கூடும். வேறு சில பிள்ளைகள் சுறு சுறுப்பாயிருந்து வேலை செய்யத் தெரியாமையால் இடர்ப்படக் கூடும். இவர்களிட மெல்லாம் ஆரம்பத்தில் காணப்படுகிற குறைகளை அல்லது இடர்களைக் களைவதற்கு, ஆசிரியர் சொற்ப அளவேனும் தனியாகக் கவனம் செலுத்தல் அவசியம். சொற்பக் கவனத்தால் மிகுதியான பலன் ஏற்படக்கூடும். இப்படி ஆரம்பத்தில் சொற்பத் திருத்தம் செய்யாமல் ஆயுள் முழுமையும் குறை

யோடு இருப்பவர்களும் உண்டு. ஆரம்பத்தில் தனிக் கவனம் செலுத்தித் திருத்தாமல் விட்டுவிட்டால் பிற்பட்டுத் திருத்துவது மிகவும் கஷ்டமாகிறது. சில சமயம் முடியாமலே போகிறது. இனி, படிப்பை மட்டும் கவனித்தாலும், சிலரிடம் காணப்படுகிற சிறப்பான அபிவிருத்தி தனிக் கவனத்தால் நன்றாக ஓங்கும். பல துறைகளிலும் விரிவடையும். தனிக் கவனம் இல்லாது போனால், தீவிரபுத்தியுடைய பிள்ளைகள் கூடத் தூண்டுதலோ வழிகாட்டுதலோ இல்லாமல் தேங்கி விடுவார்கள்.

4. மந்தமான பிள்ளைகளிடம் கவனம் செலுத்துதல்

பாடசாலையில் ஒவ்வொரு வகுப்பிலும் இது கஷ்டமான பிரசினை. புத்திக் கூர்மையுடைய பிள்ளைகளுடன் இவர்கள் சேர்ந்து படிப்பதனாலேயே இவர்களுக்குச் சற்றுத் தாழ்வுணர்ச்சி ஏற்பட்டு வளர்ச்சி தடைப்படுகிறது. இவ் விஷயத்தில் ஆசிரியர் மிக்க எச்சரிக்கையோடிருக்க வேண்டும். பாடசாலை வாழ்க்கையில் இப்படிப்பட்ட பிள்ளைகளுக்கு ஏதேனும் ஓர் அம்சத்தில் மிகுந்த திறமை இருக்கக் கூடும். அந்தப் பையனைப் 'புத்தியற்றவன்' என்று ஆசிரியர் பழிக்காதபடி அவனிடம் அமைந்த இந்தத்திறமையைக் கண்டறிய வேண்டும். இதற்கான வேலைகளையும் பொறுப்புக்களையும் அவன் வசம் ஒப்புவிப்பதனால், அவனுக்குத் தன்னம்பிக்கையும், தன் மதிப்பும் ஏற்பட்டு, வகுப்பில் தானும் பயனுள்ள ஓர் அங்கம் என்று எண்ணுவான். இந்த எண்ணம் பிற அம்சங்களிலும் அவனுக்குச் சுமாரான தேர்ச்சி அளிக்கும். பிற நாடுகளில், வகுப்பில் மிகவும் கீழ்த்தரமாயிருக்கிற பிள்ளைகள் தான் செயல் திறனில் முதல்தரமாயிருக்கிறார்கள் என்றும், சட்ட விரோதமான நடத்தையில் ஈடுபடுகிறவர்கள் பெரும்பாலும் இவர்களே என்றும் கல்வி நிபுணர்கள் கூறுகிறார்கள். நம் ஆதாரக் கல்வி ஏட்டுப் படிப்பை உயர்வென்று கருதி உழைப்பைத் தாழ்வென்று கருதுவது அல்ல. ஆதலால் இங்குப் படிப்பில் தேர்ச்சியுள்ள பையனும் அத்தேர்ச்சியற்று வேறு உழைப்பில் தேர்ச்சிபெற்ற பையனும் ஒன்றே. ஆசிரியரின் தனிக்

கவனத்தினுல் அவனவனிடத்திலுள்ள சிறு குறைவு சற்றே நிறைவு செய்யப்பெறுதல் கூடும்.

5 கேள்வி கேட்டல்

முதல் வகுப்புக் குழந்தையிடம் புதியதை அறியும் அவா என்ற ஆராய்வூக்கம் தீவிரமாக வேலே செய்கிறது. இந்த ஊக்கம்தான் குழந்தையின் அனுபவத்தை விரியச் செய்வதற்கும் சூழ்நிலேயை அவன் வெற்றி கொள்வதற்கும் உறுதுணையாகிறது. ஆசிரியர் இந்த ஊக்கத்தைத் தவருமல் நல்ல முறையில் வளர்க்கவும் பயன்படுத்தவும் வேண்டும் உதாரணமாக நம் பாடசாலேயைப் புதிதாய் வந்து பார்க்கும் விருந்தினரைப் பிள்ளேகள் கேள்வி கேட்பது வழக்கமாயிருந்து வருகிறது. 'உங்கள் பெயர் என்ன? உங்களுக்கு என்ன சம்பளம்? நீங்கள் மோட்டாரில் வந்தீர்களா?' என்ற தோரணேயில் அனேகம் பிள்ளேகள் கேட்டுப் பழகியிருக்கிருர்கள். இம்மாதிரிக் கேள்வி மட்டும் பயனில்லே. ஏனெனில் இவற்ருல் அவனுடைய படிப்போ வாழ்க்கையோ பயனடையப் போவதில்லே. மற்றப்படி 'உங்கள் ஊரில் மழை உண்டா? வைகாசிமாத வெயிலில் என்ன சாகுபடி செய்கிறீர்கள்? தண்ணீர் எப்படி இறைக்கிறீர்கள்? மா நன்ருகக் காய்த்திருக்கிறதா?' என்று அவன் கேட்பானுல் நிரம்பப் பயனுண்டு. அவருடைய ஊரில் சாகுபடி செய்யும் முறை முதலியவற்றை இவ்விதம் அவன் கேட்டறிவதால் உண்மையாகவே இவனுடைய பயிர்த் தொழிலறிவு மேம்படுகிறது. இவ்விதமாகக் குழந்தைகளேத் தங்கள் வாழ்க்கைக்கும் சூழ்நிலேக்கும் பொருத்தமான கேள்விகளே மட்டும் கேட்கும்படி பழக்க வேண்டும். கேட்கும் கேள்விகள், அவன் ஆராய்ச்சியைத் தூண்டி அறிவை வளர்க்க உதவுவனவா யிருக்கவேண்டும்.

6. சில விசேஷப் பிரசினேகள்

முதல் வகுப்பு ஆசிரியரை எதிர்நோக்கியுள்ள பிரசினேகள் பலவகை. அவற்றுள் பிள்ளேகளின் நடத்தையும் ஒன்று. நடத்தையில் எழும் சில சிக்கல்களே மட்டும் இங்கு எடுத்து ஆராய்கிருேம்.

(அ) குறும்புத்தனம் : பிள்ளைகளின் குறும்பு பிள்ளைகளிடமுள்ள அபாரமான உடல் சக்திக்கு ஓர் அடையாளம். இந்தச் சக்தி சரியானபடி பயனுள்ள முறையில் தொழில்படச் செய்தால் குறும்பு குறையும். பக்கத்திலுள்ள குழந்தைகளைத் தொந்தரவு பண்ணுதல், பாடசாலையின் பொருள்களைத் தாறுமாருகக் கெடுத்துவைத்தல், ஓயாத சத்தம் முதலியன, குறும்பு வெளிப்படும் சில வழிகள். பிள்ளையைக் கண்டிப்பதோ தண்டிப்பதோ பயன் தருவதில்லை. தொழில் மூலம் கல்வி பயிற்றும்போது, குறும்புத்தனமுள்ள பிள்ளைகளின் குறும்புகூட ஓரளவு குறையும். ஏனெனில் இங்கு உடலுறுப்புக்களுக்குச் சுமாரான வேலை கிடைக்கிறது. அதிகக் குறும்புள்ள பிள்ளையைத் துப்புரவு மந்திரியாகவோ விவசாய மந்திரியாகவோ நியமிக்கச் செய்து, சற்று விவேகத்துடன் அவனை உற்சாகப்படுத்தினல், இப்படிப்பட்ட வேலைகளில் உள்ள பொறுப்பைச் சமாளிப்பதில் அவன் சக்தியில் பெரும்பகுதி செலவாகி, அவனது ஊக்கம் குறையாமல் குறும்பு மட்டும் குறைய இடம் உண்டு. குறும்புத் தனத்தைக் குற்றம் என்று கருதாமல் ஆக்கவேலையில் பயன்படுத்த ஆசிரியர் அறியவேண்டும்.

(ஆ) தூக்கம் : வகுப்பில் பிள்ளைகள் தூங்கி விழுவதை அடிக்கடி காண்கிறோம். இதற்காகக் குழந்தையைக் கோபிப்பது சரியன்று. மனோதத்துவ ரீதியாக இதை ஆராயவேண்டும். உடல் நோயா, உணவின்மையா, இரவில் கண்விழிப்பா, தூக்கத்திற்குக் காரணம் யாது என்று பார்க்கவேண்டும். அவசியமானல், குறித்த பிள்ளையைப் பாடசாலையில் தனியே அரை மணி அல்லது ஒரு மணி நேரம் உறங்கச் செய்வது நியாயமாகும். இதனுல் அவன் உடலின் தேவை நிறைவேறுவதோடு, ஆசிரியரிடமும் அவனுக்கு மரியாதையும் பிறக்கும். அன்றியும், ஆசிரியர் பெற்றோரைச் சந்தித்து உறக்கத்துக்குக் காரணத்தை அறிந்து அதைத் தீர்க்க அவர்களுக்கு வழிகாட்டுவது இன்னும் சிறப்பு.

(இ) தாமதமாக வருதல் : பிள்ளைகள் தாமதமாக வருவது சகஜம். காரணத்தை அறிந்து இப்பழக்கத்தைப்

போக்க முயல வேண்டும். சில பிள்ளைகள் வீட்டிலிருந்து சாப்பாடு போட்டு உரிய காலத்தில் தாயார் அனுப்பி வைத்திருந்தாலும், வழியெல்லாம் திரிந்துவிட்டுத் தாமதமாகத் தான் வருகிறார்கள். பக்கத்து வீட்டுப் பிள்ளைகளையோ அல்லது வேறு பொறுப்புள்ள பிள்ளைகளையோ பொறுப்புக் கொடுத்து இந்தப் பிள்ளைகளுடன் பழகிக் கொஞ்ச காலத்துக்குத் தினந்தோறும் தவறாமல் அழைத்து வரும்படி செய்வதுதான் இதற்குப் பரிகாரம். பெற்றோரையே அழைத்துவரவும் செய்யலாம். சில பிள்ளைகள் வீட்டு நிலைமை காரணமாய்த் தாமதமாக வர நேரிடும். உணவின்மை, உணவிடுவதில் தாமதம், குடும்ப வேலைகள் முதலிய பல காரணங்கள் குறிப்பிடலாம். இவை பிள்ளையின் சக்தியைக் கடந்தவை. இந்த நிலைமைகளை ஆசிரியர் பெற்றோருடன் கலந்து பேசிச் சமாளிக்க வேண்டும். தம் பிள்ளை பள்ளிக்கூடத்தில் நன்றாய்ப் படித்துப் பெயர் வாங்கவேண்டுமென்ற ஆசை எல்லாத் தாய்மாருக்கும் உண்டு. இந்த ஆசையை ஆசிரியர் சற்றுக் கிளறி விடுவது நல்லது. தாமதமாக வருவது பிள்ளையின் சொந்த அழும்பு என்று தெரியும்போது, ஆசிரியர் சில வழிகளில் அந்த அழும்பைக் குறைக்கலாம். பாடசாலையில் எல்லோருடைய மதிப்புக்கும் உரிய ஒரு பொறுப்புள்ள வேலையை அந்தப் பிள்ளைக்குக் கொடுத்து, அவனுடைய தன் மதிப்பைத் தூண்டிவிட்டால், தன் பொறுப்பை நேரத்தோடு கவனிக்க வேண்டுமென்று எவ்விதத்திலாயினும் ஓடிவந்து விடுவான். பாடசாலை தொடங்கும் நேரத்தில் சுவையான கதை அல்லது நயமான பாட்டு கற்பிக்கிற வழக்கம் சிறிது நாளைக்கு வைத்திருந்தால் பள்ளிக்கூடத்தில் ஒரு கவர்ச்சி ஏற்பட்டு, தாமதமாக வருவது நீங்கும். ஆசிரியரிடம் பிள்ளைகளுக்கு இருக்கவேண்டிய அன்பும் மரியாதையுமே இவைகளுக்கு அடிப்படையான தன்மைகள்.

(ஈ) வகுப்பை விட்டு அடிக்கடி வெளியே போதல்: இது ஒரு கெட்ட பழக்கம். ஆரம்பத்தில் ஆசிரியர் அசட்டையாயிருந்தால் பிறகு கட்டுப்படுத்துவது அருமை; தவிர, பள்ளிக் கூடத்தின் ஒழுங்குமுறையையே இது கெடுக்

கிறது. இதற்குக் காரணம் பிள்ளைகளுக்கு வகுப்பில் கவர்ச்சியில்லாமை தான். வகுப்பு வேலையிலும், வாழ்க்கையிலும் எல்லாப் பிள்ளைகளுக்கும் பூரண கவர்ச்சியிருக்கும்படி பார்த்துக் கொண்டால் இந்தக் குறைபாடு தோன்ருது. பிள்ளைகளிடம் இந்தக் கெட்ட பழக்கம் அதிகமாக இருக்க ஆசிரியர் கண்டால், கொஞ்சநாள் வரையில் வகுப்புத் தொடங்குமுன் ஓய்வுக்கு வெளியே அனுப்பி வைப்பது நல்லது. பிறகு அவர்கள் வகுப்பில் வந்து உட்கார்ந்தால் ஒன்றரை மணி நேரத்துக்குப் பிறகு வருகிற அடுத்த ஓய்வு நேரத்துக்குள் மீண்டும் வெளியே போகக் கேட்பது நியாயமல்ல என்ற உணர்ச்சி அவர்களுக்குத் தானுக வரும். அதிகக் குறும்புள்ள பிள்ளைகள் அடங்கவே, மற்றப் பிள்ளைகள் இவ்விதம் கேட்டுக்கொண்டு போவது நிகழாது.

## 7. ஒழுங்குமுறை—தண்டனையும் பரிசும்

பொதுவாக ஆதாரக்கல்வி முறையில், புறத்திலிருந்து விதிக்கிற ஒழுங்கும் கட்டுப்பாடும் குறைவாயிருக்கும். அகத்திலிருந்து இவை உதிக்கச்செய்வதே ஆசிரியரின்வேலை. பாடசாலை வாழ்க்கை, உணவு விடுதி, தெரு, வீடு, விளையாட்டு இடம் ஆகிய எங்குமே ஒழுங்கு காணப்படவேண்டும். சமூகத்தினுடைய நல்வாழ்வைக் கருதித் தனிப்பட்ட குழந்தை தன் சொந்தக் குறைகளை அடக்கப் பழகுதல் சிறப்பு. அவன் செய்யும் வேலைகள் இக்கட்டுப்பாட்டை வருவிக்கும் சாதனங்களாகும். சமூக வாழ்க்கையின் பிரதான அங்கங்களான பிரார்த்தனை, துப்புரவு, வகுப்புவேலை, பொதுச்சபை, நூற்பு, தோட்டவேலை, கொடிவணக்கம் ஆகியவற்றிலெல்லாம் ஒழுங்கு படிவதற்கான வழிகள் உள்ளன. சமூகம் ஏற்படுத்தியுள்ள கட்டுப்பாட்டுக்கு அடங்குதல், தலைவனுக்குத் தான் கட்டுப்படுதல், தனக்குக் கட்டுப்பட்டவர்களைச் செம்மையாக நடத்துதல், சமூகத்தில் தன் பொறுப்பை முறையாகவும் நேரத்தோடும் நிறைவேற்றுதல் ஆகிய பழக்கங்கள் ஒழுங்கை நிலைநாட்டும். அழகுணர்ச்சி முதலியன இதிலிருந்து வெளியாகும்.

இத்தகைய ஒழுங்கு வரும்போது அதில் தண்டனைக்கும் பரிசுக்கும் தேவையிராது. தண்டனை என்பது தானாக உணராதவரையில் தண்டிப்பவர் மீது பகைமை உண்டாகிறது. உணர்ச்சி மிகுந்த சிறுவனிடம் இது தாழ்வுணர்ச்சியை ஊட்டுகிறது. நல்லுணர்ச்சியால் ஒழுங்கு வரவேண்டுமே தவிர, தண்டனையால் அன்று. நியாயசபை ஏற்படுத்துவது பொருந்தும். மேலும், அபராதம் விதித்தால் குழந்தை உணரமாட்டான். இது பெற்றோரையே பாதிக்கும். தண்டனை அச்சத்தையே தரும். ஆகவே, இதற்குப் பதிலாக ஆசிரியருடைய அன்புக்கே சிறுவன் கட்டுப்படவேண்டும், அஞ்சவேண்டும்.

இது போல, பரிசு முறையும் நன்மையாகாது. பொறுமைக்கும் போட்டிக்கும் இது வித்து. உழைப்பும் அதன் பயனும் போதுமான மகிழ்ச்சி தரவேண்டும். பரிசு கொடுத்து மகிழ்விப்பது லஞ்சம் கொடுப்பதுபோல. பரிசு என்ற ஆசைக்காக மாணக்கன் ஒன்றைச் செய்வானே அன்றி ஒழுங்கு உணர்ச்சியால் அல்ல ; தன்னுடைய மேம்பாட்டுக்காகவும் அல்ல. நடுத்தரத் தேர்ச்சியுள்ள பையன் பரிசுமுறையால் கவனிக்கப் பெருமலே போகிறன். அன்றியும், இது பிள்ளைகள் தங்கள் இயல்பான போக்கை விட்டுக் குறிப்பிட்ட வேறு வழியில் போகச் செய்கிறது.

## 13. விசேஷக் குறிப்புக்கள்

### 1. பாடப் புத்தகம்

முதல் வகுப்புக்குப் பாடப் புத்தகம் என்பது தனிப்பட வேண்டியதில்லை. சம்பிரதாயமாக இப்போது பாடப் புத்தகம் வைக்கிறார்கள். அணில் ஆடு என்ற அகரவரிசையில் புத்தகம் தொடங்குகிறது. அ, ஆ என்ற எழுத்துக்களில் பொருந்தியுள்ள வளைவும், சுழிப்பும் சிறுபிள்ளை எழுதுவதற்குக் கஷ்டப்படுவான் என்று அனேகர் கருதுகிறார்கள். ஆகவே வளைவும் சுழிப்பும் இல்லாதபடி டங்கா, டமாரம் என்று டகர வரிசை தொடங்குகிறார்கள். முதல் வகுப்புப் பாடப் புத்தகங்களைப் பார்த்தால் படம்,

படபட, டபடப என்றெல்லாம் எழுதியிருப்பதைக் காணலாம். ஒரு குழந்தையாவது 5, 6 வயதில் நேர்க்கோடு இழுத்ததில்லை. எல்லாக் குழந்தையும் சுழிக்கத்தான் சுழிக்கிறது. ஆதலால் ட, ப என்ற எழுத்துக்களைவிட மனோதத்துவ ரீதியாக அ, ஆ என்ற எழுத்து எழுதுவது குழந்தைக்கு எளிது என்று நாம் கருதலாம்.

ஆனால் இது நம் விவகாரமல்ல. பிள்ளைகளைப் பாடசாலையில் செயலில் ஈடுபடுத்துகிறோம். செயலாக உள்ள எழுத்து, அதாவது வாக்கியம் ஒன்றுதான் குழந்தைக்குப் பொருளுடையது. (பக்கம் 45 பார்க்க.) ஆசிரியர் ஒவ்வொரு குழந்தைக்கும் தடித்த காகிதத்தில் ஒரு புத்தகம் தயாரித்துக் கொடுக்கவேண்டும். டிராயிங் நோட் என்ற நோட்டை வாங்கி இரண்டாக மடித்து உறுதியாகத் தைத்துக் கொண்டால் ஒரு புத்தகமாகிறது. அதன் பக்கங்களில் குழந்தையின் தொழில்பயிற்சி, துப்புரவுப்பயிற்சி, தோட்டவேலை, சமூகப் பயிற்சி, விழாக் கொண்டாட்டம் ஆகியவை பற்றிய ஒவ்வொரு பொருளை (சாமானை) பக்கத்துக்கு ஒரு படமாக எழுதவேண்டும். அழகான படம் தமக்கு எழுத வராவிட்டால் மற்ற ஆசிரியரைக் கொண்டோ கிராமத்திலுள்ள திறமைசாலி ஒருவரைக் கொண்டோ அழகான படங்களை எல்லாப் பிள்ளைகளின் புத்தகங்களிலும் எழுதி வைக்கலாம். படத்துக்கும் எழுத்துக்கும் இந்தியன் இங்கி என்ற கறுப்பு இங்கியும், வேறு பலநிற மையும், வர்ணங்களும் உபயோகிக்கலாம்.

முதல் பக்கத்தில் தக்கிளி படம் எழுதுகிறார் என்று வைத்துக்கொள்வோம். தக்கிளி சம்பந்தமாகப் பையன் செய்கிற செயல்களைச் சிறு சிறு வாக்கியங்களால் முதல் பக்கத்தில் எழுதவேண்டும். (இதற்கு முன்பாக ஆசிரியர் இந்த வாக்கியங்களைப் பிள்ளைகளுக்குப் பலகையில் எழுதிப் பழக்கியிருக்கிறார் என்பது சொல்லாமலே விளங்கும்) ஒரு பக்கத்துக்கு 4–5 வாக்கியங்கள் போதும். உதாரண வாக்கியங்கள் (பக்கம் 47)—1. தக்கிளி எடு, தக்கிளி பிடி, தக்கிளி சுழற்று, தக்கிளி நிறுத்து, தக்கிளி வை. 2. பாய்

எடு, பாய் உதறு, பாய் போடு, பாய் சுருட்டு பாய் விரி. 3. நீர் மொள்ளு, நீர் தெளி, நீர் விடு, நீர் பாய்ச்சு, நீர் ஊற்று, நீர் அடை. பலகையிலும், புத்தகத்திலும் குறிப்பிட்ட ஒரு செயல் சம்பந்தமான பல வாக்கியங்களைச் சிறுவன் படித்துப் பழகுகிறான்.

தக்கிளி எப்படி அவனுக்கு ஒரு படமாயிருக்கிறதோ, அப்படியே தக்கிளி சம்பந்தமான வாக்கியமும் ஒரு படமே. எழுத்துக்களைப் படமாகவே பார்க்கிறான். இப்போது அவனுக்குப் படிக்கத் தெரியாது; வாக்கியங்களும் படமே. வாக்கியம் என்பது அவன் செய்த ஒரு செயலை வாய்மொழியாகத் திருத்தமாகச் சொன்னபிறகு, அதற்குக் கொடுக்கப்பட்டுள்ள ஒரு வடிவம். வாக்கியத்தை அவன் அடிக்கடி பார்க்கிறான். உபாத்தியாயர் சொல்லுகிறார், அவனும் வாயால் சொல்லுகிறான். இவ்விதம் தொடர்ந்த பழக்கத்தினால் படரூபமாயுள்ள வாக்கியத்தின் பொருள் அவன் நினைவிலிருக்கிறது. இந்த நினைவே அவன் மனத்தில் ஒரு வடிவமாகத் தங்கி, பார்க்காமலே எழுதும் பழக்கத்தையும் தருகிறது. அடிக்கடி பார்ப்பதற்கும், ஞாபகப்படுத்திக் கொள்வதற்கும் திருத்தமான வரி வடிவத்தை உணர்த்துவதற்குமே பாடப்புத்தகம் பயன்படும். பொறுமையோடு உபாத்தியாயர் இவ்விதம் ஒவ்வொரு பையனுக்கும் ஒவ்வொரு புத்தகம் தயாரித்துக் கொடுத்தால் முதல் வகுப்பு முதலாண்டின் கடைசியில் வாசிப்பிலும் எழுத்திலும் ஒவ்வொரு பையனும் போதுமான தேர்ச்சி பெறுதல் எளிது.

2. உல்லாசப் பிரயாணம்

கூர்ந்து நோக்கும் பழக்கத்தைக் குழந்தைகளிடம் வளர்க்க இது சிறந்த சாதனம். பிள்ளைகளின் இயல்புக்கேற்ப ஓரிடத்திலேயே அடங்கியிராமல் பல இடங்களுக்கும் நடந்து பார்த்துப் பழகச் சந்தர்ப்பம் அளிக்கிறது. பிள்ளைகளிடம் இது ஊக்கமும் குதூகலமும் உள்ள சூழ்நிலையை வளர்க்கிறது. அவர்கள் சுய முயற்சியால் அறிவைப் பெறும் தூண்டுதல் அடைகிறார்கள். ஆசிரியரிடத்துப் பிள்ளைகளின் அன்பு வளர்கிறது.

கவனித்துக் காண்பதன்மூலம், கவனம், சிந்தனை, சொல் வளம் பெருகுதலாகிய மொழிப்பயிற்சி, இயற்கை பற்றிய அறிவின் பெருக்கம், சுற்றுப்புறத்தின் அமைப்பு, சரித்திரம், ஓரளவு விஞ்ஞானம் ஆகிய அறிவுகளும் பண்புகளும் பெருகுகின்றன. சொல்லால் விவரிக்கும் ஆற்றல் பெருகுகிறது. அனுபவம் விரிவடைகிறது. பிள்ளைகளிடையே கூட்டுறவையும் சகோதர மனப்பான்மையையும் வளர்க்கிறது. மற்றும் திரட்டு ஊக்கம், ஆராய்வூக்கம், போர்ஊக்கம் முதலியவற்றையும் இது திருப்தி செய்கிறது.

வகுப்பில், நேரம், இடம், நோக்கம் பற்றித் திட்டமிட்டு அழைத்துச் செல்லவேண்டும். சமீபத்திலுள்ள இடங்களுக்கு இவ் வகுப்புக் குழந்தைகளை அழைத்துப் போவது நல்லது. மாதம் 3 அல்லது 4 உல்லாசப் பிரயாணங்கள் போய் வரக்கூடும். கீழ்க்கண்ட இடங்களுக்கு அழைத்துப் போகலாம்:

1. ஆறு, ஏரி, குளம், கடல், குன்று, மலை, தோப்பு, நந்தவனம், அணை முதலிய இயற்கை யமைப்பு இடங்கள்.

2. தபாலாபீசு, ரயில்வே ஸ்டேஷன், கச்சேரி, சந்தை முதலிய இடங்கள்.

3. சூளைகள் (காளவாய்), வீடு கட்டுமிடம், தொழில் நடக்கும் இடங்கள், விவசாய வேலை நடக்கு மிடங்கள்.

பிள்ளைகள் கூர்ந்து கவனித்துக் கேள்விகேட்கும் பழக்கத்தைத் தூண்டிவிட வேண்டும். தாவர வாழ்க்கையும் பிராணி வாழ்க்கையும் அறிந்துகொள்ளச் செய்யவேண்டும். வெளியூரிலிருந்து வருவோரின் வாழ்க்கை முறையையும் அறிந்துகொள்ளச் செய்யலாம். ஆசிரியர் பிள்ளைகளுடன் மிகவும் நேசமுறையில் பழகவேண்டும். சகோதர பாவத்துடன் இந்த நேரத்தில் பழகுவது அவசியம். பல நல்ல சமூகப் பயிற்சிகளை இந்தச் சந்தர்ப்பங்களில் பயிற்றுவிக்கலாம். பொருட்காட்சிக்கு வேண்டிய பொருள்களைச் சேகரிக்கச் செய்யலாம்.

உல்லாசப் பிரயாணத்துக்குத் திட்டமிடும்போது பின் வரும் அம்சங்களை ஞாபகத்தில் இருத்தல்வேண்டும். பிர யாணத்துக்குக் குறிப்பிடுமிடம் பிள்ளைகளுக்குக் கவர்ச்சி உண்டாக்கவேண்டும். ஒவ்வொருதிட்டத்திலும் தனிப்படை யான கல்விநோக்கம் காணப்படல் வேண்டும். பிரயாணத் தில் கூடுமானவரை கல்வி, உல்லாசம் அல்லது விளையாட்டு, ஆராய்ச்சி ஆகிய அம்சங்களைக் கலந்துகொள்ளவேண்டும்.

பிரயாணத்தின் காலம், குழந்தைகளின் தகுதி, பருவ காலம், வசதி ஆகியவற்றைப் பொறுத்திருக்கும். உதாரண மாக,சிலமணிநேரத்தில் போய்த்திரும்பக்கூடிய பிரயாணம், காலையில் போய் மத்தியானம் தங்கி உணவருந்தி மாலையில் திரும்பும் பிரயாணம், இரவு தங்கி வருகிற பிரயாணம் என்று இதைப் பிரித்துக்கூறலாம். இரண்டாவது, மூன்ரு வது வகைகளுக்கு உணவு, படுக்கை ஏற்பாடுகள் தேவை. எனினும், முதல்வகுப்புக் குழந்தைகளுக்குப் பொதுவாக மூன்ருவது வகை பொருந்தாது. அன்றியும் ஆசிரியர் எத் தனை பிள்ளைகள் தம்மால் நிர்வகிக்க முடியுமோ அந்த அள வோடு நிறுத்திக்கொள்வது நியாயம்.

பார்க்கவேண்டிய இடங்களில் நிர்வாகியின் அனு மதியை முன்னதாகப் பெறவேண்டும். பெற்ளுேர் அனுமதி யையும் பெறவேண்டும்.

புறப்படும்முன் சிறுகுழுக்களாகப் பிரித்து குழுவுக்குத் தலைவரைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொரு குழுவுக்கும் தலைவ ருக்கும் திட்டமான ஒரு பொறுப்பை அளிக்கவேண்டும்.

காண்பதையும், ஆராய்வதையும் நன்ருய் ஞாபகத்தில் இருத்தவேண்டும். (மேல் வகுப்புப் பிள்ளைகளானல் இதைக் குறித்துவைக்கச் சொல்லலாம்) திரும்பி வந்தபின், பொதுச் சபையில், பார்த்தவற்றைப்பற்றி விவாதம் நடத்தவேண்டும்.

3. பொருட் காட்சி

உல்லாசப் பிரயாணம் போய் வரும்போதும் மற்றும் பல சமயங்களிலும், கிடைக்கும் பொருள்களைப் பள்ளிக்

கூடத்தில் சேகரிக்கலாம். பள்ளிக்கூடப் பொருட்காட்சிக்கு இந்த வகுப்புப் பிள்ளைகளும் பங்கு கொள்ளலாம். பல அரிய பொருள்களைச் சேகரிப்பதில் ஆசிரியர் வழி காட்ட வேண்டும்.

பலவகைத் தாவரப்பொருள்கள், அபூர்வமான இயற்கைப் பொருள்கள், பலவகை மண், கற்கள், தபால் தலைகள், இயற்கைக் காட்சிப்படங்கள், சிற்பவேலைகள், சித்திரங்கள் முதலியவை சேகரிக்கத் தூண்டலாம். இதனால் பிள்ளைகளிடம் பொருள்களை நேரில் பார்த்து, தொட்டு, கண்டு, கேட்டு அறிந்து கற்கமுடிகிறது. நல்ல முறையில் அறிவைப்பெற இது போதனைக் கருவி. பொருள்களைச் சேகரிக்கும் இயல்பைப் பிள்ளைகளிடம் வளர்க்கிறது. பொருள்களிடம் மதிப்பு, பொருள்களை ஒழுங்காக அடுக்கி வைக்க வேண்டுமென்ற எண்ணம், கலையுணர்ச்சி ஆகிய பண்புகளை வளர்க்கிறது.

4. கிராம சேவை

கிராமத்தின் துப்புரவுக்கு நம் பள்ளிக்கூடம் பெரும் பொறுப்பு வகிக்கிறது. பிள்ளைகளை ஊரிலுள்ள தெருவரிசையாக, குழுக்கள் பிரித்துக்கொள்ள வேண்டும். பள்ளிக்கூடமில்லாத நேரங்களில் அவர்களைத் தாங்களே துப்புரவுவேலை செய்யும்படியும் தூண்டலாம். ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்து அதை ஒரு பஞ்சாயத்தாக அமைக்கலாம். அந்தப் பஞ்சாயத்து வேலை முறை பற்றிப் பள்ளிக்கூடத்தில் அறிக்கை சொல்லச் செய்யலாம். இப்படி அமைக்கப்படும் குழுக்களில், முதல் வகுப்புப் பிள்ளைகளை குப்பை போடாதிருத்தல், சாணம் குப்பையைப் பொறுக்குதல் போன்ற வேலைகள் செய்விக்கலாம்.

ஊரில் நடைபெறும் திருவிழாக்களில், பள்ளிக்கூடம் நல்ல சேவை செய்யமுடியும். திருவிழாவில், அலங்காரம் செய்தல், தோரணம் கட்டுதல், கோவில் சுற்றுப் புறத்தைப் புல் செதுக்கித் துப்புரவாக்குதல், தண்ணீர் தெளித்தல், கோலமிடுதல்போன்ற வேலைகள் செய்யலாம். முதல்

வகுப்புப் பிள்ளைகள் இந்த வேலைகளிலெல்லாம் கலந்து கொள்ளும்படி செய்தல் வேண்டும்.

ஊரில் பலவிதமான கேளிக்கைகள் பல சந்தர்ப்பங்களில் நடைபெறுகின்றன. அவைகளில் எல்லாம் பள்ளிக்கூடம் கலந்துகொள்ள வேண்டும்.

1. பிரார்த்தனை நடத்துதல்
2. பஜனைகளில் கலந்துகொள்ளுதல்
3. திருவிழாச் சமயங்களிலும் மற்றும் முக்கிய நாட்களிலும், கோலாட்டம் கும்மியடித்தல்
4. சிறு நாடகங்கள் நடித்தல், நாடகங்களில் கலந்து கொள்ளுதல்

ஆகிய இவைகளிலெல்லாம் முதல் வகுப்புப் பிள்ளைகளைத் தயார் செய்ய வேண்டும்.

### 5 நூற்புக் கருவிகள் – சில யோசனைகள்

அட்டை : ஒவ்வொரு பிள்ளைக்கும் தனித்தனியாக இருக்கவேண்டும். அட்டையின் ஓரங்களைப் பழுப்புக் காகிதம் மடித்து ஒட்டி மூலை ஒடியாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு பிள்ளையின் பெயரையும் தனிச் சீட்டில் எழுதி ஒட்டி வைக்கவேண்டும்.

பட்டை : பட்டைகளைக் காற்றுப்புகாமல் சுருட்டி வைக்க 9" அகலமும் 12 அல்லது 15 அங்குல நீளமுமுள்ள துணி எடுத்து அதன் இருபக்கங்களிலும் இரண்டு கெட்டிக் காகிதங்களை ஒட்டி வைத்துப் பட்டை சுருட்ட உபயோகித்துக் கொள்ளலாம். பட்டைகள் காற்றில் கெடாமல் இருக்க இது நல்ல ஏற்பாடு.

சாம்பல் : நல்ல முறையான பயிற்சிக்குச் சாம்பல் அவசியம். வேகத்துக்கும் திருத்தமாக நூற்பதற்கும் ஏற்றது. மண் கலவாத வெள்ளைநிறச் சாம்பல் இதற்கெனத் தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும். பசுஞ் சாணம், வேலம் பட்டை இவற்றிலிருந்து தயாரிப்பது நல்லது. துப்புரவு உணர்ச்சியுடன் சாம்பலை உபயோகிக்கச் செய்ய

வேண்டும். சாம்பலைச் சிறு டப்பிகளில் அல்லது பைகளில் வைத்துக்கொள்ள ஏற்பாடு வேண்டும்.

வீசனம் : வீசனங்களைக் கீழே வைப்பதனால் அவற்றிலுள்ள நூல் கெட்டு விடுகிறது. ஒவ்வொரு பிள்ளைக்கும் தனித்தனி வீசனம். அதைச் சுவரில் மாட்டி வைப்பது நல்ல ஏற்பாடு. நீளமான ஒரு மரச் சட்டத்தில் வீசனம் மாட்ட இடைவெளி விட்டு ஆணி அடித்துப் பக்கத்துச் சுவரில் சட்டத்தைத் தொங்கவிட வேண்டும். வீசனங்களில் தலைப்புறம் ஆணி நுழையும் அளவு துவாரம் செய்து மாட்டி வைத்துக் கொள்ளலாம்; கயிறு கட்டித் தொங்க விடுவது அவ்வளவு அழகாயிராது. வீசனங்களின் அடியில் பெயர் எழுதிய சீட்டை ஒட்ட வேண்டும்.

மூங்கில் வில் : ஒரு குழந்தைக்கு ஒன்று இருப்பது நல்லது.

# 14. அனுபந்தம்

## 1 பதிவேடுகள்

இவ்வகுப்புக்குரிய பிரத்தியேகமான பதிவேடுகள் மட்டும் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

### (அ) பொது

1. ஆஜர் பதிவேடு
2. ரிகார்டு ஷீட்
3. வகுப்புச் சாமான்கள் கணக்கு

### (ஆ) தொழில்—நூற்றல்

1. கருவிகள் இருப்புப் புத்தகம்
2. மூலப்பொருள் வரவு செலவுப் புத்தகம்

இதில் பருத்தி, பஞ்சு, பட்டை ஆகிய வரவினங்களுக்குத் தனித்தனிக் கணக்கும், சிட்டம், விதை ஆகிய உற்பத்திப் பொருள்களுக்குத் தனித்தனிக் கணக்கும் இருக்க வேண்டும்.

3. நூற்பு :

(அ) பருத்தி சுத்தக் கணக்கு
(ஆ) பருத்தி அரைத்தல் கணக்கு
(இ) பட்டை போட்ட கணக்கு
(ஈ) நூற்றல் கணக்கு
(உ) மொத்தத் தொழில் கணக்கு

இக்கணக்குக்கள் வகுப்பு முழுமையிலும் தினசரி நடக்கிற தொழிலைப்பற்றி மொத்தக் கணக்காயிருக்கும்.

4. (அ) வேள்வி நூற்புக் கணக்கு

(ஆ) வகுப்பு நூற்புக் கணக்கு

இவை தினசரி பிள்ளைவாரியாக நடைபெறுகிற நூற்புக் கணக்காக இருக்கும்.

5. தொழில் வரவு செலவுக் கணக்கு

இது நூற்புத்தொழிலில் உள்ள லாபநஷ்டம் அல்லது நிகர வருமானத்தைக் காட்டும் கணக்கு

(இ) விவசாயம்

1. தினசரி வேலையின் பதிவேடு
2. பயிர் சம்பந்தமான தினக் குறிப்பு.

குறிப்பு : இந்தத் தினக் குறிப்பின் மூலம்தான் பிள்ளைகள் ஒவ்வொரு செடி கொடியின் வாழ்க்கையையும் விஞ்ஞான ரீதியாக அறிந்து கொள்வார்கள். உதாரணமாய், கொத்தவரை சாகுபடி யென்றால், நிலத்தைக் கொத்தி எருவிட்ட தேதி, விதை ஊன்றிய தேதி, முளைத்த தேதி, பூத்த தேதி, காய் ஆய்ந்த தேதி, நெற்று எடுத்து வைத்த தேதி, இடையில் கிளை ஆய்ந்த தேதி, கடைசியில் செடி காய்ந்து பிடுங்கின தேதி ஆகிய தேதிகளைக் குறித்து வைக்க வேண்டும். வாரந் தோறும் செடியின் வளர்ச்சி, ஒரு செடிக்கும் மற்றொரு செடிக்கும் உள்ள தூரம், எருவிட்ட தினங்கள், நீர் பாய்ச்சிய தினங்கள், மழை பெய்த தினங்கள், ஒவ்வொரு தடவையும் பறித்த காயின் எடை, பாத்தி விவரம், மொத்தச் செடி விவரம், காற்று அடித்தால் சேத

விவரம், கொம்பு வைத்துக் கட்டியிருந்தால் அதன் விவரம், செடியின் உயரம், அகலம், நோய் கண்டிருந்தால் அதன் விவரம், ஆயுள் முதலிய எல்லா விவரங்களும் அதில் குறிக்கவேண்டும்.

ஒவ்வொரு பயிருக்கும் இது தனித்தனியாக இருக்க வேண்டும். பயிரின் வாழ்க்கை முழுமையும் பிள்ளைகளுக்குப் போதிக்கவும் அவர்கள் நேரில் கண்டறியவும், இது உதவுவதோடு, பிந்திய வருஷச் சாகுபடிக்கும் இது வழி காட்டியாக இருக்கும்.

3. தோட்ட வேலை பற்றிய வரவு செலவுக் கணக்கு.

(ஈ) துப்புரவு—ஆரோக்கியம்

1. உடல் வளர்ச்சிப் பதிவேடு. ஒவ்வொரு பிள்ளைக்கும் பின் வரும் விவரங்களைக் குறிக்கவேண்டும். எண், பெயர், ஆண்டுத் தொடக்கத்தில் வயது (வருஷம்—மாதம்) ஆறுமாதத்துக்கு ஒருமுறை மார்புச் சுற்றளவு, உயரம், மாதந்தோறும் எடை.

2. மாதவாரி நோய்கள் பதிவேடு.

3. துப்புரவு ஆரோக்கிய உபகரணங்கள் பதிவேடு

(உ) விழாக்கள் முதலியவை

1. விழாக்களின் மாதவாரி அட்டவணை.

2. விழாக் கொண்டாட்டக் குறிப்பு.

இது அவ்வப்போது நடைபெறுகிற விசேஷ நிகழ்ச்சிகளின் முறையான பதிவேடாக இருக்கும்.

3. இந்நிகழ்ச்சிகளுக்குரிய விவரமான பாட போதனைத் திட்டம்.

4. விசேஷ சந்தர்ப்ப போதனைபற்றிய குறிப்பு. இதில் ஒவ்வொரு போதனைக்கும் பின்வரும் விவரங்கள் இருக்க வேண்டும் : தேதி, ஏற்பட்ட விசேஷ சந்தர்ப்பம், அதனோடு இயைபுபடுத்திக் கற்பித்த கல்விபோதனை.

## II உபகரணங்கள்

### 1. பொது

கரும்பலகை: சுவர் முழுமையும் தரைமட்டத்திலிருந்து ஓர் அடிக்குமேல் மூன்று அடி வரையில் எங்கும் கரும்பலகைபோல் கருஞ் சாந்து பூசி வைக்கவேண்டும். பிள்ளைகளின் எழுத்துப் பயிற்சிக்கும், சித்திரப் பயிற்சிக்கும், இது மிகவும் இன்றியமையாத சாதனம்.

சாக்கட்டி, துடைக்கும் துணி, தடுக்குகள், சாய்வு மேஜை, கடிகாரம்.

### 2. நூற்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தக்கிளி | 66 ரூ. | 20-10 | தராசு | 1. ரூ. | 15-0 |
| வீசனம் | 32 ,, | 12- 0 | பருத்தித் | | |
| அட்டை | 32 ,, | 8- 0 | தட்டு | 25 ,, | 6-4 |
| பலகை மணை | | | பருத்தி 100 | | |
| கம்பி | 15 ,, | 22- 8 | ராத்தல் | ,, | 56-4 |
| கைமணை | 3 ,, | 21- 0 | கோட்டம் எடுக் | | |
| மூங்கில் வில் | 20 ,, | 5- 0 | கும் கருவி | 1 ,, | 5-0 |
| பட்டைப் | | | பேனாக்கத்தி | 1 ,, | 2-0 |
| பலகை | 10 ,, | 15- 0 | கத்தரிக்கோல் | 1 ,, | 4-8 |
| தக்கிளி நிலை | 7 ,, | 10- 8 | சுத்தி | 1 ,, | 4-0 |
| சரிகைநிலை | 3 ,, | 6- 0 | குறடு | 1 ,, | 7-8 |

### 3. விவசாயம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| களைக்கொட்டு | 10 | ரூ.20-0 | அரிவாள் (வெட் | | |
| மண்வெட்டி | 2 | ,, 10-0 | டுக்கத்தி) | 1 | ரூ. 3-0 |
| கடப்பாரை | 1 | ,, 6-0 | வாளி | 10 | ,, 20-0 |

| | | | |
|---|---|---|---|
| பூவாளி | 2 ,, 10-0 | தட்டு, கூடை | 10 ,, 10-0 |
| | | ஆக கூடுதல் | 300- 2 |

சுமார் முந்நூறு ரூபாய்

குறிப்பு : ஆதாரக் கல்வி பயின்ற ஆசிரியர் ஒருவர் வகுப்பு உபயோகத்துக்கு நூற்றல், விவசாயக் கருவிகள் மேற்கண்டவாறு பிள்ளைகள் எண்ணிக்கையை யொட்டி, சுமார் 300 ரூபாய்க்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

### 4. துப்புரவு—ஆரோக்கியக் கருவிகள்

| | | | |
|---|---|---|---|
| துடைப்பம் | 4 | பெருக்குமாறு | 2 |
| கூடைகள் | 4 | (விவசாயக் கூடையேபோதும்) | |
| கண்ணுடி | 1 | மரச்சீப்புகள் | 20 |
| எண்ணெய்ச்சீசா | 1 | பொட்டுக்குச் சாந்து. | |

முதலுதவிக்கான மருந்துகள் : சில நாட்டு மருந்துகள், சவுக்காரம், அரைப்புத்தூள் முதலியன.

### 5. போதனைக் கருவிகள்

1. பூகோள உருண்டை

2. தாலுக்கா, ஜில்லா, ராஜ்ய, தேச உலகப்படங்கள். (இவற்றை ஆசிரியர் தாமே சுருங்கிய முறையில் தயாரித்து முக்கிய விவரங்களைக் குறித்து வைத்துக்கொள்ளல் அவசியம்.)

3. வாக்கியம் எழுதிய அட்டைகள்—தேவைக்கேற்றபடி ஆசிரியர் தாமே தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

### 6. விளையாட்டுக் கருவிகள்

1 கோலிகள்
2. துணிப்பந்து, நூல்பந்து
3. ஊஞ்சல்
4. சறுக்கு மரம்
5. ஏற்றமரம்
6. தாண்டுகயிறு
7. கோலாட்டக் கழி
8, பம்பரம்

இடவசதி : வகுப்பறை 480 சதுர அடி கொண்டதாக இருக்கவேண்டும். 24' × 20' பரப்பளவு உடையதாக இருக்கவேண்டும் என்பது சர்க்கார் திட்டம். அதற்குப் பொருத்தமான உயரம், காற்றோட்டம், வெளிச்சத்துக்கான ஜன்னல்கள் வேண்டும். பஞ்சடிக்கும் அறை தனியே. சுவரில் அலமாரி இருந்தால் சாமான்கள் வைக்க உதவும். எலியும் கறையானும் புகாமல் இருக்கவேண்டும்.

தோட்டவேலைக்குப் போதுமான நிலவசதியும் கிணறு போன்ற தக்க நீர் வசதியும் வேண்டும். ஆதாரப் பாடசாலை ஒன்றுக்கு நான்கு ஏகரா நிலம் தோட்டத்துக்காக வேண்டுமென்பது சர்க்கார் அபிப்பிராயம். குறைந்தபட்சம் ஓர் ஏகராவாவது இருப்பது இன்றியமையாதது.

## III பிற்குறிப்பு

(1) பக்கம் 117—118 இல் செயல்களைக் காணலாம். இச்செயல்களில் நூற்றல் தொழில், தோட்டவேலை சம்பந்தப்பட்டவை 64 ஆம் பக்கத்தில் காட்டிய கால அட்டவணையில் உரிய நேரங்களில் நிறைவேற்றலாம். ஆனால் துப்புரவு, ஆரோக்கியம், விழாக் கொண்டாட்டம் முதலான செயல்களைச் செய்ய, கால அட்டவணையில் தனியான நேரம் குறிப்பிடவில்லை. நேரத்தைப் பொறுத்தவரையில் இவற்றையும் ஆதாரத் தொழிலான நூற்றலையும் சேர்த்துக் கால அட்டவணையில் அமைப்பது எப்படி என்பது கேள்வி. குறிப்பாக இங்குஒன்று சொல்லலாம். ஆயுத பூஜை, ஆண்டு விழா, விநாயகசதுர்த்தி முதலான பெருவிழாக்கள் நடத்தும்போது நாள் முழுமையும் ஈடுபடுத்த வேண்டியிருக்கும். அப்போது பிற்பகல் நூல் வேள்வி நேரம்போக, மற்ற நூற்புத் தொழிலை நிறுத்திக்கொள்ளலாம். துப்புரவுச் செயல்களை நடத்தும்போது காலை நூற்றல் தொழிலைச் சிறிது குறைப்பது அல்லது தள்ளி வைத்துக்கொள்வது அவசியமாயிருக்கலாம் (70ஆம் பக்கத்தில் உள்ள குறிப்பையும் பார்க்க).

கால அட்டவணை (பக்கம் 64) : வாரத்துக்குரிய விசேஷச் செயலை, திங்கட்கிழமை யன்று காலை 9-30 முதல் 10-30 வரை நூற்றல் தொழிலுக்குப் பதிலாக நடத்தலாம், கால அட்டவணையிலும் அப்படியே குறிப்பிடலாம்.

(2) நூற்புத் தேர்ச்சி : இதன் விவரம் 35 - 36 பக்கங்களில் காணலாம். முதல் வகுப்பில், ஆதாரக் கல்விப்பயிற்சி பெற்ற ஆசிரியர் நடத்தும்போது, ஒரு சிறுவன் நூற்றல் தொழில்மூலம் மாதத்தில் குறைந்தபட்சம் ஓரணா வருவாய் சம்பாதிக்கவேண்டும் என்பது அரசாங்க உத்தரவு. அதாவது, ஓர் ஆசிரியர் இந்த வகுப்பின்மூலம் இப்போதைக்கு ரூ 1–4–0 முதல் ரூ. 1–9–0 வரை வருவாய் தேடவேண்டும்.




## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 47 | 17 | நூள் | நூல் |
| 70 | 34 | தெழிலும் | தொழிலும் |
| 79 | 1 | பயிற்சி | நூற்றல் |
| 88 | 14 | பயிறு | பயறு |

# ஆதாரக்கல்விக்கு வேண்டிய புத்தகங்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| ஆதாரக்கல்வி என்றால் என்ன ? | .... | 1 | 0 |
| பாடத்திட்டச் சுருக்கம் | .... | 0 | 2 |
| முதல் வகுப்பு ஆசிரியர் | .... | 1 | 8 |
| சிறுவர்க்கான பாடல் | .... | 0 | 6 |
| வாழ்வைக்கான கல்வி | .... | 0 | 7 |
| இன்றைய பேச்சு-ஆதாரக்கல்வி (ஆசாரிய கிருபலானி) | | 2 | 0 |
| நமக்கேற்ற உணவு (டாக்டர் குருபாதம்) | .... | 0 | 10 |
| அழிவற்ற வாழ்வு (குமரப்பா) | .... | 2 | 8 |
| கிராம நிர்மாணத் திட்டம் (குமரப்பா) | .... | 0 | 8 |
| நிர்மாணத் திட்டம் (மகாத்மா காந்தி, ராஜன்பாபு) | .... | 0 | 14 |
| பூரண சுதேசி (மகாத்மா காந்தி) | .... | 1 | 0 |
| ஆசிரம வாழ்க்கை ,, | .... | 1 | 4 |
| ராட்டை - தத்துவ விளக்கம் ,, | .... | 1 | 4 |
| சர்வோதயம் ,, | .... | 0 | 6 |
| சுயராஜ்ய சாஸ்திரம் (வினோபா பாவே) | .... | 2 | 0 |
| ஆதாரத் தொழில் - நூற்றல் ,, | .... | 1 | 0 |
| காய்கறித் தோட்டம் | .... | 5 | 8 |
| வாழைத் தோட்டம் | .... | 1 | 1[illegible] |
| பழத் தோட்டம் | .... | 10 | [illegible] |
| காந்திய நவநீதம் (மஷ்ருவாலா) | .... | 2 | 0 |
| ராட்டைப் புரட்சி | .... | 0 | 6 |
| தக்கிளியால் நூற்பதெப்படி | .... | 0 | 8 |
| பட்டை போடச் சுலபவழி | .... | 0 | 6 |
| நூற்புக் கணிதம்—1 | ... | 0 | 6 |
| ,, 2 | .... | 0 | 12 |
| ,, 3 | .... | 0 | 14 |
| ,, 4 | .... | 1 | 0 |
| நூற்புக் கலையின் நுணுக்கங்கள் | .... | 1 | 0 |
| கிஸான், பெட்டி, ஈரிழை ராட்டை | .... | 1 | 4 |
| கைராட்டை - அதன் சரித்திரமும் புத்துயிரும் | .... | 1 | 8 |
| மலஜல சுத்தி | .... | 0 | 8 |
| துப்புரவு விஞ்ஞானம் | .... | 0 | 12 |
| சுயம்பூரண கிராமம் | .... | 0 | 6 |

**காந்தி வித்தியாலயம்**

திருச்சிற்றம்பலம் – மாத்துறை தபால்

குத்தாலம் வழி, தஞ்சை ஜில்லா